# ஸ்ரீ ராமாநுஜன் 246, 247.



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ : P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 21 | ஸௌம்யஹு ஆனி, ஆடிமீ 1969 ஜூன், ஜுலை. | ஸஞ்சிகை 6, 7 |
|---|---|---|


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

## 16. திருவிண்ணகர்—[illegible]ப்பிலியப்பன் ஸந்நிதி.

கையு முரையுங் கரு[illegible]ந்துமுனக் கேயடிமை
செய்யும் படிநீ திருத்[illegible]ய்—ஐயா
திருவிண் ணகரா[illegible]ந்தையிலு மெண்ணேன்
பெருவிண்ணகரா[illegible]பறு.

| | | | |
|---|---|---|---|
| ஐயா திருவிண் ணகர் ஆளா | திருவிண்ணகரை யாளு[illegible] ஐயனே ! | நீ திருத்தினாய் | —நீ பரிஷ்கரித்தருளினாய்; (ஆதலால் இனி நான்) |
| கையும் உரையும் கருத்தும் | கைகளும்வாக்கும் எண்[illegible]மாகிய முக்கரணங்க[illegible] | பெரு விண் நகர் ஆளும் பேறு | தேவலோகத்தை யாளும் பேற்றினையும் |
| உனக்கே அடிமை செய்யும்படி | உனக்கே தொண்டு பூ[illegible] டொழுகும்படியாக | சிந்தையிலும் எண்ணேன் | நெஞ்சாலும் நினையேன். |

"** பெருவிண்ணகாரன பரமபதம் திருவிண்ணகரென்னும் திருநாமம் பூண்டு இந் நிலவுலகில் காட்சிதாராநிற்க, அங்கே போக விருப்பமுடையேனல்லேன் என்பது உள்ளுறை. * இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன் * வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ: * இத்யர்திகளை இங்கு நினைப்பது. இத் தலம் புராணரீதியில் உப்பிலியப்பன் ஸந்நிதியென்று வழங்கப்பட்டாலும் * தன்னொப்பாரில்லப்பன் * ஒருவரையும் நின்னொப்பாரொப்பிலா வென்னப்பா * என்கிற பராங்குச பரகால திவ்யஸூக்திகளின்படி ஒப்பிலியப்பன்' என்பது பொருத்தமானது. .... ... ...

# ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வத்தையும் ஸ்ரீ வைஷ்ணவ சிந்தாமணியையும் பற்றி.

ஸ்ரீ ராமாநுஜன் 244-வது ஸஞ்சிகை ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வமென்னும் பெயர்கொண்டு பங்குனி விசாக மலராக வெளிவந்ததென்பது நேயர்களுக்கு நினைவிருக்கும். அந்த மலரைப்பற்றி இண்டியன் எக்ஸ்பிரஸ் முதலான ஆங்கில பத்திரிகைகளிலும், தினமணி முதலான தமிழ்ப் பத்திரிகைகளிலும் மதிப்புரை விசேஷமாக வெளிவந்திருந்ததனால் அதைப் படித்த பலரும் அம்மலரை வாசிக்க விரும்பி அனுப்புமாறு அபேக்ஷித்தார்கள். அனுப்பிக்கொண்டே வந்தோம். அம் மலர்ப்புத்தகங்களெல்லாம் நிச்சேஷமாகச் செலவாகிவிட்டன. உண்மையில் ஒன்றிரண்டு புத்தகங்களுக்குமேல் இருப்பில்லை. இதற்கு ஆர்டர்கள் நாள்தோறும் வந்துகொண்டிருக்கின்றன. என்ன செய்வோம்? ஒரு பிரதிகூட இல்லையென்பதை இதனால் தெரிவித்துக்கொள்ளவேண்டியதாகிறது. ஏற்கெனவே தெரிவித்திருந்தபடி இப்போது வெளியிடத் தொடங்கப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவ சிந்தாமணியை அவரவர்கள் காலத்தில்தருவித்துக்கொள்வது நலம். இந்த சிந்தாமணியை ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வம்போல் ஒரே புத்தகமாக வெளியிட விருப்பமில்லை. சில மாதங்கள் வரையில் தொடர்ந்து வெளியிட விருப்பம். 70, 80 பக்கங்கள் கொண்ட ஸஞ்சிகையை இரண்டு மாதங்களுக் கொருமுறை வெளியிட்டுவந்து ஐப்பசி, கார்த்திகையில் முடிக்க[illegible]மென்று உத்தேசம். அதுவரையில் ஸஞ்சிகைகளைச் சேமித்து வைத்திருந்து [illegible]டிந்தபிறகு, ஒன்றுசேர்த்து பயிண்டு செய்வித்துக்கொள்வது.

இந்த சிந்தாமணியில், வர்த்தம[illegible]ளும் வைகுண்டவாஸிகளுமான பெரியார்களின் திருவுருவப்படங்களை வெ[illegible]டுவர ஆவல்கொண்டிருக்கிறோமென்பதை இந்த ஸஞ்சிகை கொண்டே ய[illegible]ம், நமது ஸுஹ்ருத்துக்கள் தாங்களறிந்த சில பெரியார்களைப்பற்றி இதி[illegible] வெளியிட விரும்பித் தெரிவித்தால் ஔசித்யாநுஸாரமாக ஏற்றுக்கொள்[illegible] திருவுருவப்படங்களையும் ப்ளாக்குகளையும் அவரவர்களே சொந்தச் செ[illegible]ல் சேகரித்துத் தரவேணுமென்பது ப்ரார்த்தனை ... ... ... ... ...

# சிந்தாமணியைப்பற்றி மற்றொரு விஜ்ஞாபனம்.

லோகாபிராமமான விஷயங்களையே யெழுதவேணும், அனைவரும் உகந்து வாசிக்கும் கட்டுரைகளாகவே அமையவேணும் என்பதுதான் அடியேனுடைய ஆசை. பெரும்பாலும் அப்படியேதான் அமைந்துவரும். சில கட்டுரைகள் பிறருடைய வியாஸங்களை மறுக்கும் வகையில் அமைந்தாலும் "அவற்றால் பல அபூர்வ தத்துவங்களை அறியப் பெறுகிறோம்" என்று பலபல ஆப்தர்கள் உகந்தே தெரிவித்து வருவதனால், விவாதங்களில் பிரவேசமற்ற தடஸ்தர்கள் மகிழ்ந்தேயிருக்க ப்ராப்தம். நாமெழுதும் எந்த மறுப்பும் அபேத்யமாகவே இருக்குமென்பது இன்றளவும் கைகண்ட உறுதி. ... ... ... ...

## ஸ்ரீ வைஷ்ணவசிந்தாமணி முதற்பகுதியின் விஷயஸூசிகை.


| | பக்கம் |
|---|---|
| 1. ஸ்ரீ காஞ்சி ஹஸ்திகிரி மாஹாத்மியம் | 2 |
| 2. ஸ்ரீ ஆசார்யஹ்ருதய சூர்ணையொன்றின் விவரணம் | 10 |
| 3. புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு | 19 |
| 4. விதுரரைப்பற்றின வோர் விலக்ஷண விமர்சம் | 21 |
| 5. முமுக்ஷுப்படியில் தசரதரைப் பற்றி | 22 |
| 6. பரமைகாந்திகளின்போது போக்கு | 25 |
| 7. பகவத்ராமாநுஜ சரித்திரத்தில் ஒருவிமர்சம் | 26 |
| 8. ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னம் | 28 |
| 9. கஜேந்திராழ்வான் கதையிலுள்ள ஒருமருமம் | 32 |
| 10. ஸ்ரீ வசனபூஷணார்த்த விசேஷ நிர்ணயம் | 33 |
| 11. திருவல்லிக்கேணி கண்ணாடி முத்துப் பல்லக்கு | 38 |
| 12. வம்பவிழ்கோதையும் நம்மவர் மேதையும் | 41 |
| 13. மறைகளின் மறைவும் துறைகளின் தவறும் | 48 |
| 14. பேசுவதெல்லாம் பேச்சல்ல, எழுதுவதெல்லாம் எழுத்தல்ல | 56 |
| 15. ஸதைதிஹ்யரஸாயனம் | 57 |
| 16. ஷை இரண்டாம் பகுதி | 68 |
| 17. சங்கரஷண்மத கான்பரென்ஸ் | 81 |
| 18. தேவப்பெருமாள் வைசாகோத்ஸவம் | 90 |


## —இம்மலரில் [illegible]ங்கும் திருவுருவப்படங்கள்—


1. ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீமந்[illegible]ராயண ராமாநுஜ ஜீ[illegible]வாமி
2. யோகி பார்த்தஸாரதிஸ்[illegible]மி தம்பதிகள்
3. ஆடூர். ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமி
4. திருமணி அப்பன்ஸ்வாமி
5. சேனங்குளம் வரதாசார்ய ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டி
6. V. ராஜகோபாலாசாரியர் M. L.
7. V. N. வெங்கடவரதாசாரியர் B.A., B.L.,
8. ஆஸூரி ஸ்ரீநிவாஸாசாரியர்
9. R. வரதராஜய்யங்கார் ஸ்வாமி
10. தேவப்பெருமாள் வைசாகோத்ஸவ கோஷ்டி
11. ஸ்ரீ ஸூக்திரத்நாகர சடகோபாசாரியர் ஸ்வாமி
12. திருநாங்கூர் ஸ்வாமியும் சதாபிஷேக ஸ்வாமியும்.



தேவப்பெருமாள் வைசாகோத்ஸவம் ஆறுந்திருநாள் காலை ஸன்னிதி வீதியில் இயல்கோஷ்டி 2—6—1969.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

    

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

## ஸௌம்யஸு வைகாசி மஹோத்ஸவ மலர்

# ஸ்ரீ வைஷ்ணவ சிந்தாமணி

**ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்**

அடியேன் செய்யும் விண்ணப்பம்

கீலகஸு பங்குனி விசாக மலராக ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வமென்னும் புத்தகத்தை வெளியிட்டபோது "இந்த வெளியீட்டில் நாம் உத்தேசித்த விஷயங்களெல்லாம் [illegible]வெளிவரவில்லை யாதலால் ஸ்ரீ வைஷ்ணவ [illegible]மணி யென்கிற மற்றொரு மலர் நம் [illegible]ப்பெருமாளுடைய வைகாசி யுத்ஸவத் [illegible] நினைவு மலராக வெளிவரும்" என்று பிர[illegible] செய்திருந்தோம். அந்த ப்ரதிஜ்ஞையை [illegible]றைவேற்றுகின்றோ மிப்புத்தகத்தினால். சித்திரைமீ 18உ 30—4—69 ஹஸ்த நக்ஷத்திரத்தன்று இம்மலர் எழுதத் தொடங்கினோம். அன்று தேவப் பெருமாளுடைய திருவவதார நன்னாள் என்பது ப்ரஸித்தம். புராண ரீதியில் சித்திரை மாதம் புனர்வஸுவில் ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமானுடைய திருவவதாரமென்றும், அடுத்த ஹஸ்தத்தில் தேவப்பெருமாளுடைய திருவவதாரமென்றும் வழங்கும். ஆகவே



தேவப் பெருமாளுடைய பிரபாவத்தை ஹஸ்திகிரி மாஹாத்ம்ய மென்னும் புராண நூலைத் தழுவி முந்துற முன்னம் பிரசுரிக்கிறோமிங்கு. ....

# ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்மியம்

## [ பிரமன் ஆகாசவாணியைச் செவியுறுதல் ]

முன்பு, நான்முகக் கடவுள் திருமாலைக் காணவேண்டித் தவங்கள் புரிந்தனன். ஆயினும், எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளில் நிலை கொள்ளாமல் வெவ்வேறு விஷய இன்பங்களில் பதறியோடுகின்ற தனது நெஞ்சை அடக்கியாளமுடியாமல் வருத்தங்கொண்ட அந்த நான்முகன் இன்னது செய்வதென்று தெளியப் பெறுமல் திகைத்திருக்கு மளவில் ஆகாயத்தில் நின்றும் ஒரு அசரீரி வாக்குத் தோன்றியது, அதாவது ;—'பிரம! ஆயிரம் அச்வமேதங்களை அனுட்டித்தால்தான் சித்த சுத்தி பெற்றுத் திருமாலைக் கட்கூடாகக் காணப்பெறுவாய்; விரைவில் திருமாலைக் காணவேண்டி ஆயிரம் அச்வமேதயாக மனுட்டிக்கும் தாமதத்தைப் பொறுக்ககில்லாயாகில், தொண்டை நாட்டிலுள்ள ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திற்குச் சென்று அவ்விடத்தில் அயமேத வேள்வியியற்றி எம்பெருமானை உகப்பிப்பாயாக ; அங்கு ஒரு கருமம் செய்தாலும் அஃது ஆயிரமுகமாகிப் பயன் பெறுவிக்கும் ; இஃது அந்த க்ஷேத்ரத்திற்கு உற்ற பெருமை' என்று.

## [பிரமன் ஸத்யவ்ரத க்ஷேத்ரமடைதலும் யாகசாலையமைக்க முயலுதலும்]

மேற்கூறியவாறு தோன்றிய ஆகாயவாணியைக் கேட்டுப் பரமானந்தமடைந்த பிரமன் மேருமலை யுச்சியில் நின்று உடனே எழுந்து ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்து அங்குத் தவமுனிவர் சூழ்ந்த திருவனந்த ஸரஸ்ஸையும் அதனருகில் திகழும் திருவத்திமாமலையையும் நோக்கியுவந்து அத்திருக்குளக்கரையிலேயே தூய வேள்வி புரியத் துணிவுகொ[illegible]டான்.

நினைத்தபோதே எதையும் அற்[illegible]ாக நிருமித்து முடிக்க வல்லவனை விச்வகர்மாவை யழைத்து, ஸ்ரீஹஸ்திகிரி[illegible]த்தரவேதியாக்கி இவ்விடத்திலேயே யாகசாலையை அமைத்திடுவாயாக; ம[illegible]ங்கள் சூழ்ந்தழகாயதொரு நகரத்தையும் நிருமிப்பாயாக என்று கட்டளையு[illegible]னன்.

இங்ஙனம் அயனது ஆணையைச் சிரமேற்கொண்ட விச்வகர்மா ஸ்ரீ ஹஸ்திகிரியை நாற்சதுரமாக்கி அதனருகில் அச்வமேத யாகசாலையை அமைத்துத் தடமாமதிள் சூழ்ந்தழகாய கச்சிப்பதியையும் விரைவில் நிருமித்தனன். பிறகு வேள்வியைக்காண விருப்பத்துடன் வந்து சேர்ந்த அந்தரத்தமரர்கள் கூட்டங்களும், இயக்கரும், விச்சாதரரும், கின்னரரும், கந்தருவரும் முதலாயினோர் தந்தமக்குரிய விடுதிகளில் சார்ந்தனர். இந்திரன் முதலிய தேவர்களாலும், விச்வாவஸு முதலிய கந்தருவர்களாலும், விரோசனன் முதலிய அசுரர்களாலும், மணிபத்ரன் முதலிய யக்ஷர்களாலும், வஸிஷ்டர் முதலிய மாமுனிகளாலும் அரம்பை முதலிய அப்ஸரஸ்ஸுக்களாலும், ஜநகன் முதலிய சக்ரவர்த்திகளாலும் மற்றும் பல்வகைப் பெரியார்களாலும் நெருக்கமுற்று விளங்கியது காஞ்சிமாநகர்.

## [சீறிப் பிரிந்திருக்கின்ற ஸரஸ்வதியை வேள்விக்காக அழைத்து வருமாறு வஸிஷ்டரை யனுப்புதல்]

பின்னர், யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்கள் சேகரிக்கப்பட்டு, ரித்விக்குக்களும் திரண்டனராக, வேள்விபுரிய ஸஜ்ஜனுய் நின்ற விரிஞ்சனை நோக்கி ப்ருஹஸ்பதியானவர், 'திசைமுகனே! உனது தருமபத்தினியான ஸரஸ்வதியின்றியில் வேள்வி நடைபெறுதாதலால் அவளை இங்கு அழைக்க முயல்வாய்' என்றனர். பிறகு பிரமன் வஸிஷ்ட முனிவனை நோக்கி 'முன்பொருகால் ஏதோவொரு காரணத்தினுல் என்மீது கறுக்கொண்ட ஸரஸ்வதியானவள் ஸரஸ்வதீ நதியைச் சென்று சேர்ந்து அங்குத் தவம்புரிந்து கொண்டிராநின்ருள்; அவளை நீ இப்போது நல்வார்த்தைகளினுலுகப்பித்து இங்கழைத்து வரவேணும்' என்றனன்.

அக்கட்டளையைச் சிரமேற்கொண்ட வஸிஷ்டமாமுனிவன் ஸரஸ்வதீ தீரத்திற்கு விரைந்து சென்று வாணியை வணங்கித் துதித்து, தாயே! காஞ்சிமாநகரில் அச்வமேத வேள்வியியற்ற விரும்பிய அம்புயத்தோன் உமது நல்வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கின்ருராதலால் அவண் விரைந்து எழுந்தருளவேணும்; ஸத்யவ்ரத க்ஷேத்திரத்தில் அந்த வேள்வியை நீர் குறையற நிறைவேற்றியருளவேணும் என்று கைகூப்பிக் கூறினன்.

இது கேட்டதும் மிக்க சினங்கொண்ட ஸரஸ்வதியானவள் உதடு துடிக்க இங்ஙனம் உரைத்தனள்;—'பிள்ளாய்! என்மீது மிக்க பகைமை கொண்ட எனது கணவர் பெரியதொரு ஸபையில் என்னைப் பண்டு பரிபவப்படுத்தினபடியை நினைத்துக் கொண்டால் அவரருகில் வந்துசேர எனக்கு மனமுண்டாகுமோ? என்னை அவர் பரிபவப்படுத்தினபடி யாதென்று உணர விரும்புவாயாகில் உரைக்கின்றேன் கேள்; முன்பொருகால், லக்ஷ்மியின் பக்தர்களும் என் பக்தர்களும் பரஸ்பரம் ஒரு விவாதமடைந்தார்கள்; லக்ஷ்மியே மிகச் சிறந்தவளென்று லக்ஷ்மீ பக்தர்களும், நானே மிகச் சிறந்தவளென்று என் பக்தர்களும் சொல்லி விவாதப் பட்டார்கள்; பிறகு இரு வகுப்பினரும் பல முனிவர் புடைசூழ்ந்த நான்முகக் கடவுளின் ஸபைக்குச் சென்று தத்தம் வாதங்களை விரிவாக வெளியிட்டுக் கொண்டனர்; அப்போது சதுமுகனுர் தாமாகவே பிராட்டியின் பெருமையையே ஸித்தாந்தமாக அறுதியிட்டுக் கூறினர். பிறகு நான் என்னிலும் பிராட்டியே சிறந்தவளாயிடுக; ஸகல நதிகளுக்குள்ளுமாவது நான் சிறப்புடையளாம்படி அருள்புரிய வேணும்" என்று நாதரை வணங்கி வேண்டிக் கொண்டேன்; "*கங்கை கங்கையென்ற வாசகத்தாலே கடுவினை களைந்திடகிற்கும் கங்கை ஒப்புயர்வற்று விளங்கும்போது நதிகளுக்குள்ளும் உனக்குச் சிறப்பு ஏலாது; இங்ஙனம் நீ ஆசைப்படுவதும் அபஹஸிக்கத்தக்கதாகும்'' என்று பல்லாயிரவர் திரண்ட பெருஞ்சபையின்கண் மிகவும் திரஸ்காரமாக மொழிந்தார்; அவர் அங்ஙனம் அவமதித்ததனுல் அளவு கடந்த சீற்றமுற்ற நான் அன்றே புறப்பட்டு இங்கு எனது அம்சமாகிய ஸரஸ்வதீ நதியைச் சார்ந்து வாழ்ந்துகொண்டிராநின்றேன்; வேள்விபுரிய விரும்பிய கணவர் என்னேடு கூடியே வேள்வி நடத்த விரும்பி

யிருப்பாராயின், அவர் தாமே பரம பவித்திரமான இவ்விடத்தேற எழுந்தருளி இங்கே வேள்வி நடத்தலாம்'—என்று.

இது கேட்ட வஸிஷ்ட முனிவர் 'தாயே! ஸரஸ்வதி! எல்லாமறிந்த நீர் இங்ஙனம் இயம்பலாகுமோ? ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தின் பெருமை ஸகலலோக ப்ரஸித்தமானது; அன்றியும் ஆகாயவாணியை ஆதரித்து அந்த க்ஷேத்திரந் தன்னி லேயே வேள்வியியற்ற நிச்சயித்த அப்பெரியாரை இவ்விடத்திற்கு வரச் சொல்லு தல் உசிதமாகுமோ? நீர் தாமே சினம் தணிந்து அவ்விடமெழுந்தருள்வது மிக நன்று' என்று வணங்கி விண்ணப்பம் செய்தனர்.

அவ்வளவிலும் சிறிதும் சீற்றம் தணியப்பெருத ஸரஸ்வதி பழைய பகை யையே பெரிதும் பாராட்டி அவ்வேண்டுகோளை மறுத்தே விட்டனள். எவ்வளவு வேண்டியும் விருப்பம் நிறைவேறப்பெருமலே வஸிஷ்டர் மீண்டு வந்து நான்முக ரிடம் செய்தியறிவித்தனர்.

## [ஸரஸ்வதியின்றியில் மற்றை மனைவியருடன் வேள்வியியற்றத் தொடங்குதலும், அசுரர்கள் வேள்வியைக் கெடுக்க முயலுதலும்.]

வஸிஷ்டர் வந்து தெரிவித்ததை யுணர்ந்த ஸகல மஹர்ஷிகளும் நான்முகக் கடவுளை நோக்கி, 'தேவ! சீற்றத்தின் எல்லையிலே நிற்கின்ற ஸரஸ்வதி இவண் வரப்போகிறதில்லையென்பதறிந்தோம்; அதனுல் ஒரு குறையுமில்லை; ஸாவித்ரி முதலிய மற்றை மனைவியரை உடன் கொண்டு வேள்வி தொடங்கி முடிப்பது நலம்' என்றனர். அங்ஙனமே செய்வதாக இசைந்த திசைமுகனுர் ஸாவித்ரி முதலிய மனைவியருடன் கூடி யஜ்ஞஸங்கல்பஞ் செய்து கொண்டு அச்வமேத தீக்ஷையை வஹித்துக்கொண்டார். வேள்வியதிசயங்களைக் காணவந்து குழுமியிருக்கின்ற தேவாஸுரர் முதலிய அனைவர்க்கும் தக்கவாறு மரியாதை செய்ய அந்தணர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் அவ்வண்ணமே ஸத்காரம் செய்ய எழுந்து தகுதிநோக்கித் தேவர்களுக்கு முதல் மரியாதை செய்தனர். அதுகண்டு பொருமை கொண்ட அசுரர்கள் உடனே ஸதஸ்ஸில் நின்று எழுந்து வெளியேறி, அமரர்களை அவமதிக்க வெண்ணி அமர்புரிய ஆலோசிக்கலாயினர்.

போர்புரிவதே பொருத்தமானதென்று துணிந்த அவ்வசுரர்களை நோக்கி அவர்களில் ஒருவனுன விரோசன னென்பான் சிறிது விமர்சித்து இங்ஙனம் விளம்பி னுன்; அசுரர்காள்! மேல்விளைவதறியாமல் நீங்கள் சடக்கெனச் செய்யத் துணிந்த இந்த யுத்தஸந்நாஹத்தை நிறுத்திக் கொள்வது நன்று; விரைந்து விளக்கிலே விழும் விட்டில்களுக்கு நேரும் கதிதான் நமக்கும் நேரும்; பிறருடையவும் நம் முடையவும் பலாபலங்களை ஆராயாது திடீரென்று போர்புரியப் புகுவது பெருந்தீங் காகவே முடியும்; எளிய உபாயத்தினுல் ஸாதிக்கத் தகுந்ததைப் பராக்ரமத்தினுல் ஸாதித்துக்கொள்ளக் கருதுவது புத்திமான்களின் பணியல்ல; இப்போது எனக்குத் தோன்றுவதொரு உபாயத்தை உரைக்கின்றேன் கேண்மின்; இந்த நான்முகக் கடவுள் தனது மூத்த மனைவியாகிய ஸரஸ்வதியைத் துறந்து வேள்வியியற்றத்

தொடங்கியிருக்கின்றமையால் நாம் ஸரஸ்வதியிடம் சென்று சினமூட்டி அவளைக் கொண்டு வேள்வியைக் கெடுத்தல் மிக எளிதாகும்"—என்று.

விரோசனன் இங்ஙனம் விளம்பக்கேட்ட அசுரர்களனைவரும் நன்று நன்றென்று நவின்று அப்பொழுதே புறப்பட்டு ஸரஸ்வதி பக்கலிற் சென்று, தங்களுக்குள்ள மாயச்செயல் வல்லமையினால் அசுரவுடல் நீத்து அந்தணவேடம் பூண்டு வாணியை வாயாரவாழ்த்தி நின்றனர். அவ்வாழ்த்துதலால் அகமகிழ்ந்த அவள், நீங்கள் வந்த காரியமென்னென்று வினவ, தங்களுக்கு ஸதஸ்ஸில் அவமரியாதை நடந்ததென்பதைச் சிறிதும் வெளியிடாமலே இங்ஙனம் மொழிந்தனர் ;—"மேன்மை தங்கிய கலைமகளே! தீய மதி கொண்ட சிலமுனிவர்களால் தூண்டப்பட்ட உமது கணவன் முக்கிய மஹிஷியான உம்மைத் தவிர்த்து மற்றை மஹிஷிகளோடு கூடி யாகம் செய்யத் தொடங்கி யிருக்கின்றனன் ; மிகவும் அநீதியான இந்தச்செய்தியை நாங்கள் பொறுக்ககில்லோம் ; இதனை உம்மிடத்து விண்ணப்பஞ் செய்யவே வந்தோம் ; எவ்வகையினாலாவது அந்த வேள்வி நடைபெறாத வண்ணம் தடை செய்தீராகில் உம்மிடத்து அன்புபூண்ட எமக்கு மகிழ்ச்சியாகும்"—என்று.

**[சதுமுகனார் வேள்விதனைச் சதிர்கெடுக்க வேகவதீப்ரவாஹம் வெள்ளங்கோத்து வருதல்.]**

இங்ஙனம் அசுரர் மொழியக்கேட்ட ஸரஸ்வதி அடக்கவொண்ணாத சீற்றத்தை யேறிட்டுக்கொண்டு, நான்முகனார் செய்யும் நல்வேள்வியைப் பங்கம் செய்யப்பாரித்து, ஸஹ்யமலையினின்று கிளம்பி வேகவதியென்னும் நதியாகப் பெருகி ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தனள் ; அந்த நதியின் பெருக்கு வாசாமகோசரமாக இருந்தது. மிகவும் பயங்கரமான விசையுடனே பெருகி வருகின்ற அப்பெருவெள்ளத்தைக்கண்ட யாகசாலையிலுள்ளாரனைவரும் திடுக்கிட்டு இன்னது செய்வதென்று தோன்றாமல் மிகவும் வியாகுலப்பட்டனர். 'ஸ்வாஹா' ஸ்வாஹா' என்று சொல்லிக்கொண்டிருந்த வாசகங்கள் 'ஹா ஹா ஹா ஹா' என்று மாறிவிட்டன.

**[திருவெஃகணை, ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் ஆவிர்ப்பவித்தல்.]**

வேள்வி காணவந்த ஸகல ஜனங்களும் வருந்தியேங்கி யஜமானனாகிய நான்முகனைத் தஞ்சமாக அடைந்து 'எம்மைக் காத்தருளவேணும், எம்மைக் காத்தருளவேணும்' என வேண்டிக்கொண்ட வளவிலே, பிரமன் யோகத்ருஷ்டியினால் 'அசுரர்களால் கலக்குண்ட ஸரஸ்வதியின் செயல் இது' என்றுணர்ந்து, ஸ்ரீமந்நாராயணனது திருவருளாலேயே இப்பெருந்துயரம் தொலைய வேணுமென்று துணிந்து உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து உடம்பெலாம் கண்ண நீர்சோர அப்பெருமானைக் குறித்து வாயாரத் தோத்திரஞ் செய்தனன். அந்தத் தோத்திரத்தினால் மிகவும் திருவுள்ளமுவந்த எம்பெருமான், ஏற்கெனவே உபநிஷத்துக்கள் தன்னை ஸேதுவாக ஓதியிருப்பது பொருள் பெற்றதாம்படி, "சதுமுகனார் வேள்விதனைச் சதிர்கெடுக்கச் செறிந்தோடுங் கதியுடைய வேக

வதிக்கணையாக வந்துதித்தோய்!" என்றும், "அணியாக வேகவதி அலையோடு கொண்டோடி ஆலிக்க அணையாக் கிடந்த களைதானே" என்றும் பின்னுளர் ஏத்துமாறு அந்த ஸரஸ்வதியின் வெள்ளத்தைத் தடை செய்யவல்ல அணையாக சயனித்துக்கொண்டருளினன். அந்தத் திருப்பள்ளித் திருக்கோலத்தைக் கண்ட ஸரஸ்வதி நாணமுற்று மேலே பெருகிச் செல்லமாட்டாமல் திகைத்து நின்றனள். மலர் மைந்தனும் மற்றுமுள்ள மஹர்ஷிகளும் எம்பெருமானுடைய திருவருளை நோக்கி மிக வியந்து வாயார வாழ்த்தி வணங்கி நின்றனர். நதியுருவாக வந்த ஸரஸ்வதியும் அவ்வளவிலே தனது ஆர்ப்பாட்டங்களெல்லாம் அடங்கப்பெற்று எம்பெருமானுடைய நியமனத்தினுல் அந்தர்வாஹினியாய்ச் சென்று கடல் சேரலுற்றுள்.

யதோக்தகாரியென்று திருநாமம்பூண்ட அப்பெருமானது தென்புறமாகச் செல்லலுற்ற வேகவதியை வஸிஷ்டர் முதலிய முனிவர்கள் பிரமனது சொற்படி வந்து வணங்கி, தாயே! ஸரஸ்வதியே! யாகசாலையில் இனியாகிலும் வந்து சேர்ந்து நாதரோடு கூடிக் களித்திருந்து இப்பெருவேள்வியை நிறைவேற்றியருளவேணும்; எல்லா நதிகளிற் காட்டிலும் உன்றனக்கே மிக்க சிறப்பு உள்ளதாக நான்முகக் கடவுள் அநுக்ரஹம் செய்கின்றுர் என்று சொல்லி வேண்டிக்கொள்ள, அவளும் மிக்க மனமகிழ்ச்சியுடனே நதியில் நீன்றும் விரைந்தெழுந்து நான்முகக்கடவுளோடு சேரலுற்றுள்.

## [வேள்வியில் ஹவிஸ்ஸு கிடைக்கப்பெறுத தேவர்கள் வருந்துதல்]

அச்வமேத யாகத்திற்கு உண்டான இடையூறு எம்பெருமானது இன்னருளால் தொலைந்து ஸரஸ்வதியும் வந்து சேர்ந்து ஒருகுறையுமின்றி வேள்வி நடைபெறுவதாயிற்று. அக்னியில் ஆஹுதி செய்யப்பட்ட ஹவிஸ்ஸு முழுவதையும் நான்முகன் எம்பெருமானைச் சிந்தை செய்துகொண்டு அப்பெருமானுக்கே நேரில் ஸமர்ப்பித்தனன்; அதனுல் பல பல தேவதைகள் யாகசாலைக்கு நேரில் வந்திருந்த போதிலும், "ஸோமாய ஸ்வாஹா, வருணாய ஸ்வாஹா; இந்த்ராய ஸ்வாஹா, ஸூர்யாய ஸ்வாஹா" என்றிப்படி அந்தந்த தேவதைகளை உத்தேச்யர்களாகக் கொண்டு ஹோமம் செய்யப்பட்டபோதிலும், ஒரு ஹவிஸ்ஸும் ஒரு தேவதைக்கும் கிடைக்காமற் போயிற்று. அங்ஙனம் கிடைக்காமற் போனதனுல் மிக்க வருத்தங்கொண்ட அத் தேவதைகள் நான்முகனை நோக்கித் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்து 'இப்படியும் எம்மை அவமானப் படுத்துவது தகுதியோ பிரம!' என்று முறையிட்டுக் கொண்டார்கள்.

## [தேவர்களுக்குப் பிரமன் தத்துவமுணர்த்தல்]

தத்தமக்கு ஹவிஸ்ஸு கிடைக்காமை பற்றி வருத்தங்காட்டி முறையிட்டுக் கொண்ட அமரர்களை நோக்கி அயன் இங்ஙன முரைத்தனன்:—"தேவர்காள்! ஆயுள், ஆரோக்யம், மக்கள், செல்வம் முதலிய அற்ப பலன்களைக் குறித்து வேள்வி புரிகின்றவர்கள் யாவரோ, அவர்களே உங்களைக் குறித்து யஜிப்பவர்கள்; அன்னவர்களால் ஆஹுதி செய்யப்படும் ஹவிஸ்ஸுகளே உங்களுக்குக் கிடைக்கக்

கூடியவை ; முமுக்ஷுக்களான பரமைகாந்திகளால் ஸ்ரீமந்நாராயணனே ஸாக்ஷாத்தாக யஜிக்கப்படுகிற படியால், அன்னவர்களால் அர்ப்பணம் செய்யப்படும் ஹவிஸ்ஸுக்களை ஸாக்ஷாத் பரமபுருஷன் தானே ஸ்வீகரித்தருள்வான்; இப்போது அடியேன் முமுக்ஷுவாய்ப் புண்டரீகாக்ஷனையே ஸாக்ஷாத்கரிக்கவெண்ணி யாகஞ் செய்கிறேனென்பதை நீங்களனைவருமறிவீர்; இந்த வேள்வியில் ஹோமம் செய்யப்படும் அவியுணவுகளை அமரர்பெருமான் தானே ஸாக்ஷாத்தாக அங்கீகரித்தருள்கின்றமையால் நீங்கள் இவ்வவியுணவுகளைப் பெற ஆசைகொள்ள அவகாசமில்லை' என்று.

## [புண்யகோடி விமானம் தோன்றுதல்]

இங்ஙனம் பிரமன் உபதேசித்த தத்துவப் பொருளைச் செவியேற்று அமரர்கள் அஹங்காரமொழிந்து சீற்றமும் தணியப்பெற்றனர். நிபுணரான வஸிஷ்டர் வேள்விச் சடங்குகளைக் குறையொன்றுமின்றியே அடைவுபட நடை பெறுத்திப் போந்தனர். ப்ராப்தமான காலத்தில் வேள்விக் குதிரையின் வபையை யெடுத்து அக்நியில் ஹோமம் செய்தவளவில், மங்கல வாத்தியங்கள் முழங்கா நிற்க, வேத கோஷம் விம்மி வளரா நிற்க, விண்ணுலுகில் நின்றும் பூமாரி சொரியா நிற்கப் பரம பவித்திரமான புண்யகோடி விமானம் அக்நி மத்தியில் நின்றும் தோன்றியது.

## [தேவப்பெருமாள் திருவவதரித்தல்]

அந்தப் புண்யகோடி விமானத்தினுள்ளே * உலகேத்து மாழியானத்தியூரான் * என்றும், * வரந்தரும் மாமணி வண்ணன் * என்றும் ஆழ்வார்களால் போற்றப்பட்ட பேரருளாளப் பெருமாளென்னும் ஸ்ரீ வரதராஜன் *கோலமாமணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்லதோரெழில் நீலமேனியனாய் * மின்னுநூலும் குண்டலமும் மார்வில் திருமறுவும் மன்னுபூணும் நான்கு தோளுமுடையனாய் *சங்கினோடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும் செங்கனிவாயொன்றினோடுங் கூடினவனாய் *பூந்தண்மாலைத் தண்டுழாயும் பொன்முடியும் வடிவும் பாங்கு தோன்றும் பட்டும் நாணுமாய் * தொக்க சோதித் தொண்டை வாயும் நீண்ட புருவங்களும் தக்க தாமரைக் கண்களுமாய் * குழுமித் தேவர் குழாங்கள் கை தொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு வென்னலாம்படி நிறைந்த சோதி வெள்ளம் சூழ்ந்த நீண்ட பொன்மேனியோடே * தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர் முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையனாய்க் காட்சி தந்தருள, அந்த ஸேவையை நான்முகனுள்ளிட்டாரடங்கலும் கண்டு ஆனந்தமென்னும் அமுதக் கடலில் ஆழ மூழ்கினர். பிரமன் நெடு நாளாகத் தான்பட்ட பரிச்ரமம் பயன்பெற்றதற்குப் போரவுகந்து, ஸாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து கூப்பிய கையனாய்,

" தேவராய்த் தேவர்க்கும் தெரியாத வொளியுருவாய்
மூவராய் மூவர்க்குள் முதல்வனாய் நின்றோய்நீ;
போற்றுவார் போற்றுவதுன் புகழ்ப்பொருளேயாதலினால்
வேற்றுவாசகமடியேன் விளம்பு மாறறியேனால்;

பணித்தடங்காதிமையவர்க்கும் பலபல நன்முனிவர்க்கும்
பணித்தடங்காப் புகழடியேன் பணித்தடங்கற்பாலதோ;
யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும்
ஆங்கடவுள் நீ யென்றால் அஃதுனக்கு வியப்பாமோ?
கருதரியவுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையும்
ஒரு தனிநாயகமென்றலுன் பெருமைக்களவாமோ?
அனைத்துலகு மனைத்துயிரு மமைத்தளித்துத் துடைப்பதுநீ
நினைத்த விளையாட்டென்றால் நின் பெருமைக்களவாமோ?''

என்றிங்ஙனே பலவாறாகத் துதித்து வேரற்ற மரம்போலே பெருமானது திருவடி வாரத்திலே விழுந்து கிடக்க, பேரருளாளன் பேரருள் பொலியும் புன்முறுவல் செய்து இங்ஙனே அருளிச்செய்தான்;—''பிள்ளாய்! பிரமனே! எழுந்திருப்பாயாக; உனது திருவாராதனங்களுக்கு நான் மிகவும் உவந்தேன்; உனக்குப் பலவகை நன்மைகளு முண்டாகுக; உனக்கு விருப்பமான வரத்தை வேண்டிக் கொள்வாயாக'' என்று.

அது கேட்ட சதுமுகன் எழுந்து ''பரமபுருஷ! பலன்களெல்லாவற்றினும் மேம்பட்ட பரமபலனாயிருக்கின்ற உன்றன்னைப் பரம பாக்கியத்தினால் கண்குளிரக் காணப்பெற்ற அடியேனுக்குக் கை புகாத பலன் ஒன்றுண்டோ? அவாப்தஸமஸ்த காமன் அடியேனேயாகின்றேன்; விரும்பிப் பெறவேண்டியதொன்றில்லை; அடியேன் மீது பேரருள் பொலியுமாகில் இவ்வத்திமாமலையின் உச்சியின்மீதே நித்திய ஸந்நிதி பண்ணியருளி *வன்பெருவானகமுய்யவமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத் துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச்சுகம்வளர அகமகிழும் தொண்டர் வாழ நீடூழிகாலம் எழுந்தருளியிருக்க வேணுமென்று இவ்வளவே வேண்டிக்கொள்வதை நிறைவேற்றியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்தனன். பேரருளாளனும் அங்ஙனமே திருவுள்ளமுவந்து இசைந்தருளினன்.

## [வேள்வி முடிவும் அவரவர்கள் தத்தம் இருப்பிடம் மீளுதலும்]

தனது வேண்டுகோளைப் பரம கிருபையுடன் பரிபூர்த்தி செய்தருளிய பேரருளாளனது பரிபூர்ண அநுக்ரஹத்திற்குப் பாத்ரபூதனான பங்கயத்தோன் பரமானந்தம் பூரிக்கப்பெற்று, வேள்வி முற்றுப்பெற்றதற் குறுப்பான அவபிரதஸ்நானத்தை அனந்த ஸரஸ்ஸில் செய்து தக்ஷிணைகளும் கொடுத்து அவரவர்களைத் தத்தம் இருப்பிடங்கள் சென்று சேருமாறு பஹுமானத்தோடு விடை தந்து அனுப்பினன். தேவேந்திரன் அமரர்களோடும், அப்ஸரஸ்ஸுக்களோடும் வித்யாதரர் முதலானாரோடுங் கூடி ஸ்வர்க்க லோகத்திற்குச் சென்றனன். வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளும் தம்தம் ஆச்ரமங்களை நோக்கி நடந்தனர். சக்ரவர்த்திகளும் தம் தம் நகர் நோக்கிச் சென்றனர். நித்ய ஸூரிகளும் முக்தர்களும் மாத்திரமே பேரருளாளனுடைய அத்தாணிச் சேவகத்தில் ப்ரேமம் நிரம்பினவர்களாய் இவ்வுலகத்தாருடைய கண்ணுக்குப் புலப்படாமே அங்கு இனிதாக வாழ்ந்து வந்தனர்.

## [க்ருத யுகத்தின் முடிவில் தன்னுலகம் செல்லுமாறு நான்முகனுக்கு விடை தருதல்]

க்ருதயுகம் முடியுமளவும் மிக்க மகிழ்ச்சியுடன் திவ்யோபசாரங்கள் செய்து தன்னை ஆராதித்து வருகின்ற அம்புயத்தோனை நோக்கி அத்திகிரிநாதன் அன்பு ததும்ப அருளிச் செய்யலாயினன்—"பிரம! உனது அத்தாணிச் சேவகத்தினால் அகமகிழ்கின்றனன்; வேண்டிய வரத்தைப் பெற்றுக்கொண்டு உனது உலகத்திற்குச் சென்று சேர்வாயாக" என்று. இங்ஙனம் நியமிக்கப்பெற்ற நான்முகன் இவ்விடத்திலேயே நித்ய கைங்கரியம் செய்துகொண்டு வாழ்வது தவிர வேறொன்றிலும் விருப்பமில்லாமையையும் பிரியில் தரியாமையையும் தெரிவித்து 'இங்குத் திருவடிவாரத்திலேயே அடியேனுக்கு நித்யவாஸ நியமநம் தந்தருளவேணும்' என்று பிரார்த்திக்க,

"பிரமனே! அநுஜ்ஞா கைங்கரியத்திற் காட்டிலும் ஆஜ்ஞா கைங்கரியமே மிகச் சிறந்ததென்பதை நீ அறிவாயன்றோ. ஸத்ய லோகத்தை நிர்வஹிக்க வேண்டிய கடமையில் நீ நியமிக்கப் பட்டிருக்கின்றாயாதலால், அந்த ஆஜ்ஞா கைங்கரியத்தைத் துறந்து இங்கு என்னருகே வாழ்ந்திருக்க விரும்புவது உரியதன்று. ஆகவே, நெடுநாளாக உன்னை விட்டுப் பிரிந்து துடிக்கின்ற உன்னுலகத்தவர்களை மகிழ்விக்க வேண்டி நீ அவ்விடமே சென்று சேர்ந்து என்னைச் சிந்தை செய்துகொண்டே ஆஜ்ஞா கைங்கரியங்களை நிர்வஹிப்பாயாக; என்னை விட்டுப் பிரிந்ததாக வெண்ணி நீ துயருறவும் வேண்டா; உனது நின்மலமான நினைவிலே நிரந்தரம் நான் இருக்கின்றேனன்றோ? அன்றியும் இன்னமுமொன்று கேள்; முதல் யுகமான க்ருத யுகத்தில் நீ திருவாராதனம் செய்வது போல இரண்டாவதான த்ரேதாயுகத்தில் கஜேந்திரனும், மூன்றாவதான த்வாபர யுகத்தில் ப்ருஹஸ்பதியும், நான்காவதான கலியுகத்தில் ஆதிசேஷனும் திருவாராதனம் ஸமர்ப்பிப்பார்கள்; ஆனால், எந்நாளிலும் ஆண்டுதோறும் சித்திரை மாஸத்தில் சுக்ல சதுர்த்தசியன்று நீ இவ்விடம் வந்து சேர்ந்து பௌர்ணமியன்று நியமேந எனக்குத் திருவாராதனம் ஸமர்ப்பிக்கக் கடவை" என்று நான்முகனுக்குப் பேரருளாளன் நியமன மளித்தனன். அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்ட விரிஞ்சன் வரதராஜனை வணங்கி வாழ்த்தி இத்திசை நோக்கி அஞ்சலி செய்துகொண்டே ஸத்யலோகம் சென்று சேர்ந்தனன்.

த்ரேதாயுகத்தில் திருவாராதனம் செய்தவர் கஜேந்திராழ்வான்; த்வாபர யுகத்தில் திருவாராதனம் செய்பவர் ப்ருஹஸ்பதி. இக்கலி யுகத்தில் திருவாராதனம் செய்பவர் திருவனந்தாழ்வான். .... .... .... .... *

தேவப்பெருமாள் வைபவச் சுருக்கம் முற்றிற்று.

# ஆசார்யஹ்ருதயத்தில் ஒரு சூர்ணையின் விவரணம்

**—வித்யை தாயாகப்பெற்று.........மணிவல்லிப்பேச்சு வந்தேறியன்று—**

நம்முடைய ஸம்பிரதாயத்திற்கு ஸ்ரீவசனபூஷணமும் ஆசார்யஹ்ருதயமும் இரண்டு கண்கள். இவ்விரண்டு திவ்யக்ரந்தங்களும் அவதரிப்பதற்கு முன்பு வாழ்ந்த ஆசாரியர்கள் மிக விளக்கமான ஞானத்தை எப்படி பெற்றிருந்தார்களோ அறியோம் என்றுர் ஒரு ஸ்வாமி. அவ்வாசாரியர்கள் யாவரும் வெளியிட்ட அர்த்த விசேஷங்களே யன்றோ இவற்றிலுள்ளவை. உபந்யாஸகர்களுக்கு இவ்விரண்டு க்ரந்த ரத்னங்களும் கண்ட பூஷணமாகவே விளங்கவேண்டும். ஆசார்யஹ்ருதயத்தில் "வித்யை தாயாகப்பெற்று" என்கிற ஒரு மிகப் பெரிய சூர்ணையின் அருமருந்தான அர்த்த விசேஷங் கேளீர்.

**—மேலே குறித்த சூர்ணைக்கு திருமந்திரத்தில் உகாரமே உயிரானது—**

நம் ஆசார்ய ஸார்வபௌமர்கள் திருமந்த்ரார்த்தம் நிர்வஹித்தருளுங்கால் அத்திருமந்த்ரத்தில், நமக்கும் எம்பெருமானுக்குமுள்ள நவவித ஸம்பந்தங்கள் தெரிவிக்கப்படுவதாக நிரூபித்தருள்வர்கள். *பிதா ச ரக்ஷக: சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:, ஸ்வாமீ ஆதாரோ மமாத்மா ச போக்தா ச ஆத்யமநூதித: * என்னுமிந்த ச்லோகத்தினுல் அந்த நவவித ஸம்பந்தங்களும் உணரத் தக்கன. அதில் ப்ரணவத்தின் நடுவெழுத்தான உகாரத்தின் பொருளை விவரித்தருளுமிடத்து "ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்" என்றுர்கள். எம்பெருமானொருவன் தவிர மற்றொருவர்க்கும் அடிமைப்படா தொழிகையாகிற அநந்யார்ஹ சேஷத்வமே உகாரார்த்தமென்று தேறி நின்றது. இதுதன்னையே ஸ்ரீகுலசேகராழ்வார் தமது திருமொழியில் (5—2) * கண்டா ரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்போல் * என்கிற பாசுரத்தினுல் அநுஸந்தித்தார். ஒருத்தி ஒருவனுக்கே உரியவளா யிருப்பது போல ஜீவன் பரமாத்மாவுக்கே உரியவனுயிருக்க வேண்டும்படியை உகாரம் உணர்த்துகின்றது. இதுவேயாயிற்று உகாரார்த்தம். பர்த்ருபார்யா பாவரூப ஸம்பந்தமென்கை. இதனை அடிப்படையாகக் கொண்டு இவ்வுபந்யாஸம் நிகழ்கின்றது.

**—ஜீவாத்மாவுக்குப் பெண்மையே இயற்கை வடிவம்—**

ஸம்ஸாரிசேதநன் ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடுபட்டுத் திருநாடு சென்று சேர்வதானது பரம புருஷனோடு பெறும் பரமபோக மஹோத்ஸவமென்று கொண்டு மகிழ்ந்திருக்கவேணுமே யொழிய, சிறிதும் வருந்தவேண்டியதில்லை யென்று தத்வ ஜ்ஞானிகள் தெளிந்திருப்பர்கள். உண்மையில் இது பாணிக்ரஹண பூர்வக பரமபோகமஹோத்ஸவந்தானென்பதை இங்கு விரிவாக நிரூபிக்கிறேன். பெண்மகளுக்கும் புருஷனுக்கும் விவாஹம் நடப்பது உலக வியற்கை. எம்பெரு

மான் பரமபுருஷனென்று பேர்பெற்றவனுகையாலே அவன் புருஷனென்பது நிர்விவாதம். இங்கே பெண்களாய்ப் பிறந்தவர்களுக்கு அப்பரமபுருஷனேடு விவாஹமும் போகமும் ப்ராப்தமாகலாம்; இங்கு ஆண்களாயுள்ளவர்களுக்குப் பரமபுருஷனேடு விவாஹமோ போகமோ ப்ராப்தமாவதற்குத் தகுதியில்லையே யென்று முன்னம் ஒரு சங்கை யுண்டாகக்கூடும். அது வேண்டா. ஆண்மை பெண்மையென்னும் வாசியானது அழியுந்தன்மையதான உடலிற் காணப்படுமதே யொழிய சாச்வதமான ஆத்மாவில் காணப்படுமதன்று. ஆத்மஸ்வரூபத்தை உற்று நோக்கினல் அதற்குப் பெண்மையே இயற்கையான வடிவென்று தேறலாம். எங்ஙனே யென்னில்; திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தில் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஒன்பது வகையான உறவுகள் [நவவிதஸம்பந்தம்] உள்ளனவாக நிரூபிக்கப்படுவதில் பர்த்ருபார்யாபாவரூப ஸம்பந்தம் ப்ரணவத்தில் இடைச் சொல்லான உகாரத்தில் தேறுவதென்று சொன்னேம். அவதாரணார்த்தகமான உகாரத்தினல் தேறுவது அநந்யார்ஹசேஷத்வம். அதாவது எம்பெருமானெருத்தனுக்கே உரிமைப் பட்டிருத்தல். இதுவாயிற்று ஸ்த்ரீதர்மம். ஆகவே ஜீவாத்மாவை ஒரு பெண்மகளாகவே நினைக்கவேணும். ஆழ்வார்கள் அடிக்கடி பெண் பாவனையோடு பாசுரம் பேசுவதும் இதுபற்றியே. ஆண்களாய்ப் பிறந்த ஆழ்வார்கள் எதற்காகப் பெண்மையை ஏறிட்டுக் கொள்ளுகிருர்களென்று சில அறிவிலிகள் நினைப்பதும் கேட்பதுமுண்டு; அது தவறு. ஆத்மாவுக்குப் பெண்மை வந்தேறியா யிருந்தாலன்ரே அதனை ஏறிட்டுக் கொள்ளுவதாக நினைக்கலாம். அது வந்தேறி யன்றிக்கே இயற்கை வடிவமாகவே யுள்ளதென்பதும் இந்த வியாஸத்தினல் தெளியப் பெறலாகும்.

## — ஜீவாத்மக் குழந்தைக்குத் தாய்தந்தைகளை விவரித்தல் —

சரீரத்திற்குப் பிறப்பு உண்டே யொழிய ஆத்மாவுக்குப் பிறப்புமிறப்பு மில்லை யென்பது ஸாதாரணமான நூற்கொள்கை. * அஜாயமானோ பஹுதா விஜாயதே * [தைத்திரீய உபநிஷத்] என்கிற ச்ருதிவாக்யத்தையும், * அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன் * (திருச்சந்தவிருத்தம்-64) என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தையும் உற்றுநோக்குமிடத்து ஆத்மாவுக்கும் பிறப்பிறப்புகளுண்டென்று உணரலாம். ஆத்மா பிறக்கும்போது பெண்ணுகத்தான் பிறக்கின்றதென்று அறியக் கிடக்கின்றது. உடலைப் பிறப்பிக்க ஒரு தாயும் ஒரு தகப்பனும் ஏற்படுகிருர்கள். அப்படியே ஆத்மாவைப் பிறப்பிக்கவும் ஒரு தாயும் தகப்பனுமுளர். இதை மஹர்ஷிகளே சொல்லிவைத்தார்கள்—*சரீரமேவ மாதாபிதரௌ ஜநயதஃ, ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம* என்ருர்கள் இதனல் ஆத்மாவுக்கு ஆசார்யன் பிதாவென்றும் 'வித்யா' மாதாவென்றும் விளங்கிற்று. வித்யா என்று சொல்லப்படுவது திருமந்த்ரமே யாகும். ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூபஜ்ஞானத்தை யுண்டாக்கினபோதுதான் இவ்வாத்மஸத்பாவமாகையாலே (ஸ்த்ரீலிங்கசப்தமான) வித்யையை மாதாவாகவும் ஆசார்யனைப் பிதாவாகவும் கொள்ளவடுக்கும். நம்மாழ்வார் ஆசார்யனை *தஞ்சமாகிய தந்தை* [திருவாய்மொழி 3-6-9] என்கிற சொல்லால் குறிப்பிட்டனர். 1. தந்தை. 2. ஆகிய தந்தை,

3. தஞ்சமாகிய தந்தை என்று மூவகைப் படுவர்கள் பிதாக்கள். 1. சரீரோத்பத்திக்கு மாத்திரம் ஹேதுவாயிருந்து 'ஸ பித்ரா ச பரித்யக்தஃ (ஸ்ரீராமா-ஸுந்) இத்யாதிப்படியே ஆபத் காலங்களிலே கைவிடுகின்ற பிதா வெறும் தந்தை. 2. உலகுக்கெல்லாம் தந்தை யென்று பேர்படைத்து ஆபத்துக்களிலும் ரக்ஷிக்குமவனான ஸர்வேச்வரன் ஆகியதந்தையெனத் தகுவன். 3. அவனுங்கூட * ஸம்ஸாரபந்த ஸ்திதிமோக்ஷஹேதுஃ* என்கிறபடியே ஸம்ஸார மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருப்பன்; அப்படியன்றியே ஸ்வரூபத்தை யுண்டாக்குமவனாய் ஒரு தசையிலும் கைவிடாதே ஹிதைஷியாய் உஜ்ஜீவனத்திலேயே ஊன்றிப் போருமவனாயிருந்து கொண்டு மோக்ஷைகஹேதுவாய் ஸர்வாத்மநா சரண்யனாயிருக்கு மாசார்யன் 'தஞ்சமாகிய தந்தை' எனத்தகுவன். ஆக, ஜீவாத்மாவாகிற பெண்குழந்தைக்கு வித்யை தாயென்றும், ஆசார்யன் தந்தை யென்றும் தேறிற்று.

## — ஜீவாத்மக் குழந்தை வளர்ந்து செல்லும்விதம் —

இப்படி வித்யை என்கிற தாயினிடத்தில் ஆசார்யனாகிற தந்தையினால் பெறுவிக்கப்பட்ட ஆத்மக் குழந்தையானது வளர்ந்துவருகிற விதம் இனிச் சொல்லப்பட வேண்டும். உலகில் குழந்தையை வளர்ப்பவர்கள் தேனும் பாலுமமுதுமான போக்ய வஸ்துக்களையிட்டு வளர்ப்பர்கள். இங்கும் அவ்வண்ணமாகவே * எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம் * (பெரிய திருமொழி 6-10-6) என்றும், * எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ்சோலைக் கோனே * என்றும் சொல்லுகிறபடியே தேனும் பாலுமமுதும் போலே பரம போக்யமான பகவந்நாமங்களையும் பகவத் விஷயத்தையுமிட்டு ஆசார்ய பிதாவால் இக்குழந்தை வளர்க்கப்படுகிறது. *ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டுபோனான் * (பெரியாழ்வார் திருமொழி 3-8-4) என்கிற பாசுரத்தையும் சேர்த்து நோக்கினால் இக்குழந்தையானது அநந்யார்ஹ சேஷத்வாதிகளாலே ஸ்ரீ மஹாலக்ஷ்மியோடொக்க வளர்க்கப்படுகிற தென்னுமிடமும் திருமாலாகிற நாயகனால் கைக்கொள்ளப்படுகிற தென்னுமிடமும் தெரியவரும்.

## — ஜீவாத்மக்குழந்தைக்கு ஏற்றவரன் பரமபுருஷனே —

இப்படி குழந்தை வளர்ந்துகொண்டே செல்கின்றது. விவாஹத்திற்கு ஏற்ற வயதும் வருகின்றது. உலகில் விவாஹத்தை நடத்த முற்படுமவர்கள் பல விஷயங்களைப் பார்க்கிறார்கள். * கந்யா வரயதே ரூபம் மாதா வித்தம் ச்ருதம் பிதா, பாந்தவாஃ குலமிச்சந்தி ம்ருஷ்டாந்நமிதரே ஜநாஃ* என்று சொல்லுகிறபடியே, பெண்ணானவள் அழகைப்பார்ப்பள்; பெண்ணைப்பெற்றவள் ஐச்வர்யத்தை விரும்புவள்; பிதாவானவர் ஜ்ஞாநஸம்பத்தியை நோக்குவர்; உற்றாருறவினர் தாங்கள் கலந்துபரிமாறுகைக்கு உரிய குலத்தை யபேக்ஷிப்பர்கள்; மற்றைப்படி வழிப்போக்கர்களா யிருப்பவர்கள் வயிறார நல்லுணவு கிடைப்பதை நோக்கியிருப்பர்கள். அழகும் செல்வமும் அறிவும் குலமு முணவுமெல்லாம் ஒருங்கே ஒன்று சேரப்பெற்ற வரன் உலகில் வாய்ப்பது அரிதே. ஏதோ ஒன்றிரண்டு நலம் ஒருவாறு சேரும். இவையெல்லாம் பரிபூர்த்தியாக ஒன்றுசேர்ந்த விடம் எம்பெருமானே

யாவன். அழகைப்பற்றிச் சொல்லில், * எழிலுடையவம்மனைமீர்! என்னரங்கத்தின்னமுதர் குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழிலெழுகமலப் பூவழகர் * (நாச்சியார் திருமொழி 11-2) என்னும்படி யிருப்பன், செல்வத்தைப்பற்றிச் சொல்லில் * பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதும் சோராமே ஆள்கின்ற வெம் பெருமான், செங்கோலுடைய திருவரங்கச் செல்வனூர்* (ஷை 10-3) என்னும்படியே உபயவிபூதிநாயகத்வமாகிற செல்வம் அநந்யஸாமாந்யமானது, கல்விச் செல்வத்தைப் பற்றிச் சொல்லில் * கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினலருள் செய்தவராய், * இவர் வாயில் நல்வேத மோதும் வேதியர் வானவராவர் தோழீ * (பெரியதிருமொழி 9-2-1) என்னும்படி யிருப்பவராகையாலே அதிலும் உயர்வறவுயர்ந்தவர். இனி குலத்தைப்பற்றிச் சொல்லிலோ * குலந்தரும் ................ நாராயணுவென்னும் நாமம் * (பெரியதிருமொழி 1-1-9) என்று தன் பெயரைச் சொன்னவர்களுக்கெல்லாம் மாசில் குடிப்பிறப்பைத் தருமவன் ஸ்வயம் ஸத்குலப்ரஸூத னென்பது சொல்லவேணுமோ? இனி ம்ருஷ்டான்னத்தில்தான் குறையுண்டோ? * கணைநாணிலோவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே! ஓவாத வூணுக வுண் * (பெரிய திருவந்தாதி,) * உண்டு களித்தேற்கு உம்பரென்குறை * (திருவாய்மொழி 10-8-7) என்னும்படியாக கல்யாணகுண ம்ருஷ்டான்னம் அபரிமிதம். ஆகவிப்படி ஒன்றிலும் குறையில்லாதவரன் ஸர்வேச்வரனே யாகையாலே அந்த வரனுக்கு வாழ்க்கைப்படுவதற்காகவே இந்த ஜீவாத்மக் குழந்தை வளர்க்கப்பட்டு வருகிறது. ஆனதுபற்றியே இக்குழந்தையை நோக்கிச் சொல்லுமிடத்து * பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்! * (திருவாய்மொழி 6-5-10) என்றும், * காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப் பாவை யொப்பாள் * (பெரியதிருமொழி 3-7-9) என்றும் சொல்லப்படுகிறது.

## — ஜீவாத்மக் குழந்தைக்கும் ஆசார்ய பிதாவுக்கும் ஸம்வாதம் —

ஜநகசக்ரவர்த்தியால் பெற்று வளர்க்கப்பட்டுவந்த ஸீதாபிராட்டியானவள் * பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா, சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாத அப்லவோ யதா * (ஸ்ரீ ராமா. அயோ. 118-34.) என்று தானே தன் வாயாற் சொல்லும்படியாக அவளுடைய பிதா அநுரூபனுனவரன் காணுமையாலே சிந்தைக்கடலில் ஆழ்ந்திருந்தா னென்று தெரியவருகின்றது. இந்த ஜீவாத்மக் குழந்தையைப் பெற்ற ஆசார்யனுகிற பிதா அப்படி சிந்தைக்கடலில் ஆழவேண்டிய அவசியமில்லை; தகுந்த வரனை முன்னுடியே தான் ஸங்கல்பித்திருக்கையாலே அந்த வரன் இக்குழந்தைக்கும் ஸ்ப்ருஹணீயனுயிருக்கிருனு? என்பதொன்றே பார்க்கவேண்டியதாயிற்று. குழந்தையைக் கேட்கிருர் பிதா—'அம்மா! உனக்கு விவாஹத்திற்குரிய வயது வாய்த்து விட்டதே, இனி விவாஹம் நடக்கவேணுமே; யாரை நீ மணந்துகொள்ள விரும்புகிருய்?' என்று. அதற்குக் குழந்தை சொல்லுகிற விடை யாதெனில்; * வானிடைவாழு மவ்வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்த அவி, கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப, ஊனிடையாழி சங்குத்தமற்கென்று உன்னித்தெழுந்த வென்தடமுலைகள்,

மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன் * (நாச்சியார் திருமொழி 1-5.) என்றும், * அங்கைத்தலத்திடை யாழிகொண்டானவன் முகத்தன்றி விழியே னென்று, செங்கச்சுக்கொண்டு கண்ணாடையார்த்துச் சிறுமானிடவரைக் காணில் நாணுங் கொங்கைத்தலமிவை நோக்கிக் காணீர் கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா * (ஷெ 12-4.) என்றும், * அன்றிப்பின் மற்றொருவற்கென்னைப் பேச லொட்டேன் மாலிருஞ்சோலை யெம்மாயற்கல்லால், கொற்றவனுக்கிவளாமென் றெண்ணிக் கொடுமின்கள் கொடீராகில் கோழம்பமே * (பெரியாழ்வார் திருமொழி 3 4.5.) என்றும் இங்ஙனேயாயிற்று விடை கூறுவது. இது கேட்டுப் பிதா வுக்குப் பரமஸந்தோஷம்; நம் எண்ணமே இக் குழந்தைக்கு முள்ளதாயிற்றே; நாமொன்று நினைக்க இவள் வேறொன்று நினையாதபடி நாம் நினைத்த வரனையே இவளும் வரிக்கும்படியாக நேர்ந்ததே யென்று பரமானந்த மடைந்து பின்னையும் குழந்தையைக் கேட்கிறார்—குழந்தாய்! நீ பகவானை மணந்துகொள்வதாகச் சொல்லுகிறாயே; அவர் மணந்துகொள்வரா? ஸகல ஜகத்பிதாவான அவர் ஒருவர்க்கும் பதியாகவோ பர்த்தாவாகவோ ஆகக்கூடியவரன்றே; அவரை நீ வரும்பிப் பயனென்? என்கிறார். அதற்குக் குழந்தையின் விடை:—'பிதாவே! ஏன் அப்படிச் சொல்லுகிறீர்? நீர் எனக்குக் கற்பித்த முதுமொழிகளில் * **பதிம்** விச்வஸ்யாத்மேச்வரம் * (நாராயணாநுவாகம்) என்றும், 'கௌஸல்யா **லோகபர்த்தாரம்** ஸுஷுவே யம் மநஸ்விநீ * (ஸ்ரீராமா. ஸு. 38-58.) என்றும், *பணவாளர வணைப் பற்பல காலமும் பள்ளிகொள் மணவாளர் * (நாச்சியார் திருமொழி 10 6.) என்றும் அந்தப் பரமபுருஷரை விச்வபதியென்றும் லோகபர்த்தா வென்றும் மணவாளப்பிள்ளை யென்றும் தெரிவித்திருக்கவில்லையா? என்னைப்போல் எத்த னையோ பேர்களுக்கு அவர் பதியாகவும், பர்த்தாவாகவும், மணவாளராகவும் வாழ் கின்றவரல்லரோ? அவர் எனக்குப் பர்த்தாவாகத் தடையென்? என்றாள். அது கேட்டு உள்கனிந்த தந்தை மீண்டும் சொல்லுகிறார்—'குழந்தாய்! பல கோடி நூறா யிரம்பேர்களை மணவிமாராகக் கொண்டிருக்கின்ற விச்வபதி லோகபர்த்தாவை நீ மணந்துகொண்டாயாகில் பட்டமஹிஷிகளான முன்னைத் தேவிமார்கள் பலரிருக்க உன்னை அவர் கண்ணெடுத்துப் பார்ப்பரோ? ஏகதாரவ்ரதனான வொரு வரனை மணந்துகொண்டாலல்லவோ நெஞ்சு குளிர வாழலாம்; ஆலோசித்துப் பார்' என்றார்; அதற்குக் குழந்தை கூறுகின்றது—'அப்பா! என்னை நீர் பரீக்ஷிக்கிறீர் போலும்!, "அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலுமேற்குமாபோலே பெரியபிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு போரும்" (தத்வத்ரயம். 3-11.) என்கிற அற்புதமான சூர்ணையை நீரே சந்தைசொல்லிக் கொடுத்துவைத்து இப் போது இங்ஙனேசொல்லுகிறீரே; தாய்ப் பசுவானது அன்றுதான் ப்ரஸவித்த கன் றுக்கு இரங்கி முன்பு தான் ஸ்நேஹித்துக் கொண்டுபோந்த முன்னணைக்கன்றை முட்டித்தள்ளுவதும், தனக்கு போக்யமான புல்லையிடவந்தவர்களையுங்கூட கொம் பிலே கோத்தெடுத்துக் குளம்பாலே மிதித்துத் தள்ளுவதும் செய்யுமாபோலே பரிரப்பணுதிபோகங்களுக்கு ஏற்ற பெரியபிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹித்துக் கொண்டுபோந்த நித்யஸூரிகளையும் தள்ளிவிட்டு, இன்று கைக்கொண்டவர்களை

ஸ்நேஹித்துக்கொண்டு போருகிறவரன்றோ அவர், அப்படிப்பட்ட வத்ஸலரை யன்றி வேறொருவரை என் மனம் பற்றாது' என்று.

## —ஜீவாத்மக் குழந்தைக்குப் பாணிக்ரஹண மங்களம்—

இது கேட்ட தஞ்சமாகிய தந்தை பரமகுதூஹலங்கொண்டு பாணிக்ரஹண மங்களத்தை நிறைவேற்றத்தொடங்கினார். *பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து* (பெரியாழ்வார் 4-2 8.) என்கிறபடியே ஆசாரியர் பரமாத்மாவினுடைய ப்ரதிநிதியாகையாலே "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கலஸூத்ரம் போலே திருமந்த்ரம்" (முமுக்ஷுப்படி—113.) என்று திருமங்கலியமாகிய திருமந்த்ரத்தை (அல்லது) திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தைக் குழந்தைக்குக் கண்டஸ்தமாக்கினார். * பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா * என்று பாணிக்ரஹண ப்ரகரணம் வந்தவாறே * பறவை யேறு பரம்புருடா! நீயென்னைக் கைக்கொண்டபின் * (பெரியாழ்வார் 5-4-2) என்னும்படியாகப் பெரியதிருவடியை மேற்கொண்டு பரமபுருஷன் வந்து கைக்கொண்டு பாணிக்ரஹணமங்கலத்தை நிறைவேற்றினானாயிற்று.

## —விவாஹமான லௌகிகப் பெண்களின் வாழ்க்கை—

ஜீவாத்ம மணாட்டிக்குப் பாணிக்ரஹணமங்கலம் நிறைவேறிற்று. இக்காலத்து விவாஹமாக இருந்தால் உடனே புக்ககம் புக்கு பர்த்தாவோடே கூடிக் களிக்க ப்ராப்தமாய்விடும். இது ப்ராசீந சாஸ்த்ரரீதியின் கட்டளையான விவாஹமாகையாலே பருவம் நிரம்பின பின்பே பர்த்தாவோடு சேரவேண்டுமாதலால் பருவம் நிரம்புங் காலத்தை யெதிர்பார்த்து மணமகள் பிறந்தகத்திலேயே வாழவேண்டியதாகின்றது. அப்படி வாழுங்காலத்திலே குலமகள் நல்ல நாயகன் நமக்கு வாய்த்தும் அவனை இப்போதே யநுபவிக்க ப்ராப்தியில்லையே யென்று வருந்திக் கிடப்பதும், பரபுருஷனைக் கண்ணெடுத்தும்பாராதே தன்கணவனுடைய பெருமைகளையே சிந்தித்துப் பேசிக்கொண்டிருப்பதும், கணவனிடத்து அன்புமிக்க உறவினரிடத்து அன்பு பூண்டொழுகுவதும், அடிக்கடி கணவன் வந்து ஆசையைப் பெருக்கப் பெறுவதும், தானும் இடையிடையே புக்ககம் சென்று வருவதும், கணவனோடு இடைவீடின்றிக் கூடிவாழுங்காலம் எப்போது வாய்க்குமோவென்று பாரித்துக் கொண்டிருப்பதும் அப்படிப்பட்ட நாள் குறுகக் குறுகக் குதூஹலம் விஞ்சி 'புக்ககம் போய்வருகிறேன்; பர்த்ருக்ருஹம் சென்று வருகிறேன்' என்று சிரபரிசயமுள்ளவர்களிடத்தே சொல்லிக்கொள்வதுமாயிருப்பள். இந்த ஜீவாத்ம மணவாட்டியும் அங்ஙனே யாயிற்று இருப்பது. [இவட்குப் பிறந்தகம்—லீலா விபூதி; புக்ககம்—நித்ய விபூதி] பிறந்தகத்தில் வாழுமளவும் இந்த ஜீவாத்மக் குழந்தையின் போதுபோக்கின் ப்ரகாரம் இனித் தெரிவிக்கப்படுகிறது.

## —ப்ரக்ருத ஜீவாத்மக்குழந்தையின் பிறந்தக வாழ்க்கைவீறு—

கணவனைக் கிட்டிப் பரிமாறப் பெறாமைக்கு வருந்தியிருக்கும் குலமகள் போல, இவளும் * கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தையமுதை நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு* (திருவாய் 5—1—5) என்று, சேர்ந்து பரிமாற வொண்ணாதபடி அனுபவவிரோதியான சரீரம் இடைச் சுவராயிருக்கிற படிக்கு வருந்தித் துடித்துக் கிடப்பள்.

குலமகள் தனக்கு வாய்த்த புருஷனையன்றி மற்றொருவனை நெஞ்சாலும் நினையாமலும் கண்ணெடுத்தும் பாராமலுமிருப்பதுபோல. இவளும் *மறந்தும் புறந்தொழா மாந்தர்* (4. திருவந்தாதி) என்னும்படிக்கு ப்ரதமோதாஹரணமாயிருந்து கொண்டு *மற்றோர் தெய்வம் தேறேனுன்னையல்லால் திருவிண்ணகரானே! * (பெ. திரு. 6-3 7) என்றும், * கல்லாதவரிலங்கை கட்டழித்த காகுத்தனல்லா லொரு தெய்வம் யானிலேன் * (நான்முகன்-53) என்றும், * தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே * (திருவாய் 3-6-8) என்றும் * உன்னித்து மற்றொரு தெய்வந் தொழாளவனை யல்லால் * (ஷை 4 6-10) என்றும், சிலையினாலிலங்கைசெற்ற தேவனே தேவனாவான் * (திருமாலை-7) என்றும், * அண்டர் கோனணியரங்கனென் னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே. * (அமல-10) என்றும், * விழிக்குங் கண்ணிலேன் நின் கண் மற்றல்லால் வேறொருவரோ டென்மனம் பற்றுது * (பெரியாழ் 5-1-2) என்று மிப்படிப்பட்ட பாசுரங்களினால் தேவதாந்தரங்களினிடத்தில் வைராக்யத்தைக் காட்டிக்கொண்டு நிற்பள்.

தனது கணவனுடைய பெருமைகளையே சிந்தித்தும் பேசியும் போதுபோக்கும் குலமகள் போல இவளும் * குரவையாய்ச்சியரோடு கோத்ததும் குன்றமொன்றேந்தியது முட்பட மற்றும் பலவும், * கேயத் தீங்குழலூதிற்றும் நிரை மேய்த்ததும் கெண்டை யொண்கண் வாசப் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும் மற்றும் பலவும், பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்டது முதலியனவும் இரவுநன்பகலும்தவிர்கிலாது சிந்தித்தும் பேசியும் போதுபோக்குவள். கணவனிடத்து அன்புமிக்க உறவினரிடத்தே அன்பு பூண்டொழுகும் குலமகள் போல இவளும் * மெய்யடியார்கள் தம் ஈட்டங்கண்டிடக் கூடுமேல் அதுகாணுங் கண்பயனாவதே * (பெருமாள் திரு. 2-1) என்றும். * நம்பனை நரசிங்கனை நவின்றேத்துவார்களைக் கண்டக்கால், எம்பிரான் தன சின்னங்கள் இவரிவரென்றாசைகள் தீர்வனே * (பெரியாழ். 4-4-9.) என்றும் பாகவத ப்ராவண்யாதிசயத்தைப் பேசியலற்றிக் கொண்டிருப்பள்.

குலமகளானவள் அடிக்கடி கணவன் தன்னிடம் வந்து காதலைப் பெருக்கப் பெறுவதுபோல இவளும் * தேவார் கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும் ஆவாவென்றருள் செய்து அடியேனொடுமானனே * (திருவாய் 5 1-9.) என்றும் * அந்தாமத்தன்பு செய்து என்னாவிசேரம்மானுக்கு * (ஷை 2-5-1,) என்றும், * வைகுந்தா மணிவண்ணனே என்பொல்லாத் திருக்குறளாவென்னுள் மன்னி வைகும் வைகல்தோறு மமுதாயவானேறே * (ஷை 2-6-1.) என்றும் சொல்லும்படி அடிக்கடி எம்பெருமான் வந்து கலக்கப் பெறுவள் ; * ஊரவர் கவ்வை யெருவிட்டு அன்னை சொல் நீர்மடுத்து ஈரநெல்வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ் செயுள், பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி * (ஷை 5 3-4.) என்னும்படி அவன் வரும்போதெல்லாம் வடிவழகைக்காட்டிக் காதலை வளர்க்கவும் பெறுவள். சில விசேஷ காலங்களில் குலமகள் புக்ககத்திற்குஞ் சென்று வருவது போல இவளும் * ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்டசதிர் கண்டு * (திருவாய் 4-9-10) என்னும்படி திருநாட்டுச் சதிரையும் காண்பள். கணவனோடு நித்யஸம்ச்லேஷம் வாய்ப்பது என்றைக்கோ வென்று குலமகள் பார்த்திருப்பதுபோல இவளும் * கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ? *

(ஷை 6-9-8) என்றும் * என்றேயென்னை உன்னேரார் கோலத்திருந்தடிக்கீழ் நின்றே யாட்செய்ய நீ கொண்டருள நினைப்பதுதான் * (ஷை 8-3-8) என்றும் பாரித்துக்கொண்டே யிருப்பள்-

குலமகள் கணவனோடு நிரந்தரமாகக் கூடப்பெறும் நாள் குறுகக் குறுகக் குதூஹலம் விஞ்சியிருக்குமாபோல இவளும் *நாமுமக்கறியச் சொன்ன நாள்களும் நணியவான * என்னும்படி அந்நாள் ஸமீபித்தவாறே * நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகு நெஞ்சே! * என்றும் * உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன் * என்றும் சொல்லிக் குதூஹலம் விஞ்சியிருப்பள். குலமகள் புக்ககத்திற்குப் புறப்படும்போது சிரபரிசயமுள்ளவர்களிடம் சென்று சொல்லிக்கொள்ளுமா போலே இவளும் (பெரிய திருமொழியில் 10-1) * ஒருநல் சுற்றமென்னும் பதிகத்திலே * நெருநெல் கண்டது நீர்மலை, இன்று கண்ணமங்கையுட் காண்டுமே * *வேங்கடத்துச்சியில் கண்டுபோய்—சென்று காண்டும் தண்காவிலே * ஆலியில் கண்டு மகிழ்ந்து போய்-காண்டும் நாங்கூரிலே * பேரில் வணங்கிப்போய் —சென்று வெள்ளறைக்காண்டுமே *நறையூர்க் கண்டு—சென்று காண்டும் மெய்யத்துள்ளே* * சேறையில் கண்டு போய்—யாம் குடந்தைச் சென்று காண்டுமே * அழுந்தையில் கண்டு போய்-சென்று காண்டும் வெஃகாவுளே *மாலிருஞ்சோலைத் தொழுதுபோய்-விண்ணகர்க் காண்டுமே* கோட்டியூர்க் கண்டு போய்—சென்று காண்டும் நாவாயுளே* என்று சொன்ன கணக்கிலே பல திருப்பதி யெம்பெருமான்கள் பக்கலிலே அநுஜ்ஞை பெற்றுக்கொள்வள். பிறகு புக்ககம் செல்லப் புறப்படுகிறுள்.

குலமகள் பிறந்தகத்தில் வாழ்கிறபோது யார் யாருடன் அன்பு பூண்டொழுகிக் கலந்து பரிமாறினுளோ அவர்களை யெல்லாம் விட்டு அகலுகிறுள் புக்ககம் போம்போது. * முற்றிலும் பைங்கிளியும் பந்து ஊசலும் பேசுகின்ற சிற்றில் மென் பூவையும் விட்டகன்ற செழுங்கோதை* (பெரிய திருமொழி 3-7-8) என்கிறபடியே இவளும் லீலா விபூதியிலுள்ள லீலாபரிகரங்களை யெல்லாம் விட்டுப் புறப்படுகிறுள். மணமகள் புறப்படும்போது மங்கள வாத்யகோஷம் மங்களாசாஸனம் முதலியன நடை பெறுமாபோலே இவளுக்கும் * சூழ் விசும்பணிமுகில் தூரியம் முழக்கின * (திருவாய் 10-9) என்கிற பதிகத்திற்படியே ஸமுத்ர பேரீகீத காஹள சங்க ஆசீஸ் ஸ்துதி கோலாஹலங்கள் விளைகின்றன. வழியில் ஆங்காங்கு பந்துக்களிருந்தால் அவர்கள் சிறப்புகள் செய்யப் பெற்றுச் செல்லுவள் மணமகள்; அப்படியே இவளும் * முக்தோர்ச்சிர்திந பூர்வபக்ஷ ஷடுதங் மாஸாப்த வாதாம்சுமத் க்லௌ வித்யுத் வருணேந்த்ர தாத்ரு மஹிதஃ * என்கிறபடியே அர்ச்சிராதி மார்க்கத்திலுள்ளாரால் சிறப்பிக்கப் படுகிறுள். மணமகள் கணவனுடைய ஊரெல்லையிலே சென்று சேர்ந்தவாறே ஓரிடத்தில் தங்கி அழுக்கறும்படி நீராடப் பெறுவள்; அப்படியே இவளும் * ஸீமாந்த ஸிந்த்வாப்லுதஃ * என்கிறபடியே விரஜாநதியிலே குடைந்து நீராடி அழுக்கு அறப்பெறுவள். பிறகு பர்த்தாவின் க்ருஹத்திலிருந்து மணமகளுக்குப் புஷ்பமாலைகள் ஸுகந்த சூர்ணங்கள் பட்டுப் புடவைகள் சிறந்த பூஷணங்கள் கொண்டுவந்து அலங்காரம் செய்யுமா போலே இவளுக்கும் * தம் [illegible] சதாநி அப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி, சதம் மாலா ஹஸ்தாஃ சதமஞ்ஜநஹஸ்தாஃ சத[illegible] சூர்ண

ஹஸ்தா:; சதம் வாஸோஹஸ்தா: சதம் பூஷணஹஸ்தா:..............தம் ப்ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி * (சாந்தோக்யம்) என்கிறபடியே ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்கள் நூறு நூறுபேராய் ஐந்துவகுப்பாகப் புஷ்பமாலாதிகளான ஐவகைச் சிறப்புகளைக் கொணர்ந்து ப்ரஹ்மாலங்காரங்கள் செய்வர்களாயிற்று. பிறகு பர்த்தாவின் க்ருஹத்தில் நுழையுமளவில் லக்ஷ்மீ கல்யாணம் பாடி மங்களாசாஸனம் செய்வதும் மங்கள தீபாதிகளை ஏந்திக்கொண்டு எதிரே வருவதுமாக நிகழும்; இவளுக்கும் * மிக்க வோராயிரத்துள் இவை பத்தும் வல்லாரவரைத் தொக்குப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்வரேழையரே* (திருவாய் 7-6-11) என்கிறபடியே அங்குள்ளார் திரள நின்று மங்களாசாஸனம் பண்ணி சாமரம் பணிமாறுவர்கள். * நிதியும் நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும், மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே * (ஷ 10-9-10) என்கிறபடியே மங்களாவஹமான பூர்ணகும்ப தீபாதிகளைத் தரித்துக்கொண்டு எதிர்கொண்டழைப்பு நேரும். இத்தகைய வைபவங்களுடனே மணமகள் பர்த்தாவின் மாளிகையிலே புகுந்து பர்த்தாவோடேயிருக்குமாபோலே இவளும் * மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பாரே * (நாச்சியார் 3-10) என்கிறபடியே வைகுந்தம் புக்கிருந்து முழுவேழுலகுக்கும் நாயகனோடே கூடியிருப்பள். இவை எவ்வளவு பொருத்தமான சேர்த்திகள்!

## —ஜீவாத்ம பரமாத்ம போகத்தில் விலக்ஷணமான சாஸ்த்ரார்த்தம்—

கீழ்ச்சொன்ன உபலாலனங்களோடே மணமகள் கணவனோடு கூடினபின்பு தம்பதிகளின் பரிமாற்றம் உலகமறியும். ஜீவாத்ம பரமாத்மாக்கள் பரஸ்பரம் கூடின பின்பு இவர்களுடைய பரிமாற்றம் சாஸ்த்ர வேத்யமாயிராநின்றது. பெண்பிள்ளை கணவனுடைய கட்டிலிலே ஏறுமாபோலே ஜீவாத்ம மாதர்க்கும் அங்கு பகவதநுபவத்திற்காகப் பர்யங்காரோஹணமுண்டு; அங்கு ஸர்வாச்சர்யமயமான திவ்ய பர்யங்கத்திலே * தமேவம்வித் பாதேந அத்யாரோஹதி * என்று பாதபீடத்திலே அடியிட்டேறுவதாக உபநிஷத்து ஓதுகின்றது. மேல் நிகழுமநுபவத்தைப் பற்றிச் சில விஷயங்கள் தெரிவிக்கவேண்டியவையுண்டு. பரமாத்மாவை யநுபவிக்க ஜீவாத்மா செல்லுவதாகவும் பரமாத்மாவை ஜீவாத்மா அநுபவிப்பதாகவும் ஆபாதப்ரதீதியிலே உலகம் நினைக்கிறது. அது தவறு. ஜீவாத்மாவைப் பெறுதற்காகப் பரமாத்மா செய்து போரும் க்ருஷிவிசேஷங்களை நன்கு உணர்ந்தவர்கள் ஜீவாத்ம லாபமே பரமாத்மாவுக்குக் கனத்த பேறு என்பதைத் திடமாகக் கொள்வர்கள். * ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்று கீதாசார்யன் நிர்வேதத்தோடு சொல்லுவதை உற்று நோக்கினால் மஹாத்மாவான ஜீவாத்மாவைப் பெறுதற்கு அவன் பல பாடுகள் படுகிறானென்பது நன்கு விளங்கும். * ந ச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதாவர்த்தயிஷ்யதி * என்று ஸ்ரீபாஷ்யத்தின் முடிவிலுள்ள ஸ்ரீஸூக்தியும் இவ்விஷயத்தை வற்புறுத்துகின்றது. திருமந்த்ரத்திலுள்ள (நம:) பதமானது அசித்வத் பாரதந்திரியத்தைச் சொல்லுகிறதென்று முமுக்ஷுப்படியிலே அருளிச்செய்த பிள்ளை லோகாசாரியர் (அங்கு. 92) "அதாவது போகதசையில் ஈச்வரனழிக்கும்போது நோக்கவேணுமென்று அறியா தொழிகை" என்றொரு சூர்ணையருளிச் செய்கிறார். இதனால்

நம: பதார்த்தம் பரமபதத்தில் மிகவும் ஞாபகத்திலிருக்கவேணுமென்று காட்டினபடி, திருநாட்டில் போக்தாவான எம்பெருமான் ஜீவாத்மாவோடே கலந்து பரிமாறு மளவில் தன் வியாமோஹாதிசயத்தாலே தான் தாழ நின்று பரிமாறுவனென்றும். அந்நிலையில் ஜீவாத்மாவின் சேஷத்வம் அழிந்துபோய்விடுமென்றும், அது அழிந்துபோகாதபடி அதைக் காப்பாற்றிக்கொள்ள வேணுமென்று ஜீவாத்மா நினைத்து அவனுடைய தலைதடுமாறுன போகத்திற்கு இடையூறு செய்தானுகில் அது பாரதந்த்ரியத்திற்கு விருத்தமாகுமென்றும். அப்படியாகாமே பாரதந்த்ரியமே ஜீவிக்கும்படி பரமாத்மாவின் யதேஷ்ட போகங்களுக்கு இசைந்திருப்பது தான் ஸ்வரூபமென்றும் அருளிச் செய்கிற விதனுல், திருநாட்டில் எம்பெருமான் இத் தலையை யநுபவிக்கு மநுபவம் வாசாமகோசரமென்று விளங்காநின்றது. இவ்வநு பவத்தினுலுண்டாகு மாநந்தமும் அவனுக்கேயாம். ‘இத்தலையால் அவனுக்கு இவ்வளவு ஆனந்த முண்டாகிறதே!’ என்று அதை யநுஸந்திப்பதனுலுண்டாகு மானந்தமே இத்தலையைச் சேர்ந்ததாகும். இது தானும் சைதந்ய ப்ரயுக்தமாக வந்தததனை. சேதனனுன வாசிக்கு ஓர் ஆனந்தம் வேணுமே.

ஆக, ஜீவாத்மக் குழந்தையின் உத்பத்தி தொடங்கி விவாஹம் நடுவாகப் பரமபோக பர்யந்தமாக நிரூபித்த விதனுல் ‘க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்’’ என்றதன் கருத்து விசதீகரிக்கப்பட்டது தவிர, உகாரார்த்த மான அநந்யார்ஹத்வத்தின் வைபவமும் மூதலிக்கப்பட்டதாயிற்று. .... *

---

## ‘‘ச்ரமணீவிதுரரிஷிபத்னிகளைப் பூதராக்கின புண்டரீ காக்ஷன் நெடுநோக்கு’’ (ஆசார்யஹ்ருதயம்)

### — மற்றுேர் ஆசார்யஹ்ருதய சூர்ணையின் விவரணம் —

எம்பெருமானுடைய திவ்யாவயவங்களில் எந்த அவயவம் நமக்கு மிகவும் உத்தேச்யமான தென்று ஆராயுமிடத்து, திருவடியே தஞ்சமென்று முடிவுசெய்யக் கூடும். *அஞ்சேலென்று கைகவியாய்* என்று பிரார்த்திக்குமாறு அபய முத்திரை யோடு கூடிய திருக்கையே தஞ்சமென்று கருதவுங்கூடும். ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வ சதகத்தில் *விபோர் நாபீபத்மோ விதிசிவநிதாநம் பகவத: ததந்யத் ப்ரூபங்கீபரவ திதி ஸித்தாந்தயதி ந:* என்று பட்டரருளிச் செய்வதற்கு மூலமான *முதலாந் திரு வுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர் ; முதல்வா! நிகரிலகு காருருவா! நின்னகத்ததன்றே புகரிலகு தாமரையின் பூ.* (பெரியதிருவந்தாதி) என்ற நம்மாழ்வார் பாசுரத்தின்படி பரத்வநிர்ணயகமான திருநாபியே தஞ்ச மென்று கருதவுங் கூடும். திருக்கண்ணுேக்கமே மிக முக்கியமானதென்று நிர்ண யிப்பதில் ஔசித்யாதிசயமுண்டு. *ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மது ஸூதனः, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயः ஸ வை மோக்ஷார்த்தசிந்தக:* என்கிற படியே நாம் பிறப்பதற்கு முன்னே கருக்குழியிலேயே நம்மைத் திருவுடையராக்கு கின்ற தன்றுே திருக்கண்ணுேக்கம். அதுதான் ஜாயமாந கடாக்ஷமென்பது.

## ஆழ்வாரும் ஆண்டாளுங்காட்டின திருக்கண்ணோக்கப் பெருமை —

நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போதே * துயரறு சுடரடி தொழுதெழுஎன் மனனே * என்று தம்முடைய திருவுள்ளத்திற்குத் தேவாதி தேவனது திருவடியையே தஞ்சமாகக் காட்டிக்கொடுத்திருந்தாலும், தமது முதற் பிரபந்தமான திருவிருத்தத்தில் * பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப் புண்டரீகம், நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம், ஒருவர் நம்போல் வருங்கேழ்பவருளரே * என்று அப்பெருமானுடைய திருக்கண்ணோக்கமே தமக்கு முந்துற முன்னம் ப்ராப்தமாயிற்றென்றும், அதுவே தம்முடைய சேமங்களுக்கெல்லாம் மூலகந்தமென்றும் அருளிச்செய்திருக்கக் காண்கிறோம். ஆண்டாளும் *திங்களு மாதித்தியனு மெழுந்தாற் போல், அங்கணிரண்டுங் கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல், எங்கண்மேற் சாபமிழிந்து * என்றருளிச் செய்கிறாள்.

## — சபரி காட்டின திருக்கண் பார்வைப் பெருமை —

இதிஹாஸ புராணங்களிலும் சென்று பார்ப்போம்; *ச்ரமணீம் தர்ம நிபுணாமபிகச்ச * என்று கபந்தன் சொன்ன அனந்தரம் *ஸோZப்யகச்சந்மஹாதேஜா: சபரீம் * என்கிறபடியே பெருமாள் தாமேசென்று விஷயீகரித்த வேடுவிச்சியானவள் (சபரி), * சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தன! * என்று, தேவரீருடைய அழகிய திருக்கண்பார்வையாலே என்னுடைய ப்ராப்தி ப்ரதிபந்தகங்க ளெல்லாம்போய்ப் பரிசுத்தையானேனென்று திருக்கண்ணோக்கின் பெருமையைத் தெரிவித்தாள்.

## —துரியோதனன் வாக்கில் வெளிவந்த திருக்கண்ணோக்கப் பெருமை—

பாண்டவர்களுக்காகக் கண்ணபிரான் தூதெழுந்தருளின காலத்திலே, வெள்ளமானது பள்ளத்திலே தானே சென்று விழுமாபோலே * நிவாஸாய யயௌ வேச்ம விதுரஸ்ய மஹாத்மந: * என்று விதுரர் திருமாளிகையில் தானே சென்று புக்கு *விதுரான்னானி புபுஜே சுசீநி குணவந்தி ச * என்று அவருடைய ஸ்பரிசமுள்ள தூயவமுதை விரும்பி யமுதுசெய்து பிறகு துர்யோதநாதிகளின் ஸதஸ்ஸிலே யெழுந்தருளினான்; அங்கே எதிரியான துர்யோதநன், ஞானத்தில் சிறந்த பீஷ்மாசார்யரையும் ஜாதியிற் சீரிய த்ரோணாசார்யரையும், செல்வத்தில் மிகுந்த தன்னையும் உபேக்ஷித்து விதுரரென்கிற வொரு சூத்ரருடைய அன்னத்தை புஜித்து வந்தானே யென்கிற சீற்றத்தினால் அதிக்ஷேபமாகச் சொல்லுகையில் *பீஷ்மத்ரோணாவதிக்ரம்ய மாஞ் சைவ மதுஸூதன, கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷலபோஜனம் * என்கிறான். இது துரியோதனன் கண்ணனை அதிக்ஷேபிக்கிற ப்ரகரணமென்பதில் ஸந்தேஹமில்லை. அப்படி அதிக்ஷேபிக்கும்போது 'மூர்க்க!, மூட!' என்றாற்போலே நிந்தோக்திகளை யிட்டுச் சொல்லவேண்டியிருக்க, 'புண்டரீகாக்ஷ!' என்று ஸம்போதித்திருக்கிறான் துர்யோதநன். இதை ரஸிகர்கள் ஆழ்ந்து விமர்சிக்கவேண்டும். புதிதாக விமர்சிக்க நமக்கு மதியேது? நமது பூர்வாசாரியர்கள் விமர்சித்துத் தெரிவித்தருளியிருக்கும் சீரிய பொருளை யெடுத்துக் காட்டுகிறோம். சீறிச் சொல்லச் செய்தேயும் 'புண்டரீகாக்ஷ!' என்று ஸம்போதன மிட்ட துர்யோதனனுடைய கருத்து யாதெனில், 'கண்ணா! உனது

அழகிய திருக்கண்ணோக்கினாலே விதுரர் ஸகல துரிதங்களும் கழியப்பெற்றுப் பரம பரிசுத்தராய்விட்டார்; அதனால்தான் அவருடைய அன்னத்தை நீ ஆதரித்து உண்ண ப்ராப்தமாயிற்று' என்று தான் தெரிந்துகொண்ட ஸமாதானத்தையும் பரவசமாகவே வெளியிட்டானாயிற்று. இப்படிப்பட்ட பெருமைவாய்ந்தது எம்பெருமானுடைய திருக்கண்ணோக்கம். .... .... .... .... *

## —மேலெடுத்த பாரதப்ரகரணத்தில் ப்ராஸங்கிகமானவொரு விமர்சம் —

இது நிற்க, இந்த ச்லோகத்தின் சார்பாகத் தோன்றியதோர் விசாரத்தைச் சிறிது விமர்சிப்போம். *கிமர்த்தம புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷலபோஜநம்* என்று துரியோதனன் கேட்டதற்குக் கண்ணபிரான் என்ன மறுமொழி கூறவேண்டும், என்ன மறுமொழி கூறியிருக்கிறான்? என்று பார்ப்போம். வ்ருஷலபோஜநம் கிமர்த்தம் புக்தம்? என்றது கண்ணபிரான் திருவுள்ளத்தைப் புண்படுத்தக்கூடிய வார்த்தை யாகையாலே அந்த வார்த்தை செவிப்பட்டவுடனே சீற்றச்சிவந்த கண்ணுடனே "பரமபாகவதோத்தமரான விதுரரை வ்ருஷலனென்கிறாயே பாவீ!' என்று கடிந்து கூறி 'அவர் சூத்ரரல்லர், ப்ராஹ்மணோத்தமர்களினும் மேம்பட்டவர்காண்' என்று மறுமொழி கூறியிருக்க வேண்டும். கண்ணபிரானோ அவ்விதமாக மறுமொழி கூறவில்லை. விதுரரைப் பற்றி ஒன்றுமே சொல்லாமல் * த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத, பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவாः * என்று வேறு விதமான உத்தரம் உரைத்திருப்பதாகக் காண்கிறது. சத்துருக்களிடம் சோறு உண்ணவுங் கூடாது, சத்துருக்களுக்குச் சோறிடவுங் கூடாது; துரியோதநா! நீ எனக்கு உயிர்நிலையான பாண்டவர்களை த்வேஷிப்பவனாதலால் எனக்கு த்வேஷியாகிறாய்; ஆகவே நான் உன்னிடம் சோறு உண்ணாதது நன்றே—என்று இவ்விதமான விடைகூறி யிருப்பதனால் விதுரரைப்பற்றித் துரியோதனன் சொன்ன தூஷணம் கண்ணபிரானுக்கு இஷ்டமே தவிர அநிஷ்டமன்று என்று சிலர் நினைக்க நேர்கின்றது. சிலர் என்ன வேணுமோ? ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில் இங்ஙனே பேசுகின்றார்; அவ்விடத்துப் பங்க்திகள் காண்மின்;—துர்யோதநன் *பீஷ்மத்ரோணா வதிக்ரம்ய..... புகதம் வ்ருஷல போஜநம்? * என்று கேட்க, * த்விஷதந்நம்...என்று உத்தர மருளிச்செய்கையாலே ஸ்ரீ விதுரருக்கு துர்யோதநன் சொன்ன ஜாதி விசேஷத்தை பகவான் இசைந்தானாயிற்று' என்று. ஆரியர்காள்! ஆசார்ய ஸார்வபௌமர்கள் 'கிமர்த்தம் புண்டரீகாக்ஷ!' என்றதில் சுவைப்பொருள் கண்டார்கள்; ஸ்வாமி தேசிகன் * த்விஷதந்நமித்யாதி யிலே சுவைப்பொருள் கண்டார். இவ்விடத்தில் ரஸிகர்கள் உய்த்துணர வேண்டிய விஷயம் யாதெனில்; உலகில் வாத ப்ரதிவாதங்களில் சதுரர்களானவர்கள் ப்ரதிவாதம் செய்யுமிடத்து ஒரு வாதத்திற்குப் பல பதில்கள் சொல்லக்கூடியதா யிருந்தாலும் அவற்றுள் எது முக்கியமாகக் கருதப்படுகின்றதோ, அதனையே சொல்லி நிற்பர்கள். ப்ரக்ருதத்தில் விதுரருடைய உத்கர்ஷம் கண்ணபிரானுக்கு முக்கியமாக விவக்ஷிதமன்று; * ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதாः* *கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம் * இத்யாதிகளான பல ப்ரமாணங்களினால் ஸித்தமான விஷயத்தை இங்கு ஸாதிக்கவேண்டிய ஆவச்யகதை இல்லை. புண்டரீகாக்ஷ! என்று ஸம்போதித்த துர்யோதநனுக்கு அது தெரிந்தேயிருக்கின்றது. தன் உயிர்நிலையான பாகவதர்களுக்குத் தீங்கிழைக்குமவர்களைத் தான் தன்னுடைய த்ரோஹியாக நினைப்பனென்பதே இங்கு முக்கியமாக விவக்ஷிதமாதலால் அதுவே சொல்லப்பட்டது. இதனால் விதுரர்க்கு துரியோதனன் சொன்ன அவத்யத்தைக் கண்ணபிரான் இசைந்ததாகத் தேறாதென்பது பரமாசாரியர்களின் திருவுள்ளம். *

## முமுக்ஷுப்படியில் ஒரு விலக்ஷண ஸூக்தி

— தசரத சக்ரவர்த்தியைப்பற்றி —

முமுக்ஷுப்படி சரமச்லோகப்ரகரணத்தில் "சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக்கு உறுப்பு" என்றருளிச் செய்த பிள்ளைலோகாசார்யர் தசரத சக்ர வர்த்தியை இழந்தவனாகக் கூறினர். அதனை விவரிக்கிறோம். சக்ரவர்த்தியின் ஸத்ய வாதித்வம் மிகவும் ப்ரஸித்திபெற்றது. சக்ரவர்த்தி ஸத்யவாதியாகையாலே கைகேயியின் வரப்ரார்த்தனையை மறுக்கமாட்டாமல் இராமபிரானைக் காட்டுக்குப் போகவிட்டு ஸத்யவாதித்வப் பெரும் புகழைப் பெற்றனனென்று சொல்லப்படு கின்றது. கைகேயியின் வர ப்ரார்த்தனையைப் பற்றின வரலாற்றை முன்னம் விவரிப்போம். தண்டகாரணியத்தில் வைஜயந்தமென்ற பட்டணத்தில் வஸிப்ப வனும், திமித்வஜனென்று மறுபெயருள்ளவனும் இந்திரனை வென்றவனுமான சம்பராஸுரனை இந்திரனது வேண்டுகோளின்படி வெல்லுதற் பொருட்டுக் கைகேயியுடன் சென்ற தசரத சக்ரவர்த்தி அவ்வசுரனை யெதிர்த்துச் செய்த பெரும் போரில் அவனால் விரணப்பட்டு மூர்ச்சையடைந்த பொழுது, அச்சக்ர வர்த்தியை அசுரர்கள் வதை செய்யாதபடி கைகேயி போர்க்களத்திலிருந்து எடுத்துச் சென்று பாதுகாக்க, மூர்ச்சை தெளிந்தவுடன் தசரதன் தனக்குக் கைகேயி செய்த உயிருதவிக்காக மிக மகிழ்ந்து தான் அவட்கு அவள் வேண்டும் இரண்டு வரங்கள் கொடுப்பதாக வாக்களிக்க, அவள் அவற்றை அப்போதே பெற்றுக்கொள்ளாமல், பின்பு தனக்கு வேண்டும்பொழுது கேட்டுப் பெற்றுக் கொள்வதாகச் சொல்லியிருந்தாள். ஸீதா கல்யாணத்தின் பிறகு வெகு காலங் கழித்துத் தசரதர் இராமபிரானுக்கு யுவராஜ பட்டாபிஷேகஞ் செய்ய முயலு கையில் மந்தரை சூழ்ச்சியால் மனங் கலக்கப்பட்ட அக்கைகேயி தசரதரை நோக்கி முன்பு அவர் தனக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்களுக்கும் பயனாகத் தன் மகனான பரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌஸல்யையின் மகனான இராமனைப் பதி னான்கு வருஷம் வனஞ் செலுத்தவும் வேண்டுமென்று சொல்லி வற்புறுத்த, அது கேட்டு வருந்தின தசரதர் ஸத்ய வாதியாகையால் முன்பு அவட்கு வரங்கொடுத் திருந்த சொல்லைத் தவறமாட்டாமல் இராமபிரானுடைய வனவாஸத்திற்கு இசைந் தாரென்பது கதைப்போக்கு. இங்கு நாம் முக்கியமாக ஆராயவேண்டுவதொன் றுண்டு. கைகேயிக்கு வரங்கொடுத்த காலம் மிகப் புராதனம். இன்ன வரமென்று குறிப்பிடப்பட்டிருந்ததுமில்லை. அது அப்படி நிற்க. ப்ரக்ருதத்திலோ வென்னில் இராமபிரானுக்கு சக்ரவர்த்தி தானே ராஜ்ய ப்ரதாநம் பண்ணியாயிற்று. அயோத்யா காண்டம் மூன்றாவது ஸர்க்கத்தில் (39.)

"ஜ்யேஷ்டாயாமஸி மே பத்ந்யாம் ஸத்ருச்யாம் ஸத்ருசஸ் ஸுத:,
உத்பந்நஸ் த்வம் குணச்ரேஷ்டோ மம ராமாத்மஜ: ப்ரிய:,
த்வயா யத: ப்ரஜாச்சேமா: ஸ்வகுணைரநுரஞ்ஜிதா:,
தஸ்மாத் த்வம் புஷ்யயோகேந யௌவராஜ்யமவாப்நுஹி"

என்னு மிந்த ச்லோகங்களானவை சக்ரவர்த்தியினால் இராமனுக்கு ராஜ்ய ப்ரதாநம் செய்யப் பட்டமையை ஸுஸ்பஷ்டமாகக் கூறுகின்றன. இவ்வளவு மாத்திரமே யன்று; மறுபடியும் ஸுமந்த்ரனை யனுப்பி இராமபிரானை வரவழைத்து, சிறிதும் தாமதமின்றி வெகு விரைவாக ராஜ்யாபிஷேகம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தி யிருக்கும் விஷயம் அடுத்த நான்காவது ஸர்க்கத்தில் மிக விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. இப்படி ஒரு முறைக்கு இரு முறையாக இராமனை வர வழைத்து ராஜ்ய ப்ரதாநம் பண்ணியான பின்பு இதற்கு விரோதமில்லாதபடி கைகேயியின் வரத்தை நிறைவேற்றவேணுமே யொழிய இதை உபமர்த்தித்து வேறாக நடத்துவதற்கு ஔசித்யமுண்டா வென்று பார்க்கவேணும். கைகேயிக்கு இரண்டுவரம் கொடுத்த காலத் திலேயே வரஸ்வரூபம் நிச்சயிக்கப்பட்டிருக்குமாகில் அதற்கு ப்ராபல்யம் சொல்ல இடமுண்டாகும்; சம்பராஸுரயுத்த காலத்தில் 'கைகேயீ! உனக்கு வேண்டிய இரண்டு வரம் பெற்றுக்கொள்' என்று சக்ரவர்த்தியால் சொல்லப்பட்டது. 'அயோத்யா ராஜ்யத்தை என் மகனுக்குக் கொடுக்கவேணும்; கௌஸல்யா புத்திரனை வநவாஸி யாக்கவேணும்' என்று அப்போதே கேட்கப்பட்டிருக்குமாகில் அந்த வரப்ரார்த்தனை ப்ராபல்யம் பெற் றிருக்கும். அப்போது இராமனாவது பரதனாவது ஜனித்தே யிருக்க வில்லையாதலால் அங்ஙனம் கோருவதற்கு அவகாசமே யில்லையாயிற்று. இராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய முயலும்போதே செய்தி தெரிந்துகொண்டு என் மக னுக்குத்தான் ராஜ்யம் கொடுக்க வேணுமென்று (கைகேயி) கேட்டிருந்தாளாகில் அஃது ஒக்கும். இராமனுக்கு ராஜ்யம் கொடுத்துத் தீர்ந்தது; அவனும் ராஜ்யத் தைப் பெறுவதற்குரிய சடங்குகளை யநுஷ்டித்தாயிற்று. இந்நிலையில் கைகேயி வந்து என்றைக்கோ தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கு மிரண்டு வரங்களுக்குப் பலனாக பரதாபிஷேகத்தையும் ராமவிவாஸநத்தையும் வேண்டினாளாகில் இதை நிறைவேற்ற வேண்டிய ஆவச்யகதை என்ன? அவளுடைய கோரிக்கையை ஒரு பொருளாக மதியாமல் 'கைகேயீ! நீ கோபக்ருஹத்திலேயே விழுந்து கிட' என்று சொல்லிவிட்டு எழுந்துபோய் ஸ்ரீ ராம பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் குறையற நிறைவேற்றி வைத்தால் இதனால் சக்ரவர்த்தியின் ஸத்யவாதித்வத்திற்கு ஏதேனும் பங்கம் விளையுமோ? ஒன்றும் விளையாது. 'பாதிராஜ்யம் இராமனாளட்டும், பாதிராஜ்யம் பரதனாளட்டும்' என்று சொல்லலாம். மற்றும் பலவகையாகச் சொல்ல லாம். இராமனுக்குக் கொடுத்து முடிந்த ராஜ்யத்தை இல்லையாக்கி அவனைக் காட்டுக்குப் போகச்செய்தது சக்கரவர்த்தியை அஸத்யவாதியாக்குமே யொழிய ஸத்ய வாதியாக்குமோ? என்று சங்கிக்க ப்ராப்தமாகின்றது.

### — மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்தி காட்டுதல் —

ஸ்ரீ ராமாயண மஹார்ணவத்தில் ஆழவிழிந்து அற்புதமான ஆராய்ச்சிகளைச் செய்து பரமார்த்தங்களை க்ரஹிக்கவல்ல மஹாமதிகள் இங்கு ஸப்ப்ரதிபந்நமான முறையிலே சங்காபரிஹாரம் செய்யக்கூடும். நமக்குத் தோன்றின வகையில் இங்குச் சில எழுதுகிறோம். "சக்கரவர்த்தியைப் போலே இழக்கைக்குறுப்பு" என்றருளிச் செய்த

விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "முன்பே, வரப்ரதாநத்தைப் பண்ணிவைத்து இப்போதாக மறுக்க வொண்ணாதென்று ஆபாஸமான ஸத்ய தர்மத்தைப்பற்றி நின்று * ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்கிற பெருமாளோடே கூடி வாழ விருந்த பேற்றை யிழந்த சக்ரவர்த்தியைப் போலே" என்றருளிச் செய்துள்ளார். இங்கு ஆபாஸமான ஸத்ய தர்ம மென்றதற்கு இரண்டுவகையான தாத்பர்ய முண்டு. ஸத்யஞ் சொல்லுவதென்பது தர்மமேயானாலும் ஒரு தட்டில் எம்பெருமானை வைத்து மற்றொருதட்டில் ஸத்யத்தை வைத்துப் பார்க்கும்போது ஸத்யவசநமானது எம்பெருமானை யிழப்பதற்கு உறுப்பாமாகில் அது உண்மையான தர்மமன்று. ஆபாஸமான தர்மமே—என்பதாக ஒரு தாத்பர்யம். தசரதனுடைய ஸத்யவாதித்வம் வஸ்துஸ்திதியில் தர்மமன்று, தர்மாபாஸமே, அது அஸத்ய பர்யவஸிதமே யென்பதாக மற்றொரு தாத்பர்யம். "ஸர்வதர்மாந்" என்பதற்கு அர்த்தம் செய்தருளும்போது "இவற்றை தர்ம மென்கிறது ப்ரமித்த வர்ஜுநன் கருத்தாலே" என்று அருளிச்செய்த கணக்கிலே தசரதசக்ரவர்த்தியை ஸத்யவாதியென்கிறது ப்ரமித்த அவன் தன்னுடைய கருத்தாலே யென்னலாம்.

## — சிலபரமார்த்த நிரூபணங்கள் —

கீதா சாஸ்த்ரத்தைப் ப்ரகாசநம் செய்வதற்கு ஸமயம்பார்த்திருந்த ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா யுத்த ஸந்நத்தனாய்ப் போர்க்களத்தில் வந்து நின்ற அர்ஜுநனை ப்ரமிக்கச் செய்ததுபோல, தேவகார்ய நிர்வஹணார்த்தமாக வநப்ரஸ்தாந குதூஹலியாய் நின்ற ஸ்ரீராமபகவான் தன்திருவுள்ளம் நிறைவேறுதற்காகவே தந்தைக்கு அதர்மத்தில் தர்மபுத்தியையும், தர்மத்தில் அதர்ம புத்தியையு முண்டு பண்ணினான்போலும்.

* வேண்டித் தேவரிரக்க வந்து பிறந்ததும் * என்கிறபடியே தேவர்களின் பிரார்த்தனையை ஒரு வியாஜமாகக் கொண்டு பரமபுருஷன் இந்நிலவுலகத்திலே வந்து திருவவதரிக்கத் திருவுள்ளம் பற்றுவதற்கு நெடுநாள் முன்னமே சில செய்திகளை நிகழச் செய்து வைக்கிறான். சம்பராஸுரயுத்தத்தில் தசரதனுக்குப் பராஜயம் விளைய ஹேதுவில்லை. அது விளையும் படிக்கும் அப்போது கைகேயி உதவி செய்யும்படிக்கும் அப்போது அவளுக்கு இரண்டு வரம் கொடுக்கும்படிக்கும் முன்னமே செய்து வைத்தது எம்பெருமான்செயலேயாம். பரதாழ்வானை முன்னமே மாதுலக்ருஹத்துக்குப் புறப்பட்டுப் போகச் செய்ததும் அப்பரமன் செயலே. கைகேயி வரம் கேட்கும்போது பரதாழ்வான் அயோத்தியில் இருந்தானாகில் இராமனுக்கு வநவாஸம் ப்ராப்தமாக வழியிராதன்றோ. ஆகவே ஸத்ய ஸங்கல்பனான அவனுடைய ஸங்கல்ப மடியாக நிகழ்ந்தவற்றில் இன்றிருந்து நாம் ஆராய்ச்சி செய்வதற்கு என்ன இருக்கிறது. பாரமார்த்திக த்ருஷ்டியில் தசரதன் ஸத்யவாதியல்லனென்று கொள்வதில் குறையொன்றுமில்லை. ஆனதுபற்றியே அவனைப்பற்றி எம்பெருமானாரருளிச் செய்த திவ்ய ஸூக்தியொன்று ப்ரஸித்தமாக வுள்ளது.—"தசரதனுக்கு நரகமே கிடீர் ப்ராப்தம்; பெருமாளுடைய ஆந்ருசம்ஸ்யத்தாலே அவன் ஸ்வர்க்கஸ்தனானனத்தனை" என்று. ... ... ... ... *

## பரமைகாந்திகளின் போதுபோக்கு

பெருமாள் திருமொழியில் ஏழாம் பாட்டில் "இரு முப்பொழுதேத்தி யெல்லை யில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டர்" என்று குலசேகராழ்வா ரருளிச் செய்திருப்பது பஞ்சகால பராயணர்களான பரமைகாந்திகளை; இப் பாட்டில் "இரு முப்பொழுது" என்றது பஞ்சகால மென்றபடி; இரண்டும் மூன்றுங் கூடினால் ஐந்து; ஆகவே இருமுப்பொழுதேத்துமவர்கள் பஞ்சகால பராயணர்கள். இதனைச் சிறிது விவரிப்போம். ஞானத்திற் சிறந்தவர்களென்றும் அனுட்டானத்திற் சிறந்தவர்களென்றும் ஞானனுட்டான மிரண்டிலும் சிறந்தவர்களென்றும் மஹான்கள் கொண்டாடப்படுகிறார்கள். ஞானத்தில் சிறந்தவர்கள் பலர் கிடைக்கக்கூடும். அனுட்டானத்திற் சிறந்தவர்கள் பெரும்பாலும் அருமைப்பட்டே யிருப்பர்கள். அநுஷ்டாதாக்களான மஹான்கள் பஞ்சகாலபராயணர்களென்று போற்றப்படுவர்.

### — பஞ்சகாலங்களின் பாகுபாடு —

ஒரு தினத்தின் பகற்பொழுதை ப்ராதஃ காலம், ஸங்கவகாலம், மத்யாஹ்ந காலம் அபராஹ்ந காலம், ஸாயாஹ்ந காலம் என்று ஐந்தாகப் பகுத்து, ஸூர் யோதயம் முதல் அவ்வாறு நாழிகை இவற்றிற்கு முறையே உரியவையென்று வரையறுத்து, அபிகமநம், உபாதாநம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்ற ஐந்து ஒழுக்கங்களையும் முறையே (ப்ராதஃ காலம் முதலிய) அந்த ஐந்து சிறு பொழுதிலும் அநுஷ்டிக்கும்படி பஞ்சராத்ரம் முதலிய ஆகமங்கள் கூறும். இரவில் ஆசரிக்க வேண்டுவதும் யோகாநுஷ்டாநமே.

### — இவற்றின் விரிவு வருமாறு —

முதல் ஆறு நாழிகையாகிய ப்ராதஃ காலத்திலே அந்தணர்கள் செய்ய வேண்டியவையான ஸ்நாநம் ஸந்த்யாவந்தனம் ஜபம் முதலிய காலைக்கடன்களைச் செய்து முடித்துத் தாம் ஆராதிக்கவேண்டிய எம்பெருமானுடைய ஸந்நிதியிற் சென்று ப்ரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்ரம் முதலியவற்றால் எம்பெருமானை உகப் பிக்க வேண்டும். இஃது அபிகமந காலநியமம். அதற்கு அடுத்த ஸங்கவ காலத்திலே பகவதாராதனத்துக்கு வேண்டிய சுத்த தீர்த்தம் சந்தனம், புஷ்பம், தூபதீப த்ரவ் யங்கள் முதலியவற்றையும், திருமஞ்சனத்துக்கு வேண்டிய பால் தயிர் நெய் தேன் முதலியவற்றையும், எம்பெருமானுக்கு அமுது செய்விப்பதற்கு வேண்டின அரிசி பருப்பு கறியமுது சர்க்கரை நெய் பழம் முதலிய போஜநோபகரணங்களையும் ஸம்பாதித்துத் தொகுத்து ஸித்தஞ் செய்யவேண்டும். இஃது உபாதாந கால நியமம். மூன்றாவதான மத்யாஹ்ந காலத்திலே மாத்யாஹ்நிகஸ்நாநமும் மாத்யா ஹ்நிகச் சடங்குகளுஞ் செய்து விதிமுறை வழுவாது பகவானுக்குத் திருவாராதனம் பண்ணிப் பக்குவமான உணவுகளை அமுது செய்வித்து அங்ஙனம் நிவேதித்த உணவுகளை அதிதிகளோடும் பந்து மித்திரர்களோடும் புஜிக்கவேண்டும்; இஃது

இஜ்யா கால நியமம். அதற்கு அடுத்ததான அபராஹ்ந காலத்திலே மோக்ஷ மார்க்கத்திற்கு உரிய உயரிய வேத வேதாந்தங்களையும் இதிஹாஸ புராணங்களையும் மற்றும் உரிய நூல்களையும் தாம் கற்றலும் பிறர்க்குக் கற்பித்தலும் வேண்டும். இது ஸ்வாத்யாய கால நியமம். இனி, ஈற்றதான ஸாயங்காலத்திலே மாலைக்கடனாகிய ஸந்த்யாவந்தனத்தைச் செய்யத் தொடங்கி ஸூர்யாஸ்தமனமான பின்பு ஜபத்தைப் பூர்த்திசெய்து இரவு போஜநானந்தரம் ஏகாந்தமாக விருந்து ஐம்பொறிகளை யடக்கி ப்ராணாயாமஞ் செய்து மனத்தைப் பரமாத்மாவினிடத்தே நிலைநிறுத்தி பகவத் குணாநுஸந்தானத்தோடு பள்ளிகொள்ளவேண்டும். இது யோககாலநியமம். இவ்வாறு அநுஷ்டிக்கும் சிஷ்டர்களே பஞ்சகால பராயணர்.

## — அனுஷ்டானத்தினால் ஞானாபிவிருத்தி எப்படி? —

இப்படி அநுஷ்டானங்களைச் செய்து கொண்டே போதைப் போக்கினால் ஞானத்தை அபிவ்ருத்தி செய்துகொள்ள மார்க்கமில்லாமற் போகுமே. ஜ்ஞாதாக்களுக்கு ஸ்வயம் விமர்சிக்கவேண்டிய விஷயங்கள் பலவுண்டே; பல துறைகளிலும் எழுதவேண்டிய நூல்களும் பல பலவுண்டே: திருவடிவாரத்தில் காத்திருக்கின்ற சிஷ்யர்களுக்குப் போதிக்க வேண்டியவைகளும் பலவுண்டே; பஞ்ச காலங்களில் ஸ்வாத்யாய காலமென்று ஒதுக்கப்பட்ட ஓராறு நாழிகை யவகாசத்தில் என்னாகும்? ஞான மில்லாதவர்கள் இப்படிப்பட்ட அநுஷ்டானங்களினால் போதுபோக்கலாமே யொழிய வேத வேதாந்த வேதாங்கங்களில் விபுலமான ஞானம் படைத்தவர்கள் இங்ஙனே பஞ்சகால பராயணர்களாக இருக்க முடியுமோ வென்று சிலர் சங்கிக்க நேரும். அது வேண்டா; ஒவ்வொரு காலத்திற்கும் ஏற்பட்ட அனுஷ்டானங்கள் ஆறு நாழிகை யவகாசத்தையும் ஆக்ரமிக்கக் கூடியவையல்ல. இடையிடையே ஞான விகாஸத்தைச் செய்து கொண்டு போக இடையூறொன்று மிராது. .... ✱

## பகவத் ராமாநுஜ சரித்திரத்தில் ஒரு விமர்சம்

ஸ்ரீ ராமானுஜரின் வைபவத்தைப் பற்றிக் கூறும் குருபரம்பராப்ரபாவம் முதலிய பழைய சரித்திர நூல்களில் அடியில் கண்ட வரலாறுகள் கூறப்படுகின்றன; இந்த மஹாசாரியர் ஸ்ரீ ரங்கத்தில் தரிசன நிர்வாஹம் செய்துகொண்டு போந்த நாட்களில் அங்குக் கொடுங்கோன்மை புரிந்துவந்த சோழராஜன் ஒருகால் வைணவர்களுக்குச்செய்த ஹிம்ஸைகளைத் தாங்கமுடியாமல், ஸ்ரீராமாநுஜர் மேல் நாட்டுக் கெழுந்தருளும்படியாயிற்று. அங்கு மைஸூர் ப்ராந்தத்தில் தொண்டனூர் என்னும் கிராமத்தில் சிலகாலம் அவர் தங்கியிருந்தார். அப்போது மைஸூரை ஆண்டுகொண்டிருந்த விடலதேவன் என்னும் க்ஷபண (ஜின) அரசனை வைணவ மதத்திற்குத் திருத்தி, அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்னும் புதிய பெயரையும் தந்து, தம்முடைய சிஷ்யர்களில் ஒருவராக ஆக்கிப் பணிகொண்டார், அச்சமயம் இராமானுஜர் ஒருகால் ஊர்த்வபுண்ட்ரம் சாத்திக் கொள்ளத் திருமண் அகப்

படாமல் சோகித்திருந்தபோது திருநாராயணபுரத் தெம்பெருமான் ஸ்வப்னத்தில் ஸேவை தந்து தம்முடைய அர்ச்சா விக்ரஹம் பூமியின்கீழ்ப் புதைந்து கிடந்த விடத்தையும், அதற்குச் சமீபத்தில் திருமண் அபரிமிதமாக மறைந்து கிடந்த விடத்தையும் காட்டியருளினர். பிறகு 'ராமப்ரியர்' என்னும் தம்முடைய அழகிய உத்ஸவ மூர்த்தி வடநாட்டில் டெல்லியில் ஒரு துருஷ்கராஜனின் அரண்மனையில் அகப்பட்டுக் கொண்டிருந்ததையும் ஸ்வப்னமுகேன அறிவித்தார், உடனே இராமானுஜர் டெல்லிக்கு எழுந்தருளி, அங்கிருந்த துருஷ்க அரசனை யணுகி அந்த உத்ஸவ மூர்த்தியை மீளவும் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளப்பண்ணி க்ரமேண ப்ரதிஷ்டை செய்வித்தார், என்று. (இது சுருக்கமாக வரைந்தபடி.)

இது விஷயமாக ஒரு வடநாட்டுப் பெரியார், 'இராமானுஜர் காலத்தில் டெல்லிப் பிராந்தத்தில் துருஷ்க ராஜ்ஜியம் ஏற்பட்டிருந்ததில்லை; ஆகையால் இராமானுஜர் திருநாராயணபுரத்து உத்ஸவமூர்த்தியைத் துருஷ்க ராஜாவிட மிருந்து மீட்டுக் கொண்டுபோவதற்காக டெல்லிக்கு எழுந்தருளினரென்று தென் தேசத்திய வைணவர்கள் தங்களது சரித நூல்களில் எழுதிவைத்திருப்பது மிகவும் ஆதாரமற்றது." என்று எழுதியுள்ளார். இதைப்பற்றி சரித்திர ரீதியாகச் சில விஷயங்களைத் தெரிவிக்க விரும்புகிறோம். (நமது நண்பர் ஸ்ரீ உவே. N. ஜீயப்பங்கார் தந்த ஆதாரங்களைக்கொண்டு இந்த நிருபணம் நிகழ்கின்றது.)

வடஇந்தியாவின் சரிதம் சரியாக எழுதப்பட்டிருக்கும் எந்த புத்தகத்தை எடுத்துப் பார்த்தாலும் இராமானுஜர் காலத்தில் டெல்லி ப்ராந்தத்தில் துருஷ்க ஸாம்ராஜ்யம் ஏற்பட்டிருந்ததென்று ஸந்தேஹமற விளங்கும். இராமானுஜர் உயிர் வாழ்ந்திருந்த காலம் கி. பி. 1017—1137 வரையில். இதைப்பற்றி, இதுவரையில் எவர்க்கும் யாதொரு ஸந்தேகமும் ஏற்பட்டிருந்ததில்லை. கஜினிமஹமது (Mahmud of Gazni) துருக்கியிலிருந்து வட இந்தியாவில் படையெடுத்து வந்து பஞ்சாபில் ஜெயபாலன் என்னும் அரசனை வென்றது கி. பி. 1001 ம் வருஷத்தில் (Please see, for instance, "The Oxford History of India" by Vincent A. Smith. C. I. E. 1921 pages 190 to 192) அவன் யமுனை நதியைக் கடந்தது கி பி. 1018-ம் வருஷம் டிசம்பர் மாதம் 2-ம் தேதியில். இவ்வருஷத்திலேயே மதுரையும் தாக்கப் பட்டது பஞ்சாப் முழுதும் பிடிபட்டது. கி.பி, 1019-ம வருஷம் கானோஜ் Kanauj) பிடிபட்டது, கி. பி. 1022-ல் லாஹூர் முழுவதிலும் துருஷ்க ராஜ்யம் ஏற்பட்டு விட்டது. (Pl. see P. 6. Ch. ii Lethbridge's History of India) கி. பி. 1024-25-ல் கத்தியவாரிலுள்ள பெயர் பெற்ற ஸோமநாத் கோயில் (Somnath Temple) தாக்கப்பட்டு கொள்ளையடிக்கப் பட்டிருக்கிறது. மஹாவீரனை கஜினி மஹமது (Gazna Mahmud) கி. பி. 1030-ல் இறந்து விட்டாலும், அவனுக்குப் பிறகு அஹமது (Ahmad) வட இந்தியாவை ஆண்டான். கி பி. 1098-ல் இரண்டாம் மஸூது (Masud the second) ஆண்டுகொண்டிருந்தான். கி. பி. 1100 வருஷம் வரையில் கஜனுவிட் துருஷ்க ராஜ்யம் வட இந்தியாவில் பலமாக விருந்திருக்கிறது. பிறகே இது க்ஷீணதசையை அடைந்திருக்கிறது.

இராமானுஜர் முதன் முதல் திருநாராயணபுரம் எழுந்தருளிய போது அவருக்கு வயது ஏறக்குறைய 89 என்று மைஸூரிலுள்ள கல்வெட்டுகளினுல் ஏற்

படுகிறது. அவர் டெல்லிக்குப் போனது கி. பி 1097-க்கு மேல் 1100-க்குள்ளிருந்திருக்கவேண்டும். அப்போது கஸனுவிட் துருஷ்க ராஜ்ஜியம் டெல்லி ப்ராந்தத்தில் ஸந்தேகமற இருந்திருக்கிறது.

காநோஜ் (Kanauj) நகரை துருஷ்க அரசர்கள் வெகுகாலம் தங்களது முக்கிய தலைநகரமாக வைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் கஜினி மஹமது இறந்த பிறகு லாகூர், டெல்லி முதலிய நகரங்களும் முக்கிய ஸ்தலங்களாக விருந்திருக்கின்றன. திருநாராயணபுரத்து உத்ஸவ மூர்த்தி இராமானுஜர் எழுந்தருளிய போது காநோஜிலேயே இருந்திருக்கலாம். அந்த நகரைத் தென் தேசத்தவர்கள் டெல்லியாக வழங்கி யிருக்கலாம். அல்லது லாகூரிலேயோ, டெல்லியிலேயோ அது இருந்திருக்கலாம். ஊரின் பெயர் முக்கியமல்ல; வட இந்தியாவில் ஒரு துருஷ்க அரசனின் வசத்திலிருந்ததே முக்கியம்.

அடுத்தபடியாக எழும் முக்கியமான கேள்வி என்னவென்றால், எப்படி மேல் கோட்டையிலிருந்து (திருநாராயணபுரத்திலிருந்து) இந்த விக்ரஹம் வடதேசத்திற்குச் சென்றது? என்பதே. கி. பி. 1097-க்கு முன் துருஷ்க ஆதிக்யம் மைசூர் பிராந்தம் வரையில் சென்றிருந்ததா வென்கிற கேள்வி எழக்கூடும். ஒரே ஒரு சாக்ஷிதான் இவ்விஷயத்தில் நமக்கு உதவுகின்றது. மைசூரில் தொண்டனூருக்கருகில் ஒரு கல்வெட்டு இருக்கிறதாம். இந்த கல்வெட்டிலிருந்து, கஜனிமஹமது ஸேனையைச் சேர்ந்த ஓர் தீவிர மஹமதிய வீரன் அது வரையில் படையெடுத்து வந்து அங்கு மாண்டு புதையுண்டிருக்கிறான் என்று ஏற்படுகிறதாம். (Vide P. 198 Food-note in "The life of Ramanuja" by A. Govindacharya) கஜனி மஹமத்தின் அட்டூழியம் எவ்வளவு தூரம் ஊடுருவிச் சென்றிருக்கிறது என்பது இதனால் விளங்குகின்றது. நமது குரு பரம்பராப்ரபாவாதிகளில் கூறப்பட்டிருக்கும் ஐதிஹ்யமும் ஸ்தாபிதமாகிறது, .... .... .... .... *

---

## ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்னம்

மணவாளமாமுனிகள் ஆர்த்திப் பிரபந்தத்தில் *முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப்பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்* என்றருளிச்செய்த கணக்கிலே பூர்வாசாரியர்களைப் பற்றியும் அவர்களது திவ்ய ஸூக்திகளைப்பற்றியும் சிந்தனை செய்வது தவிர வேறு போதுபோக்கு அடியேனுக்கு என்னவுளது? 'வேறொன்றும் நானறியேன்' என்று துணிந்து சொல்லுவேன். விசேஷித்து திவ்ய ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்த ஆசார்ய ஸார்வபௌமர்கள் பக்கலிலே நெஞ்சைப் பறிகொடுப்பவனடியேன். ஆளவந்தாரையும் எம்பெருமானாரையும் பற்றித் தனியாகவே சிந்தை செய்வது அடியேனியல்பு. ஆளவந்தா

ருடைய ஸ்ரீஸூக்திகள் நமக்கு அதிகமாகக் கிடைக்காமற்போனாலும் கிடைத்தவரை யில் அமோகமானவை. ஸித்தித்ரயம், ஆகமப்ராமாண்யம் என்கிற இரண்டு க்ரந்தங்கள் மிக உத்துங்கமானவை. இவற்றில் ஆழ விழிந்து அவகாஹித்தநு பவிக்க இக்காலத்தில் அதிகாரிகள் மிகவும் துர்லபர். அடியேனுடைய அநதி காரத்தை நோக்கி விஜ்ஞாபிக்கிறபடி. ஆங்காங்குத் தோன்றும் அர்த்த ஸந்தே ஹங்களைப்பற்றிப் பெரியார்களைப் பணிந்து கேட்டால் 'ஏதேனும் பாடஸ்கலனமிருக் கும்போல் தோன்றுகின்றது' என்கிறார்கள். அதிப்ரௌடமான சைலி. கீதார்த்த ஸங்க்ரஹமும் ஸ்தோத்ரரத்னமும் சதுச்ச்லோகியும் பேரின்பவெள்ளம் பெருகும் திவ்யக்ரந்தங்கள். ஸ்தோத்ரரத்னமென்று திருநாமஞ்சாற்றின மஹாசார்யர் எம்பெருமானாராகத்தானிருக்கக்கூடும். ரத்னமென்றால் அதுதான் ரத்னம்.

பெரிய வித்வான்களுக்கு ஸ்தோத்ர நூலென்றால் இளப்பமான எண்ணம். இந்த ஸ்தோத்ர ரத்னத்திற்குத் தனியனிட்டவர்கள் "ஸ்வாதயந்நிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ரஹம், ஸ்தோத்ரயாமாஸ யோகீந்த்ர:" என்றிட்டது உட்புகுந்து அநுபவித்தேயென்னத் தட்டில்லை. கூரத்தாழ்வான் ஸாதித்த பஞ்ச ஸ்தவங்கள், பட்டர் ஸாதித்த ஸ்ரீரங்கராஜஸ்தவாதிகள் பரமபோக்யங்களாயிருந் தாலும் ஸ்தோத்ர ரத்னத்தின் போக்யதை அந்யாத்ருசம் அப்ரமேயம் அபரிச் சேத்யம் வாசாமகோசரம் என்னத்தக்கதத்தனை.

ப்ருந்தாவன ஸன்னிதி ஸ்தாபகரான ஸ்ரீமத் கோவர்த்தனம் ஆத்ய ரங்கா சார்ய ஸ்வாமி உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இந்த ஸ்தோத்ர ரத்னத்தை ஒரு விலக்ஷண ஸ்வரஸந்நிவேசத்தோடு கற்பித்துவைத்தருளினார். அந்தஸ்வர பத்ததி வடநாடெங்கும் பரவியுள்ளது. 1910-ஆம் ஸூத்தில் ஆனிமாதத்தில் புரீஜகன் னாதத்தில் நடந்த ரதயாத்ரோத்ஸவத்திற்கு ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமியோடுகூட அவ்விடம் விடைகொண்டிருந்தேன். எமார்மடத்தில் தங்கியிருந்தோம். அந்த மடத்தின் விஸ்தாரம் நாலு பர்லாங்கு கொண்டது. மித்தைமேல் திறந்தவெளியான ஹாலில் நாலாயிரம் நபர்கள் சிரமமில்லாமல் உட்காரக்கூடிய விசாலமான இட முள்ளது. அந்த இடத்தில் பௌர்ணமியன்றிரவு 8 மணிக்கு உத்தராதி ஸ்ரீவைஷ்ண வர்கள் ஸ்தோத்ர ரத்னாநுஸந்தானத்திற்கென்று வந்து சேரத் தொடங்கினார்கள். ஸ்தோத்ரம் தெரியாதவர் ஒருவர்கூட மேலே வரக்கூடாதென்கிற நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அரைமணியில் ஹால் நிரம்பிவிட்டது. ஸ்ரீ காதி ஸ்வாமி நடுநாயக மாக வீற்றிருக்கிறார். அடியேனும் சிலருமிருக்கிறோம். உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர் களின் ஸ்தோத்ராநுஸந்தானம் இரண்டுமணி காலம் நடைபெற்றது. ஐம்பத்தெட்டு வருஷமாயிற்று. இந்த ஸந்நிவேசத்தை அடியேன் நினையாத நாளில்லை. அப் போதைய ஆனந்தத்தை எந்த ஆனந்தத்தில் சேர்ப்பேன்? ப்ரஹ்மானந்தம் என்கிற பதம் ஏகதேசம். பட்டர் கண்ணனுடைய வேணுகானச் சிறப்பை *சைலோக்நிச் ச ஜலாம்பபூவ* என்று தொடங்கிச் சொல்லிவந்து "த்வம் தேஷ்வந்யதமாப்பபூவித" என்று தலைக்கட்டினார். வேணுகானத்தில் விகாரமடைந்தவர்களில் கண்ண பிரானும் ஒருவனாயினன் என்று கூறினது பட்டர் ஸாக்ஷாத்கரித்துக் கூறினதாக வல்லாமல் வேறு விதமாக இருக்கமுடியாது. இதனையருளிச் செய்கின்ற கூரத்

தாழ்வான் *பஞ்சாபி கிஞ்ச பரிவ்ருத்தகுணநி பூதாநி உர்வீக்ருசாநு மருதம்பர சம்பராணி* என்று பஞ்சபூதங்களும் விகாரமுற்றதைமட்டுமே யருளிச்செய்தார். "த்வம் தேஷ்வந்யதாம்பபூவித" என்ற வார்த்தைக்கு விண்ணெல்லாமுண்டோவிலே? அந்த வேணுகான கோஷ்டியை ஏகதேச மாக்கிவிட்டது எமார்மடத்து ஸ்தோத்ர ரத்னகான கோஷ்டி.

நம்முடைய ஸம்பிரதாயத்தில் ஆளவந்தார்க்கு முன்னே ஸ்தோத்ரமருளிச் செய்த ஆசாரியர் ஒருவருமில்லை. பின்னேயிருப்பது தெரிந்தது. பட்டருடைய ஸ்ரீஸூக்தி "பதாநாம ஸௌப்ராத்ராத் அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:" என்று தாமேயருளிச் செய்யும்படியிருந்தாலும் ஆளவந்தாருடைய ஸ்ரீஸூக்தி மாதுர்யம் உலகில் எந்த வாக்குக்கும் அமையாது சதுச்சாஸ்த்ரவித்வத்தமராக எழுந்தருளி யிருந்த அவருடைய திருவாக்கு இவ்வளவு லலிதமாக அமைந்ததென்றால் இது வொரு விலக்ஷண பகவத் ஸங்கல்ப நிபந்தனமென்றல்லது வேறொன்றும் சொல்லப் போகாது. பெரும்பாலும் ச்லோகந்தோறும் ஆழ்வாரருளிச்செயற் பொருள்களையே அமையவைத்திருப்பதுதான் ஸ்தோத்ரரத்னத்தின் ஏற்றத்திற்கு ஏற்ற காரணம்.

அதுதன்னில் "ஸக்ருத் த்வதாகார விலோகநாசயா த்ருணீக்ருதாநுத்தம புக்திமுக்திபி:, மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதி துஸ்ஸஹ:" என்கிற சுலோகம் நிகரற்றது. இதில் முதலிரண்டு பாதங்கள் நம்மாழ்வாருடையபடியை நிருபிப்பன. நான்காவது பாதம் அவ்வாழ்வார் திறத்திலே எம்பெருமானிருந்தபடியை நிருபிப்பது. இதைச் சிறிது உபபாதிக்கிறேன் ஸஹ்ருதய ரஸிகமணிகளின் திருவுள்ளவுகப்புக்காக. [ஸக்ருந் த்வதாகார விலோகந ஆசயா.] *ஒருநாள் காணவாராயே* என்றும் *கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய் ஒருநாள்* என்றும் விண்ணப்பம் செய்தபடியைத் தெரிவிக்கிறது. [த்ருணீக்ருத அநுத்தமபுக்த் முக்திபி.] *அம்மாவீட்டுத் திறமும் செப்பம்* என்றதிலே எல்லாமடங்கும. ஆக ஆழ்வார்படி சொல்லிற்றாயிற்று. இனி [யத்விரஹ: க்ஷணேபி தே அதிதுஸ்ஸஹ:] என்ற நான்காவதுபாதம் ஆழ்ந்து நோக்கத்தக்கதாகவுள்ளது. இந்த ச்லோகம் "..... த்ருணீக்ருதாநுத்தமபுக்தி முக்திநா மஹாத்மநா" என்று ஏகவசநாந்தமாகவேயிருக்கலாம். ஆளவந்தாருடைய திருவுள்ளம் அதுதான். ஆனாலும் பஹுவசனாந்தமாக இட்டருளினது க்ராந்திகசைலியென்றே கொள்ள வேணும். இங்கு மஹாத்மசப்தத்தால் நம்மாழ்வாரொருவரே விவக்ஷிதராகிறார். எம்பெருமானுடைய பிரிவு ஆழ்வார்க்கு அஸஹ்யமென்பதற்குப் பலபல பாசுரங்கள் கிடைக்கும். ஆழ்வாருடைய பிரிவு எம்பெருமானுக்கு அஸஹ்யமாகிறதென்று இங்குச் சொல்லப்படுகின்றதே, இதற்கு ஏதேனும் பிரமாணம் கிடைக்குமோ? ஆழ்வார் தாம் வாய்விட்டுப் பாசுரங்கள் பாடினவராகையாலே இவருடைய ஆற்றாமையை இவர் பாசுரங்கள் கொண்டு அறியலாம். எம்பெருமான் ஒரு பாசுரமும் பாடினவனல்லனே; அவனுடைய ஆற்றாமையை அறிவதற்கு மூலமில்லையே; அப்படி யிருக்க எதுகொண்டு ஆளவந்தார் இங்கு "க்ஷணேபி தே யத்விரஹ: அதிதுஸ்ஸஹ:" என்று அருளிச்செய்தாரென்று ஆராயவேண்டும். இவ்வாராய்ச்சி மிக அவசியமானதன்றோ. இதற்குப் பல வழிகளில் ஸமாதானம் சொல்லலாம். முக்கியமான ஸமாதானம் கேளீர்.

திருவாய்மொழியில் முதற் பத்தில் * அஞ்சிறையமட நாராய் * என்கிற நான்காவது பதிகம் தூது விடுவது. தூது மொழி கேட்ட எம்பெருமான் ஆனைக்கு அருள்செய்ய வந்தாப்போலே அரைகுலையத் தலைகுலையப் பதறி யோடிவந்தான். ஓடிவந்தவாறே ஆழ்வார் என்ன செய்யவேண்டும்? யதாமனோரதம் பரிபூர்ணாநு பவம் செய்ய வேண்டும். ஆனால் அது செய்யாதே நைச்சியாநுஸந்தானம் பண்ணி அகலப் பார்த்தார். ஆழ்வார் அகன்றுபோனால் போகட்டுமே? என்றிருக்கலாம் எம்பெருமான். ஆழ்வாருடைய விச்லேஷத்தை ஸஹிக்க மாட்டாதவனான அப் பெருமான் தன்னுடைய சீலகுணத்தைக் காட்டி அவரைச் சேர்த்துக்கொண்டா னென்பது திருவாய்மொழி நூற்றந்தாதியில் "வளம்மிக்க மால்பெருமை மன்னுயிரின் தண்மை, உளமுற்றங் கூடுருவ வோர்ந்து—தளர்வுற்று நீங்கநினை மாறனை மால் நீடிலகு சீலத்தால், பாங்குடனே சேர்த்தான் பரிந்து" என்ற பாசுரத்தினாலும் அதற்கு மூலமான ஈடுமுதலான வியாக்கியானங்களினாலும் விளங்கா நின்றது.

அந்த முதற் பத்திலேயே பத்தாவது பதிகத்தில் * எந்தையே யென்றும் எம்பெருமானென்றும், சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன், எந்தை யெம்பெருமானென்று வானவர் சிந்தையுள்வைத்துச் சொல்லும் செல்வனையே * என்கிற பாசுரத்தினால் மீண்டும் நைச்சியாநுஸந்தானம் பண்ணின ஆழ்வாரை மீண்டும் எம்பெருமான் ஸதுபாயத்தாலே சேர்த்துக் கொண்டானென்பது உடனே * அல்லுநன்பகலுமிடை வீடின்றி, நல்கியென்னை விடான் நம்பி நம்பியே * என்கிற பாசுரத்தினால் தெரியவருகின்றது.

இதற்குமேல் இரண்டாம் பத்தில் ஆறுவதான பதிகம் * வைகுந்தா மணி வண்ணனே * என்பது. இதில் முதற் பாட்டில் * உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கனவே * என்பது ஈற்றடி. இதன் மருமமறிந்து வியாக்கியானம் செய்தருளாநின்ற ஆசாரியர்கள் ஆழ்ந்து பணித்துள்ள சீரிய பொருளை யார்க்கு எடுத்துரைப்பது? ரஸிகர்களுக்கு உரைக்கின்றேன். கீழ் *அந்தாமத்தன்பு செய்து* என்னும் பதிகத்திலே எம்பெருமான் ஆழ்வாருடனேவந்து கலந்து தான் பெறுப் பேறு பெற்றானாயிருந்தான். அப்படியிருக்கச் செய்தே ஆழ்வார் "அல்லாவியுள் கலந்த" வென்று தம்முடைய நைச்சியத்தைக் காட்டி 'ஐயோ! பொருளல்லாத வென்னோடே இப்படி கலந்து ஏக தத்வமென்னலாம்படி கிடக்கிறானே!' என்று தலைசீய்த்துப் பேசினார். அதிலிருந்து எம்பெருமானுக்கு ஒரு கலக்கமுண்டாயிற்று; 'ஆழ்வார் * வளவேழுலகு பதிகத்திற்போலே நைச்சியமநுஸந்திக்கத் தொடங்கி விட்டாரே! நம்மை விட்டிடுவர் போலிருக்கிறதே! இவரைப் பிரிந்து நாம் எப்படி தரிப்பது! என்று நைந்து கிடந்தான்; அதனையறிந்த ஆழ்வார் அவனுக்கு அபய ப்ரதானம் பண்ணுகிறார் * உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கனவே * என்று. எம்பெருமான் (கீதையில்) சரமச்லோகத்தில் (மா சுச:) என்று சொல்லி நம்முடைய சோக நிவ்ருத்தி பண்ணினதுபோல இப்பாசுரம் ஆழ்வார் எம்பெருமானுக்கு (மாசுச:) சொல்லுவது—என்று வியாக்கியானம் செய்தருளுகிறார்கள். திருவாய் மொழி நூற்றந்தாதியில் இது ஸுவ்யக்தமாகக் காணலாம். அவ்விடத்துப் பாசுரம் வருமாறு:—" வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன், செய்கின்ற நைச்சி யத்தைச் சிந்தித்து—நைகின்ற தன்மைதனைக் கண்டு உன்னைத் தான் விடேனென்

றுரைக்க, வன்மை யடைந்தான் கேசவன்'' என்பதாம். மாறன்செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து எம்பெருமான் நைந்தானென்றும், அதுகண்டு ஆழ்வார் அவனைத் தேற்றினுரென்றும் நம் ஆசாரியர்கள் நிர்வஹிக்குமிது மூலத்திற்கு மிகவும் இணங்கியதேயல்லது ஏறிட்டுரைக்குமதன்று. ஆக, எம்பெருமானுடைய விச்லேஷம் ஆழ்வார்க்கு அஸஹ்யமென்பது எப்படி ப்ரமாண ஸித்தமோ அப்படியே ஆழ்வாருடைய விச்லேஷம் எம்பெருமானுக்கு அஸஹ்யமென்பதும் ப்ரமாண ஸித்தமேயென்று கண்டுகொள்க. "க்ஷணேபி தே யத்விரஹ: அதிதுஸ்ஸஹ:" என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி இப்போது ரஸித்ததாம். இப்புடைகளிலே ஆளவந்தார் அருளிச் செய்வதெல்லாம் அருளிச் செயற்கடலில் அவருக்கிருந்த அவகாஹநாதிசயத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டி நிற்கும்.

இச்சுவையை யறியப் பெருத சிலர் "மஹாத்மாக்களின் விரஹத்தினுல் எம்பெருமான் துக்கப்படுகிருனென்று கொள்ளலாகாது; அகில ஹேயப்ரத்யநீகனுன பெருமானுக்கு துக்கம் ஸம்பவிக்கமாட்டாமையாலே; மஹாத்மாக்கள் தன்னை விட்டுப் பிரியாதபடி செய்துபோருகிருனென்பதே தாற்பரியம்'' என்றெழுதி வைத்திருப்பது சுதந்திரப்படி. ஆச்ரித விச்லேஷத்தாலே எம்பெருமான் படுகிற பாடுகள் இராமாயணமும் பாரதமுமாக விரிந்துகிடக்க, பகவான் தன்னுடைய விச்லேஷத்தை பக்தர்களுக்கு உண்டு பண்ணுவதில்லையென்று எழுதிவைப்பது திருவாய்மொழி நடையாடுமிடத்தில் விலை செல்லத்தக்கதன்று. .... .... .... *

## கஜேந்திராழ்வான் சரிதையிலுள்ள ஒரு மருமம்

ஜகத்ப்ரஸித்தமான கஜேந்திரனது கதையில் அரியபெரிய விசேஷமொன்றுண்டு. அஃது என்னென்னில்; கஜேந்திராழ்வானை ப்ரபன்ன கோடியில் சேர்த்துப் பேசுகிருர்கள். இவன் செய்தப்ரபத்தி எத்தகைத்து? என்று ஆராய்ந்துபார்த்தால், ப்ரபத்தி லக்ஷணத்தைப் பலர் பலவாறு கூறினுலும் ஸித்தாந்தமாகத் தேறுவது ஒன்றே. அதாகிறது "பகவத் ப்ரவ்ருத்திவிரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" எனப்படுகிறது நம் மஹாசாரியர்களால். இவன் ஆதிமூலமே! யென்று ஓலமிட்ட பிறகுதானு இவனுடைய ஆர்த்தி பகவானுக்குத் தெரிந்தது? உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியுமவனுக்கு இந்த கூக்குரல் செவிப்படுவதற்கு முன்பு இவனுடைய ஆர்த்தி தெரியாதென்னப்போகாதே. தெரிந்து ஏன் உதவிற்றிலன்? என்ருல், *கஜ ஆகர்ஷதே தீரே* என்னும்படியான ஸ்வப்ரவ்ருத்தியில் அவனிருந்தான்; அது பகவத் ப்ரவ்ருத்திக்கு விரோதியாயிருந்தது. அத்தகைய ஸ்வப்ரவ்ருத்தி கழிந்தவாறே பகவத் ப்ரவ்ருத்தி ஏற்பட்டது. ஆக ப்ரபத்தி லக்ஷண சிக்ஷகன் கஜேந்திராழ்வான் என்கிற ஏற்றம் இவன்பால் அறியத்தக்கதாயிற்று. த்ரௌபதியின் கதையிலும் இந்தமருமம் காணத்தக்கது. ... *

**அன்பர்களுக்கு அறிவிப்பு:** பங்குனி விசாக விசேஷ மலராக வெளிவந்த ஸ்ரீவைஷ்ணவ ஸர்வஸ்வம் கிடைப்பதரிதென்று கீழே தெரிவித்திருக்கிறேம். ஆனல் நூற்றுக்கணக்கான பேர்கள் அதனை விரும்பிக் கடிதங்கள் எழுதிக் கொண்டே யிருப்பதனுல் அதை மறுபதிப்புச் செய்யத் தொடங்கியாயிற்று. 1969 ஜூலை மீ 10 தேதியிலிருந்து கிடைக்கும். ... .... .... *

# ஸ்ரீ வசனபூஷணத்தில் அர்த்தவிசேஷநிர்ணயம்.

ஸ்ரீவசனபூஷணத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில் (194.) "பாகவதாபசாரந் தான் அனேகவிதம்" என்று தொடங்கி (217.) * ச்வபசோபி மஹீபால* என்னு மளவும் இருபத்தொரு சூர்ணைகளினுல் அருளிச்செய்யப்பட்டுள்ள அர்த்தவிசேஷங்களில் தெளிவுபெறவேண்டிச் சில ஆப்தர்களின் கோரிக்கையினுல் இக் கட்டுரை எழுதலாகிறது. ஸ்ரீவசனபூஷணத்தில் இந்த ப்ரகரணம் 'உத்க்ருஷ்ட ஜன்மப்ரபாவம்' என வழங்கப்பெறும் ஆழ்வார்களில் நம்மாழ்வார்போன்ற சிலரையும், ஸ்ரீமந்நாதமுனிகளுக்குப் பிறகு மாறனேர்நம்பி திருக்கச்சிநம்பிபோல் வாரையும் எடுத்துக்கொள்வோம். இவர்கள் லௌகிக த்ருஷ்டியால் தாழ்ந்த வருணத்தவர்களாக நினைக்கப் படுபவர்கள். பகவச் சாஸ்த்ரங்களில் *கிமப்ய த்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வ யோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்* என்றிங்ஙனேயுள்ள வசனங்களினுல் இவர்களினுடைய ஜாதிவிசேஷங்களைப்பற்றி நாம் சிந்திக்கத்தகாது. இவர்கள் பக்கலிலே ஜன்மநிரூபணம், வ்ருத்த நிரூபணம், ஜ்ஞான நிரூபணம், பந்து நிரூபணம், வாஸ நிரூபணம் முதலியவற்ருல் அஸ்மதாதிகள் அபசாரப்படநேரும்.

இவற்றில் மற்றெல்லா நிரூபணங்களிற் காட்டிலும் ஜன்மநிரூபணமென்பது மிகவும் க்ரூரம் (அதாவது) ஸர்வேச்வரன் மிகவும் நிக்ரஹிக்கைக்கு ஹேதுவானது என்று விரிவாக நிரூபிக்கப்பட்டு வருகின்றது. 208) "ஜன்மவ்ருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கும் இழவுக்கும் அப்ரயோஜகம்." (209) "ப்ரயோஜகம் பகவத்ஸம்பந்தமும் ததஸம்பந்தமும்." என்னுமிரண்டு சூர்ணைகளினுலே ஜன்மோத்கர்ஷாபகர்ஷம் ஒருவாறு தலைக்கட்டப்பட்டது. எங்ஙனே யென்னில்; உயர்ந்த வருணத்தில் பிறந்தால் வேதாத்யயனம் முதலியவற்றுக்கு ஸௌகரியம் ஏற்பட்டு, அதன்மூலமாகப் பேறுபெறலாகுமென்றும், தாழ்ந்த வருணத்தில் பிறந்தால் வேதாத்யயநாதி ஸௌகர்யமின்மையாலே பேறுபெற வழியில்லாமல் இழக்கவே நேருமென்றும் நினைக்கலாகாது; ஜன்மோத்கர்ஷம் பேற்றுக்கு உடலன்று, ஜன்மாப கர்ஷம் இழவுக்கு உடலன்று. பகவத் ஸம்பந்தம் பேற்றுக்குறுப்பு அஃதில்லாமை இழவுக்குறுப்பு—என்று முடிக்கப்பட்டது. பகவத்ப்ராவண்யமுள்ள வொருவன் லௌகிகத்ருஷ்டியாலே தாழ்ந்த ஜன்மத்தில் ஜனித்திருந்தாலும் அவன் சிறந்தவனே; அந்த ப்ராவண்யமில்லாதவன் லௌகித்ருஷ்டியாலே உயர்ந்ததான வருணத்தில் பிறந்திருந்தாலும் தாழ்ந்தவனே – என்பது இவ்வளவால் நிரூபிக்கப்பட்டவிஷயம்.

இதற்குமேல் (210) "பகவத்ஸம்பந்தமுண்டானுல் இரண்டுமொக்குமோ வென்னில், ஒவ்வாது" என்று தொடங்கி (216.) "ஆகையால் உத்க்ருஷ்டஜன்மமே ச்ரேஷ்டம். *ச்வபசோபி மஹீபால." என்றளவுமுள்ள சில சூர்ணைகளில் தெளிவு பெருதவர்களுக்குத் தெளிவு பிறப்பிக்கின்ருேம்.

**விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் கண்ணுடிபோல் விளங்காநிற்கக் கலக்கத்திற்கு எள்ளளவும் ஹேதுவில்லை. ஆனுலும், இக்காலத்திலுள்ள அபக்ருஷ்டஜன்மாக்கள் செருக்குக் கொள்ளுகையாகிற அனர்த்தம்** நேரிடாமைக்காகச் சில பெரியார்களும் அர்த்தத்தை மாறுபடுத்தி ஏதோ சொல்லிவருகிருர்கள். இக்காலத்தவர்களின் செருக்கு அவரவர்தாம் அனர்த்தப்பட்டொழிகைக்கு உறுப்பாகட்டும். அதனுலென்ன? ஸ்ரீஸூக்தியருளிச் செய்த ஆசார்ய ஸார்வபௌமர்களின் அந்தரங்கத்தை நாம் அபலபிக்கலாகாது. ஆசார்ய ஹ்ருதயத்தில் முதற்பிரகரணத்தின்முடிவில் "ம்லேச்சனும் பக்தனுனல்.... ....அறிவார்க்கிறே ஜன்மோத்கர்ஷாபகர்ஷங்கள் தெரிவது. அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணுச்ரமவித்யாவ்ருத்தங்களை கர்த்தபஜன்மம் ச்வபசாதமம் சில்பநைபுணம் பஸ்மாஹுதி சவவிதவாலங்காரமென்று கழிப்பர்கள்"........சாதியந்தணர்களேலும் தகரவிழுவர்" என்னுமளவாகவுள்ள சூர்ணைகளினுல் கல்மஷலேசமுமின்றிக்கே பெறுந்தெளிவை ஸ்ரீவசன பூஷணத்திலும் பெறக் குறையில்லை. இனி ப்ரக்ருத நிருபணத்தில் இறங்குவோம்.

(210.) "பகவத்ஸம்பந்த முண்டானுல் இரண்டுமொக்குமோ?" என்று ஒரு கேள்வியெழுவிக்கப்பட்டது. இதன் கருத்து யாதெனில்; தாழ்ந்தவருணத்திற் பிறந்தவொருவனும், உயர்ந்தவருணத்திற் பிறந்தவொருவனுமான இருவரையெடுத்துக்கொள்வோம். [நம்மாழ்வாரையும் மதுரகவிகளையு மெடுத்துக்கொள்வோம். அல்லது, பிள்ளையுறங்காவில்லிதாஸரையும் எம்பெருமானுரையும் எடுத்துக்கொள்வோம்.] நீசோச்சவர்ணஸ்தர்களான இருவர்க்கும் பகவத் ப்ராவண்யம் குறையறவுள்ளது. பேற்றுக்கு ப்ரயோஜகமானது இதுவேயாகையாலே ப்ரயோஜகமல்லாத வருணத்தைத் தள்ளி, ப்ரயோஜகமான இதனையே யிட்டுப் பார்க்குமளவில் இஃது இருவரிடத்திலும் துல்யமாயிருக்கச் செய்தேயும் ஒருதலையில் ப்ராஹ்மண்யமாகிற ஜன்மோத்கர்ஷமிருக்கையாலே அஃதில்லாத பாகவதரைக்காட்டிலும் அஃதுடைய அந்தணர் உயர்ந்தவர்தானே — என்பது இங்கு எழுவிக்கப்பட்டது கேள்வியின் கருத்து.

இதற்கு ஸ்வாமி ஸாதிக்கும் ஸமாதானமே முக்கியமாக ஆராயத்தக்கது' ஒவ்வாது என்று மூலம். இங்கு மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு—"ப்ரஷ்டாவானவன் உத்க்ருஷ்டமாக நினைத்ததை அபக்ருஷ்டமாகவும், அபக்ருஷ்டமாக நினைத்ததை உத்க்ருஷ்டமாகவும் திருவுள்ளம்பற்றி அதுக்கு உத்தரமருளிச்செய்கிருர் ஒவ்வாதென்று." என்பதாக. ப்ராஹ்மணஜன்மம் ஸ்வத: உத்க்ருஷ்டமென்றும், மற்றுள்ள ஜன்மம் ஸ்வத: நிக்ருஷ்டமென்றும் கொள்வது பிசகு; அப்படிப்பட்ட கொள்கையினுலேயே கீழுற்ற கேள்வி எழுந்துளது; *பண்டைக்குலத்தைத் தவிர்ந்து — தொண்டக்குலத்திலுள்ளீர்!* என்கிற பெரியாழ்வார் திருவாக்கை நோக்குமிடத்து தொண்டக்குலம் சிறப்புற்றதாகும். "உயர்ந்ததாக ப்ரமிக்கப்படுகிறது ப்ராஹ்மண ஜன்மம்" என்பதை உபபாதிக்க இரண்டு ஹேதுக்களுண்டு. முதல் ஹேதுவைக் கேளீர்; ஜிதந்தாஸ்தோத்ரத்தில் பயஹேதுக்களைச் சொல்லிவரும் நான்முகன் *சரீரே ச வர்த்ததே மே மஹத் பயம்*

என்கிறான். ஸ்வரூபநாசகங்களான உபாயாந்தரங்களிலே அந்வயிக்கச்செய்து இந்தப்ராஹ்மணசரீரம் நம் குடியைக் கெடுத்துவிடுமோவென்று நெஞ்சு குழம்பி யிருப்பதாகச் சொல்லுகிறான். அநந்யோபாயத்வமாகிற அதிகாரத்தில் நின்றும் நழுவுதல் வருகைக்கு யோக்யமாயிருக்கை—முதல் தோஷம். (இதுதான் முந்தின ஹேது.) இனி இரண்டாமதாவது—ஸ்வரூபப்ராப்தமான நைச்யம் ஜன்மஸித்தமா யிருக்க, அதுதன்னை ஏறிட்டுக்கொள்ளவேண்டியிருக்கை. எதற்கு? கீழ்ச்சொன்ன ஜன்மத்திற்கு. அஃது எது? உத்க்ருஷ்டமாக ப்ரமித்தஜன்மம். ப்ராஹ்மண ஜன்மம் என்றபடி. வேறு ஜன்மம் ஸர்வாத்மநா இங்கு அப்ரஸக்தமென்பதை நெஞ்சில் சிக்கனக் கொள்க. ஜ்ஞானஜன்மமென்று ஒன்றைக்கல்பிப்பது ஏலாது.

* தஸ்மாத் ப்ராஹ்மணோ முக்ய: * என்று வேதத்தில் (காண்டம் 7ல்) ஸாமான்யமாகச் சொல்லியிருப்பது கொண்டு உத்க்ருஷ்டமாக ப்ரமிக்கப்படுகிற ப்ராஹ்மண ஜன்மத்திற்கு ஸ்வரூப ப்ராப்தமான நைச்யம் பாவிக்கவேண்டிய தாகத் தானுள்ளது; அடியேன் என்று இவன்வாயில் வருவது அதிசயிக்கத்தக்க தேயாகும். அபக்ருஷ்ட மென்று லௌகிகர் வழங்கும் உத்க்ருஷ்ட ஜன்மத்திற்கு பாகவதாநுவர்த்தநாதிகளில் வந்தால் ஆபிஜாத்யர்திகளால்வரும் அஹங்கார ஸ்பர்சமின்றிக்கே அடிமை பிறந்துடைமையர யிருக்கையாலே நைச்யம் பாவிக்க வேண்டாதே ஜன்ம ஸித்தமாம். ஆக ப்ராஹ்மண ஜன்மத்திற்கு ஸம்பாவித மான இரண்டு தோஷங்கள் [கீழே நிரூபிக்கப்பட்டவை] உள்ளதனாலும், பாகவத ஜன்மத்திற்கு அவை யில்லாமையாலும் உபய ஜன்மங்களுக்கும் பகவத்ப்ராவண்யத் தாலே யாகும் ஸாம்ய மிருக்கச்செய்தேயும் நிருக்த உபய தோஷ ராஹித்யமாகிற உயர்த்தியைப் பெற்றதான நம்மாழ்வார் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் திருக்கச்சி நம்பிகள்போல்வாருடைய உத்க்ருஷ்ட ஜன்மமே ச்ரேஷ்டமென்றதாயிற்று.

இங்கே சிலர் க்ஷேபிப்பதொன்றுண்டு. அதாவது, பாகவதர்களுக்கு உபா யாந்தரங்களில் அந்வயித்துக் கெடுவதற்கு உரிமை யில்லையாகிலும் தேவதாந்தர ப்ராவண்யமாகிற கேடு உண்டாக ப்ரஸக்தியுண்டன்றோ; ஆகவே அந்த ஜன்ம மும் ஸதோஷந்தானே யென்று. இந்த வாதம் சிறிதும் ஏலாது; ஏனென்னில்; பகவத்ப்ரவண பாகவத வ்யக்தியன்றோ இங்கு லக்ஷ்யம். உபேயாந்தரத்தில் அந்வயமுண்டானால் அந்த வ்யக்தியைப்பற்றி விசாரமே விளையாதென்றுவிடுக்க. பிள்ளைலோகாசார்யர் ப்ரக்ருத விஷயத்தைத் தலைக்கட்டும்போது "ச்வப சோபி மஹீபால!" என்கிற ப்ரமாண வசனத்தைக் காட்டி முடித்திருக்கிறார். அதற்கு வியாக்கியானம் செய்தருளாநின்ற மணவாள மாமுனிகள்—

> "இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணங் காட்டுகிறார் (*ச்வபசோபி மஹீபால!) என்று "ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணு பக்தி விஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம:" என்று – எத்தனையேனும் நிக் ருஷ்ட ஜந்மாவாயிருந்தானேயாகிலும் பகவத்பக்தனானவன் த்விஜனிற் காட்டில் அதிகன்; உத்க்ருஷ்ட ஜன்மாவானவளவன்றிக்கே உத்த மாச்ரமியாயிருந்தானே யாகிலும் பகவத்பக்தி ஹீநனானவன் ச்வப சனிற் காட்டில் அதமன் என்று வர்ணாச்ரமங்களில் சரக்கறுத்து பகவத்

ஸம்பந்தமே உத்கர்ஷஹேதுவாகச் சொல்லுகையாலே ப்ரம்ஹஸம்பாவ நாதிகளாலே தத்ஸம்பந்த விரோதியான ஜன்மத்திற்காட்டில் ததநு ரூபமான ஜன்மமே ச்ரேஷ்டமென்று கருத்து." என்றருளிச்செய்து,

இதற்குமேல் ஒரு பங்க்தி யருளிச்செய்கிறார், அதுதான் இங்கு உயிர்நிலை யானது; அதாவது, "இங்ஙனன்றாகில் கீழ்ச்சொன்ன வர்த்தத்துக்கு இது ப்ரமாண மாக மாட்டாதிறே" என்பது. இங்ஙனன்றாகில் என்பதற்கு என்ன பொருள்? கீழ்ச்சொன்ன வர்த்தம் என்பது எது? எடுத்த வசனம் அதற்கு ப்ரமாணமாக மாட்டாமை எப்போது? என்று ஆழ்ந்து ஆராய்ந்தாலொழியக் கலக்கம் தீர்ந்து தெளிவு பிறவாது. எடுத்த வசனம் *ச்வபசோபி மஹீபால!* என்பது. இதன் பொருளை மாமுனிகள் தாமே விவரித்தருளினபடியைக் கீழே யெடுத்துக்காட்டி யாயிற்று. மீண்டும் விவரிப்போம். இந்த வசனத்தின் பூர்வார்த்தத்தில் (த்விஜாதிக:) என்றும், உத்தரார்த்தத்தில் (ச்வபசாதம:) என்று முள்ளது. ஆனால் த்விஜனுக்கும் ச்வபசனுக்கும் விசேஷண மொன்றுமிடவில்லை. விஷ்ணுபக்த: ச்வபச: த்விஜாதிக:; விஷ்ணுபக்திவிஹீந: யதி: ச்வபசாதம: என்றுள்ளது. மணவாளமாமுனிகள் "வர்ணாச்ரமத்தில் சரக்கறுத்து" என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தியானது இப்போது குறிக்கொள்ளப் படவேணும். "விஷ்ணுபக்த: ச்வபச: த்விஜஸமாந:" என்று சொல்லப்படவில்லை; "விஷ்ணுபக்திவிஹீந: யதி: ச்வபசஸமாந:" என்றும் சொல்லப்படவில்லை. உள்ள சொற்போக்கை உற்று நோக்கவேணும், விஷ்ணுபக்தனை நீசஜாதீயன் உத்க்ருஷ்டஜாதீயனிற்காட்டில் உத்க்ருஷ்டன்-என்று சொல்லியிருப்பதால் இவர்களுக்கு ஸாம்யம் மட்டுமே யன்று, ஆதிக்யமுமுண்டு; அந்த ஆதிக்யம் உத்க்ருஷ்ட ஜாதீயனிடத்திலன்று; அபக்ருஷ்டஜாதீயனிடத்தில் — என்று தேறிற்றாகிறது. (ஸவ்வாது) என்ற மூல ஸ்ரீஸூக்தியின் பொருள் இப்போது தெளிவாயிற்றன்றோ?

மூல சூர்ணைகளுக்கு வியாக்கியான மருளிச் செய்து தலைக்கட்டின மாமுனிகள், திடீரென்று "இங்ஙனன்றாகில் கீழ்ச் சொன்ன அர்த்தத்துக்கு இது ப்ரமாண மாக மாட்டாதிறே" என்றருளிச் செய்ததை விசேஷித்து நோக்கவேணும். இந்த பங்க்தியருளிச் செய்யவேண்டிய ஆவச்யகதை என்ன? என்று விமர்சிக்க வேண்டுவது விவேகிகளின் கடமையாகும். அக்காலத்தில் சிலர் வேறு விதமாகப் பொருள் கூறிக் கொண்டிருந்தார்களோ என்னவோ? *ச்வபசோபி மஹீபால!* என்கிற ப்ரமாணவசனத்தின் பொருளைச் சிலர் வேறு வகையாகச் சொல்லிக் கொண்டிருந்திருக்கக்கூடும். [த்விஜாதிக:] என்பதற்கு பகவத் பக்தி ஹிநனான த்விஜனிற் காட்டில் சிறந்தவன் என்றும்; [ச்வபசாதம:] என்பதற்கு பகவத் பக்தி யுக்த ச்வபசனிற் காட்டில் அதமன் என்றும் இக் காலத்திலும் சிலர் பொருள் கூறிக் கொண்டிருப்பதுண்டே. இப்படி பொருளாகில், இந்த ப்ரகரணத்தில் இந்த ப்ரமாணம் எடுத்துக் காட்டப்பட்டது தகுதியற்றதாகும்—என்பது மணவாள மாமுனிகளின் நிஷ்கல்மஷமான நிர்ணயம்.

இதற்குமேல் வேறுவிதமான ஆக்ஷேபம் உதிக்கலாம். (அதாவது) ஸ்வத: உத்க்ருஷ்டமென்று சாஸ்த்ரப்ரத்யக்ஷங்களினால் தேறுகிற ப்ராஹ்மணஜாதியை இப்படி கழித்துவிடலாமா? ஏதோ அதிவாதமாக ப்ரமாண மிருந்தால் அதைக்

கொண்டு இவ்வளவு விப்லவம் செய்துவிடலாமா ? நிக்ருஷ்டவருணத்தவர்களின் உத்கர்ஷத்தை நாம் அனுஷ்டானத்தில் காண்கிறேமா ? காட்டுகிறேமா ? இல்லையே? அப்படியிருக்க இவ்வர்த்தம் எதற்காக க்ரந்தாரூடமாகவேணும் ? பகவத் ஸம்பந்தமும் ததஸம்பந்தமுந்தான் உத்கர்ஷாபகர்ஷங்களுக்கு ப்ரயோஜகம் — என்று சொல்லிவிடலாமா ? பகவத்ஸம்பந்தமில்லாத நிக்ருஷ்ட ஜாதீயன் தொலையட்டும் ; பகவத் ஸம்பந்த ஜ்ஞானமுள்ள நிக்ருஷ்ட ஜாதீயர்கள் எண்ணிறந்தவருளரே; அவர்களிற்காட்டிலும் ப்ராஹ்மணர் நிக்ருஷ்டர் என்ரு ஒரு சாஸ்த்ரார்த்தமிருக்கும் ? (என்று பிரபலமாக ஆக்ஷேபிக்க நேரும்.)

இதற்குச் சொல்லுகிறேம். ஆசார்யஹ்ருதயத்தில் (85) "ம்லேச்சனும் பக்தனுல் சதுர்வேதிகள் அநுவர்த்திக்க அறிவுகொடுத்துக் குலதைவத்தோடொக்கப் பூஜைகொண்டு பாவநதீர்த்தப்ரஸாதனு மென்கிற திருமுகப்படியும்" என்றுள்ள ஸ்ரீஸூக்தி கொண்டு தெளியவேணும். *மத்பக்தஜநவாத்ஸல்யம் பூஜாயாஞ் சாநுமோதனம், ஸ்வயமப்யர்ச்சநஞ் சைவ மதர்த்தே டம்பவர்ஜனம்; மத்கதாச்ரவணே ஸக்தி: ஸ்வரநேத்ராங்கவிக்ரியா, மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி. பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, ஸ விப்ரேந்த்ரோ முநிச் ஸ்ரீமாந் ஸ யதிஸ் ஸ ச பண்டித:. தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்.* என்கிற ப்ரமாண வசனங்களே நம் ஆசாரியர்களின் ஸித்தாந்தத்திற்கு மூலாதாரம். *எட்டினைய பேதமோடிறைஞ்சி நின்று* என்று திருமழிசைப்பிரானும் அஷ்டவித பக்தியை ப்ரஸ்தாவிக்கிறர். இந்த ஸம்பத்து மலிந்தவர்களைப்பற்றினது உத்கர்ஷவாதம் என்று உணரப்பெறின் ஒருவகையான க்ஷோபமும் இடம்பெருது. இவ்வுண்மையை யுணராதவர்கள்- இக்காலத்தில் அஹங்காரக்ரஸ்தர்களாய், ஸ்ரீ வசன பூஷணத்தில் நமக்கே ஏற்றம் கொடுக்கப்பட்டிருக்கின்றதென்று இறுமாந்து சண்டைக்கும் வருபவர்களான ஆபாஸ பாகவதர்களுக்கு ஓர் ஏற்றம் வந்துவிடுமென்று நினைப்பது மிகத்தவறு. எடுத்துக் காட்டின ஸ்ரீ வசனபூஷண ஸ்ரீஸூக்திகளானவை ஆழ்வார்களில் நம்மாழ்வார் திருப்பாணாழ்வார் போல்வாரையும், பிற்பட்டவர்களில் மாறனேர்நம்பி திருக்கச்சிநம்பி, பிள்ளையுறங்காவில்லிதாஸர் போல்வாரையும் தவிர வேறுயாரையும் இலக்காகக் கொள்ளமாட்டாதவை. மணவாளமாமுனிகளின் காலத்திற்குப் பிற்பட்டவர்கள் ஒருவர்கூட இந்த ஸ்ரீஸூக்திகளுக்கு விஷயபூதரல்லர் என்பது திண்ணம் "நைச்யம் ஜன்மஸித்தம்" என்றும் "நைச்யம் பாவிக்க வேண்டாதபடி பள்ளமடையாயிருக்கும்" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளுக்கு நேர் விருத்தமாகச் செருக்கிப் பேசுமவர்களை நாம் நெஞ்சாலும் இட்டெண்ணவேண்டியதில்லை.

உபதேசரத்தினமாலையில் ஸ்ரீ வசனபூஷணத்தின் பெருமையை ஏழுபாசுரங்களாலே அருளிச்செய்யாநின்ற மாமுனிகள் *சச்சம்பிரதாயம் தாமுடையோர், கேட்டக்கால், மெச்சுவியாக்கியைகளுண்டாகில் - நச்சியதிகாரியும் நீர்* என்றெரு பாசுரமருளிச் செய்ததன் காரணத்தை ஆழ்ந்து ஆராயவேணும். ஸத்ஸம்ப்ரதாய விருத்தமான சில அர்த்தங்கள் மாமுனிகளின் காலத்திலேயே வெளிவந்திருக்கும் போலும். சில சிஷ்யர்களுக்கு ஜ்ஞானனுஷ்டான ஸம்பன்னர்களான ஆசார்யர் அமையவில்லையென்னுங்காரணத்திறைல் *ஞானமனுட்டான மிவை நன்ருகவே யுடையனை, குருவையடைந்தக்கால்* என கிற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தை "ஞானமனுட்டானமிவை நன்ருகவே யுடையன் — (சிஷ்யன்) ஆனகுருவை - பரம்பராப்ராப்தனை குருவை" என்று அர்த்தம் செய்வது போன்ற அபார்த்தங்களை மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகள் இறையும் ஸஹிக்கமாட்டா.

ஸ்ரீ:



ஸ்ரீ ருக்மிணி ஸமேத ஸ்ரீ வேங்கட க்ருஷ்ண ஸ்வாமிநே நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

### திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி பிரம்மோத்ஸவத்தில்

# மதுரைமுத்து ஜமேதார் கண்ணாடி முத்துபல்லக்கு சேவையும்

# நூற்றுப் பதினைன்காவது ஆண்டு விழாவும்

1969ம் வருஷம் மே மாதம் 8ம் தேதி குருவாரம் இரவு விசேஷ அலங்கார வைபவத்துடன் நடைபெற்ற காக்ஷி இது. பல பிரமுகர்கள் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். பெருமாள் காலக்கிரமப்படி புறப்பட்டு, நூற்றுக்கணக்கான பக்த குழாங்களுக்கு சேவைசாதித்தருளினர்.

இந்த பல்லக்கை நூறு வருஷங்களுக்கு முன்னாலேயே அந்நாளில் பிரபல வர்த்தகர்களும், பகவத் பாகவத பக்தர்களுமான மண்டி நாகப்ப செட்டியார் அவர் குமாரர், மண்டி குப்புசாமி செட்டியார் இவர்களால் நூதன முறையில், அழகிய பதுமைகளையும் கண்ணாடி பில்லைகளையும் அமைத்து கவர்ச்சிகரமான தோரணையில், ஏராள திரவியச் செலவில் செய்யப்பட்டும், பிரத்தியேகமான ஒரு தனிப்பட்ட மண்டபத்தில் வைத்தும், போதுமான பாதுகாப்புடன் அன்று முதல் இன்று நாள் வரையில், ஆண்டாண்டு தோறும் இடைவிடாமல் ஷை உச்சவத்தை பிறகு அவர்களின் புத்ர பௌத்ரர்களாலும் பரம்பரையாக நடத்திக்கொண்டுவரும் ஓர் பூர்வீக உச்சவ கண்காக்ஷியாகும் 108 திவ்யக்ஷேத்திரங்களில் சுமார் 10, 12 கண்ணாடி பல்லக்கு சேவைகளுள் தலைசிறந்ததாக விளங்குவது இந்த மதுரைமுத்து ஜமேதார் கண்ணாடிபல்லக்கு சேவையாகும். எந்த திவ்ய க்ஷேத்திரத்திலும் நிரந்தரமாக இடை விடாமல் நூறு வருஷங்களுக்கு மேலாக பரம்பரையாக நடத்திவரும் உபயக்காரரை மெச்சத்தக்கதாகும். இப்போது ஷை உச்சவத்தை மாமூல்படி சிறப்பான முறையில், நடத்திக்கொண்டு வருபவரும் பிரதான நிர்வாகஸ்தருமான M. V கிருஷ்ணன் (Alias) M. வெங்கடகிருஷ்ணன் என்பவருக்கும் அன்னார் குடும்பஸ்தர்களுக்கும் ஸ்ரீ எம்பெருமானும் பிராட்டியும், நீண்ட ஆயுளையும் திடகாத்திர சரீரமும் திரண்ட செல்வமும், பகவத்கைங்கர்யகுதூகலமும் அளித்து ரக்ஷிப்பாராக.

22—5—69. திருவல்லிக்கேணி பக்தகோடிகள்.

அடியேன் ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் செய்யும் விண்ணப்பம். எழுபத்தைந்து வருடங்களுக்கு முன் மறைந்துபோன பெரியார்களின் திருவுருவப்படங்களை ஸேவிக்க நாம் பாக்கியமற்றவர்களாயிருந்தாலும் பாக்கியம் படைத்தவரையில் பல பெரியார்களின் திருவுருவப் படங்களை இக்காலத்தவர்களும் பிற்காலத்தவர்களும் கண்ணுரக்கண்டு களிக்கும்படி செய்விக்கவேணுமென்பது இளமை தொடங்கியே அடியேனுக்கு இடையருமல் அநுவர்த்திக்கும் அவா. இப் புத்சகம் பல போர்கள் ஆதரத்தோடு வாசிக்கக் கூடியதாதலால் இதில் பல பெரியார்களின் திருவுருவப் படங்களை ஊடேயூடே சேர்த்து வைக்கவேணுமென்று தோன்றி, முதன் முதலாக இந்த நித்யஸ்மரணீய தம்பதிகளை இங்கே ஸேவை ஸாதிக்கச் செய்கிறேன். ஏற்கெனவே ஸ்ரீ ராமாநுஜன் 214-ல் இவர்களின் பெருமையை விளக்கியிருக்கிறேன். இந்த தம்பதிகளே அயோத்யையில் ஸரயூ கோலாகாட் பரிஸரத்தில் திவ்ய ஸன்னிதி நிர்மாணம் செய்வித்தவர்கள். இற்றைக்கும் தக்ஷிணுதி ஸ்வாமிகளால் நித்யோத்ஸவாதிகள் குறையற நடைபெற்று வருகின்றன.**



ஸ்ரீமதுபய வே. யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி

ஏறக்குறைய 65 ஆண்டுகட்கு முன்பு திருநாடலங்கரித்த இந்த மஹா ஸ்வாமியின் பெருமைகளை ஸ்ரீ ராமாநுஜன் 226-ல் இத் திருவுருவப் படத்துடனும் வெளியிட்டிருக்கிறேன். ஸ்ரீபெரும்பூதூரில் மஹா ப்ரக்க்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ மதுபய வே. குண்டலம் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமிக்கு அருளிச்செயல் மூலமும் வியாக்கியானங்களும் ப்ரவசனம் செய்தருளின மஹான் இவர். ஆடூர் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தர். ஸ்ரீபெரும்பூதூரில் இந்த ஸ்வாமியின் திருவருளால் வித்வான்களானவர்கள் பலர் என்று கேள்வி......*



ஸ்ரீ மதுபய வே. ஆடூர் ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமி

இந்த ஸ்வாமி ஸ்ரீ காஞ்சீபுரியில் ஸன்னிதி வீதியில் திருமாளிகையுள்ளவர். இவர் திருநாடலங்கரித்து முப்பது வருடங்களுக்குமேலிருக்கும். இளமையில் காஞ்சீபுரியிலேயே அண்ணா ஸன்னிதியில் நடந்துகொண்டிருந்த வேதாந்தவைஜயந்தீ பாடசாலையில்



ஸ்ரீ மதுபய வே. திருமணி அப்பன் ஸ்வாமி.

அடியேனுக்கு ஸஹாத்யாயியாய் ஸாஹித்யம் வாசித்துக்கொண்டிருந்தவர். பிறகு ஸ்ரீபெரும்பூதூரிலும் திருவல்லிக்கேணியிலும் எழுந்தருளியிருந்து உபய வேதாந்த நிஷ்ணாதராயினர். ஸ்ரீ வைஷ்ணவ சிஷ்ய ஸம்பத்துள்ளவர். திருக்குமாரர்கள் விளங்கி வருகிறார்கள்.

ஜகத்விக்க்யாத வித்வத் ஸார்வ பௌமராக விளங்கியெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபய வே. காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி ஸன்னிதியில் ஸகலார்த்தங்களும் கேட்டு, திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் வெகுகாலம் ஸம்ப்ரதாய ப்ரவசனம் செய்து கொண்டெழுந்தருளியிருந்தவர் இந்த ஸ்வாமி. (ஏறக்குறைய 30 வருடங்களுக்கு முந்தியது.) இவர்க்குத் திருக்குமாரர்களுளர். ஸ்வாமி பக்கத்தில் தீக்ஷையுடன் ஸேவை ஸாதிப்பவர் திருநாராயணபுரம் உபயவேதாந்த வித்வான் திருமலை அனந்தாண் பிள்ளை கோவிந்தப்பங்கார் ஸ்வாமி.



ஸ்ரீமதுபய வே. சேனங்குளம் பஹுகுடும்பி வரதாசார்ய ஸ்வாமியின்
பகவத் விஷய ப்ரவசன சாத்துமுறை கோஷ்டி.
(திருவல்லிக்கேணி.)

இங்கே ஸேவை ஸாதித்தருளும் ஸ்ரீமதுபய வே V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி சென்னையில் மிக ப்ரஸித்திபெற்ற அட்வகேட். V. என்கிற இன்ஷலுக்கு உபயவேதாந்தபுரம் என்று பொருள், ஸ்ரீ காஞ்சிமா நகரில் ஸுப்ரஸித்த ஆசார்ய புருஷராகவும் வித்வத்வரேண்ய ராகவும் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபய வே. அப்பன் ப்ரண தார்த்தி ஹராசார்ய ஸ்வாமி திருவடி ஸம்பந்தம் பெற்று விலக்ஷணஞானம் பெற்றவர். நீதி மன்றங்களில் பலபேர்களை ஆபத்தில் நின்று தப்பவைத்த மஹோபகாரகர். (தப்பவைத்த) என்று இறந்தகாலமாகச் சொல்லவேணுமோ? நிகழ்காலத்திலும், திருமேனி அசக்தி மிக்க இக்காலத்திலும் அடிபணிந்தவர்களைக் கைவிடுவதில்லை. சென்னை ஸத்காலக்ஷேப ஸபைக்குத் தலைவராக விளங்குபவர். அடியேன் சென்னையில் பிரவசனம் ஆரம்பித்த 1931-வது ஆண்டு முதலாகவே இந்த ஸ்வாமியின் திருவருளை விசேஷமாகப் பெற்றவன். பல்லாண்டு பல்லாண்டு வாழ்க.



ஸ்ரீமதுபய வே. V. ராஜகோபாலாசாரியர்ஸ்வாமி M L.
(Kilpauk-Madras.)

ஸ்ரீ மதுபய வே. V. N. வேங்கட வரதாசாரியர் ஸ்வாமி **Advocate, Egmore** இங்கே ஸேவை ஸாதிக்கும் இந்த ஸ்வாமியின் பெருமைகளைப்பற்றி ஸ்ரீ ராமாநுஜனில் பலகால் விஜ்ஞாபித்திருக்கிறேன். ஆனாலும் குறிப்பாக ஸ்ரீ ராமாநுஜன் நெ. 214 ஸஞ்சிகை 1966ஆ அக்டோபர் மாதத்தில் வெளி வந்ததில் இந்தத் திருவுருவப்படத்துடனே சக்ரவர்த்தி வம்ச பிருதாவளிகளுடனுங் கூட வெளியிட்டிருப்பதை நினைவூட்டுகிறேன். கோயில் திருமலை பெருமாள் கோயில் என்று ஸுப்ரஸித்தமாக விளங்கும் ஸ்ரீரங்கம் காஞ்சி திருப்பதி ஆகிய மூன்று திவ்ய தேசங்களிலும் ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷணம் பல வருஷங்களாக இந்த ஸ்வாமிக்கு அதீனமாக இருந்து வருகிறது. ஸ்ரீ ராமாயணத்தில் சக்ரவர்த்தி திருமகனைப் பற்றி "நாவிஜித்ய நிவர்த்ததே" என்றுப்போலே எந்த வ்யவஹாரத்திலும் ஸ்வாமி வெற்றி பெற்று விளங்கி வருகிறார்.



ஸ்ரீ உ. வே. V. N. வெங்கட வரதாசாரியார், .A. B. L.

"நித்யஸ்ரீர் நித்யமங்களம்."

ஸ்ரீ பெரும்பூதூரில் வித்வத் ஸார்வபௌமராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபய வே. ஆஸூரி. பெரிய ராமாநுஜாசாரியர் ஸ்வாமியின் ஜ்யேஷ்ட திருக்குமாரரான ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி இங்கே ஸேவை ஸாதிக்கிறார். இவர் திருநாட்டுக்கெழுந்தருளி இரண்டு வருடங்களுக்கு மேலாகிறது. முக்கியமாக வியாகரண சாஸ்திரத்தைப் பூர்த்தியாக அதிகரித்து திருத்தகப்பனார் ஸன்னிதியிலேயே உபய வேதாந்த ரஹஸ்யங்களை யதிகரித்துச் சிறந்த வாக்மியாக விளங்கினவர். வைதுஷ்யத்திற்கு மேற்பட்ட ராஸிக்யமுடையவர். இவருடைய திருத்தம்பிமார்களிருவரும் வித்வான்களாக விளங்கி வருகிறார்கள். எம்பெருமானார் திருவவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூர் நூறு வருஷங்களுக்கு உட்பட்ட காலத்தில் பிரபல வித்யாபீடமாக விளங்கிவந்தது. ஏதோ த்ருஷ்டி தோஷத்தினால் தற்காலம் பழைய வித்வான்கள் தவிர புது வித்வான்கள் ஏற்படுவதற்கு இடமில்லாமலிருந்து வருகிறது. எம்பெருமானாருடைய திவ்ய கடாக்ஷம் புத்துயிர் பெறவேணும்.



ஸ்ரீமதுபய வே. ஆஸூரி. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி
ஸ்ரீபெரும்பூதூர்.

இங்கே ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீ உ. வே. வரதராஜய்யங்கார் ஸ்வாமியைப்பற்றி ஸ்ரீ ராமாநுஜனில் (226-ல்) விரிவாக வெளி வந்திருக்கின்றது. இந்த ஸ்வாமி டில்லி மாநகரில் பல வருடங்கள் உயர்ந்தபதவியை வஹித்து வாழ்ந்து, அவ்விடத்து ஸ்ரீ வைஷ்ணவ



ஸ்ரீமதுபய வே. R. வரதராஜய்யங்கார் ஸ்வாமி

ஸித்தாந்த ஸபைக்கு ப்ரதான நிர்வாஹக்ராகவும் எழுந்தருளி யிருந்தார். இரண்டு வருஷங்களுக்கு முன் விச்ராந்தி பெற்ற பிறகு திருவரங்கம் பெரிய கோயிலென்கிற ஸ்ரீரங்கத்திலும் ஸத்யமங்கல ப்ராந்தத்திலுள்ள ஸ்வக்ராமத்திலும் வஸித்துக்கொண்டு பகவத்பாகவத ஸேவையும் குணாநுபவமுமாக இருந்து வருகிறார். நித்யஸ்ரீர் நித்ய மங்களம்.

ஸ்ரீ:

# வம்பவிழ் கோதையும் நம்மவர் மேதையும்

ஒன்று பேசினாலும் எழுதினாலும் முன்னம் தங்கள் மனம் ப்ரஸன்னமாயிருக்க வேணும். இன்னது பேசுகிறோம் இன்னது எழுதுகிறோம் என்று தங்கள் மனம் தெளிவுறாதபடி எதையோ பேசுவதும் எதையோ எழுதுவதும் தங்களுக்கே தலை வேதனையாயிருக்கு மென்னத் தட்டில்லை. கீர்த்தி மூர்த்தியான (ஜகத்ப்ரஸித்தரான) திருப்புட்குழி ஸ்வாமி தம்மிடம் நியாய வேதாந்தங்கள் பயின்றவர்களில் ஒருவரை 'அக்கிலி பிக்கிலி ஸ்வாமி' என்றழைப்பராம். அவர் பேசுவதும் எழுதுவதும் உண்டாம்; இரண்டும் தலைகாலில்லாமலிருக்குமாம். அதனால் அவரை ஸ்வாமி அக்கிலி பிக்கிலி யென்பராம். இதை ஸ்வாமி திருக்குமாரர் பட்டண்ணா பலகால் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனால் அந்த விருது பெற்ற பண்டிதரை அடியேன் கண்டதில்லை' இப்போது காண்கிறேன். அவர்தாம் மதுராந்தகம் ஸ்வாமி யென்பவர்.

ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவின் கீலக மார்கழி ஸஞ்சிகையையும் கீலக பங்குனி ஸஞ்சிகையையும் ஒரு மஹான் அடியேனுக்கனுப்பி "இவற்றில் ஸ்ரீராமாநுஜனில் வெளிவந்த சில விஷயங்களுக்கு விடை வெளிவந்திருப்பதாகத் தோன்றுகிறது; கடாக்ஷித்தருளி உலகுக்கு உபகரிக்க வேணும்" என்று தெரிவித்திருந்தார். மார்கழி ஸஞ்சிகையில் உள்ளது வம்பவிழ் கோதை; பங்குனி ஸஞ்சிகையில் உள்ளது மறைகளின் மறைவு. இவ்விரண்டு விஷயங்களையும் அடைவே ஆராயத் தொடங்குகிறேன். முதலாராய்ச்சி* வம்பவிழ் கோதையைப் பற்றி.

திவ்யப் பிரபந்தங்களில் * அல்லியம் பூமலர்க் கோதாய் * பூங்கோதையாய்ச்சி * கள்ளவிழ்கோதை * கோலந்திகழ் கோதை * அல்லியங்கோதை * *கோதை நறுமலர் மங்கை * கோதைவேல் ஐவர்க்காய் * கோள்வினையாட்டியேன் கோதை * ....... இப்படி கோதை சொல் சேர்ந்த பாசுரங்கள் பலபல வருவதுண்டு. திருப்பாவை முடிவிலும் நாச்சியார் திருமொழியில் ஒவ்வொரு பதிகத்தின் முடிவிலும் வருகிற கோதை யென்னுஞ் சொல் மட்டும் ஆண்டாளைக் குறிப்பது. மற்றவிடங்களிலுள்ள [மேலே பலவிடங்களிலிருந்து எடுத்துக் காட்டிய பாசுரங்களிலுள்ள] கோதையென்னுஞ் சொல் ஒரு நபரையுங் குறிப்பதன்று; கூந்தல் என்றும் மாலையென்றும் இரு பொருள்களிலேயே அச்சொல் வந்திருக்கின்றது. திருவாய்மொழியில் (3—4— 4.) * வம்பவிழ்கோதை பொருட்டா * என்ற விடத்தில் நெடுநாளாகத் தொடர்ந்து வரும் சர்ச்சை பண்டித வுலகமறிந்தது. இதைப்பற்றிப் பல நூல்களை யெழுதியிருக்கிறேன். உலகம் பரவியிருக்கிறது. ஆனாலும் இப்போது வித்வான்களுக்கும் விமர்சகர்களுக்கும் விஷயம் புரிய வேண்டியதற்காக அடியேனுடைய நிரூபணங்களின் ஸாராம்சம் ஈண்டு உபஹரிக்கப்படுகின்றது. ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளிவந்திருக்கின்ற விடை இதற்குப் பொருத்தமாகவுள்ளதா? என்று விவேகிகள் ஆராய்வதற்கு இது இன்றியமையாததாகும்.

நெ.6

## கோதார்த்தோக்ஷ விமர்சம்

தென்மொழியில் பொதுப்பெயர், சிறப்புப்பெயர் என வழங்குமவற்றை ஸாமாந்ய நாமதேயம் விசேஷ நாமதேயம் என வடமொழியாளர் வழங்குவர். மாதர், மங்கை, மடந்தை, மின்னேரிடையாள், காவியங்கண்ணி என்றிப்படிப் பட்ட சொற்கள் தென்மொழியில் பொதுப்பெயர்கள். சீதை, நப்பின்னை, தேவகி என்றிப்படிப்பட்ட சொற்கள் சிறப்புப் பெயர்கள். லலநா. வநிதா, ஸுததீ, ஸுப்ரூ: என்றிப்படிப்பட்ட சொற்கள் வடமொழியில் ஸாமாந்ய நாமதேயங்கள். ஸீதா, அஹல்யா, ருக்மிணீ என்றிப்படிப்பட்ட சொற்கள் விசேஷ நாமங்கள். இத்தகைய விசேஷ நாமதேயங்களையிட்டு வரலாறுகள் சொல்ல வேண்டுமிடத்து, தமிழர்கள் மட்டும் ஸாமாந்ய நாமதேயங்களை [அதாவது பொதுப்பெயர்களை] யிட்டும் சொல்லுவதுண்டு. இராமன் சீதையுடன் புறப்பட்டானென்று சொல்ல வேண்டுமிடத்து 'இராமன் மின்னேரிடையாளுடன் புறப்பட்டான்' ........ மன்னவன் கருங்குழலியுடன் புறப்பட்டான்' என்றிப்படிச் சொல்லுவதுண்டு. 'மின்னேரிடையாள்' 'கருங்குழலி' என்ற சொற்களானவை பொதுவாக ஸ்த்ரீகளுக்கு வாசகங்களேயொழிய, சீதைக்குச் சிறப்புப் பெயர்களல்ல· வைதேகி, மைதிலி, சானகி என்றிப்படிப்பட்ட சொ களே சீதைக்குச் சிறப்புப் பெயர் களாகும். வடநூலார் இத்தகைய சிறப்புப் பெயர்ச் சொற்களையிட்டே கவியி யற்றுவர்கள். தொடர்ந்து கதை சொல்லிக்கொண்டு போமிடங்களில் இந்த விசார மில்லை. ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களில் சிறப்புப் பெயர்களையிட்டுக் கூறு வது சிறுபான்மையாகவும், பொதுப் பெயர்களையிட்டுக் கூறுவதே பெரும்ப ன்மை யாகவும் காணப்படும். இவ்விஷயத்திற்கு உதாரணங்காட்டவேணுமேயானால் ஆயி ரக்கணக்கான பாசுரங்கள் கிடைக்கும். விஷயம் நெஞ்சில் பதிவதற்காகச் சில உதாரணங்கள் எடுத்துக் காட்டுவோம் "மானேய் நோக்கி மடவாளை மார்வில் கொண்டாய் மாதவா" (திருவாய்மொழி) "நெய்வாய வேல்நெடுங்கண் நேரிழையு மிளங்கோவும் பின்பு போக, எவ்வாறு நடந்தனை யெம்மிராமாவோ! (பெருமாள் திருமொழி) 'வில்லேர்நுதல் வேல்நெடுங்கண்ணியும் நீயும் கல்லார் கடுங்கானந் திரிந்த' (பெரிய திருமொழி) இப்பாசுரங்களைக் காணலாம். (1) மானேய் நோக்கி மடவாளென்பது ஸ்த்ரீஸாமான்யத்துக்குப் பொதுவாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று; ஆயினும் நம்மாழ்வார் ஸ்ரீமஹாலக்ஷ்மியாகிற வ்யக்தி விசேஷத்தை விவக்ஷித்து 'மானேய் நோக்கி மடவாள்' என்றார். (2) 'நெய்வாய வேல் நெடுங்கண்ணேரிழை' என்பதும் ஸ்த்ரீகளுக்குப் பொதுவாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினும் குலசேகராழ்வார் ஸீதா பிராட்டியாகிற வ்யக்தி விசேஷத்தை விவக்ஷித்து, *நெய்வாய வேல்நெடுங்கண்ணே ரிழை* யென்றார். (3) *வில்லேர்நுதல் வேல்நெடுங்கண்ணி யென்பதும் ஸ்த்ரீகளுக் குப் பொதுவாசகமேயல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினும் திருமங்கையாழ்வார் ஸீதாபிராட்டியாகிற வ்யக்தி விசேஷத்தையே விவக்ஷித்து *வில்லேர்நுதல்வேல் நெடுங்கண்ணி யென்றார். கண்ணபிரானுடைய சரித்திரங்களில் பூதனையின் பெயரையிட்டே சொல்வதுமுண்டு. அது சில விடங்களில். பல விடங் களில் பொதுப்பெயரே காணப்படும். பெரிய திருமொழியில் * கஞ்சோர வெஞ்

குருதி வந்திழிய வெந்தழல்போல் கூந்தலாளை, மண்சேர முலையுண்டமாமதலாய் * (7—4—1) என்கிறார் திருமங்கையாழ்வார். இங்கு 'வெந்தழல்போல் கூந்தலாள்' என்றது பூதனையை நோக்கியேயாம்: 'முலையுண்ட' என்று அடுத்துவரும் சொல் தொடரினால் இப்பொருள் தெரிந்துகொள்ளக்கூடுமேயல்லது இயற்கையாக இச் சொல் பூதனையை யுணர்த்த மாட்டாது.

திருவல்லிக்கேணிப் பதிகத்திலுள்ள *அந்தகன் சிறுவன் என்கிற ஆறும்பாட்டில் முதலடியிலும் மூன்றா மடியிலும் த்ரௌபதியைப்பற்றிக் கூறுகின்றாராழ்வார். முதலடியில் 'அணியிழை' என்கிற சொல்லேயுள்ளது. மூன்றா மடியில் 'சந்தமல் குழலாள்' என்ற சொல்லேயுள்ளது. இவை ஸ்த்ரீகளுக்குப் பொதுப்பெயர்களே யல்லது ஒரு வ்யக்தி விஷேத்திற்குச் சிறப்புப்பெயரன்று. ஆயினும் ஆழ்வார் இப்பொதுப்பெயர்களையிட்டே இங்கு த்ரௌபதியைக் குறிப்பிடுகிறார். கண்ணபிரான் ஸத்யபாமைப் பிராட்டிக்காகப் பாரிஜாதாபஹரணம் செய்தருளின வாற்றைத் திருமங்கையாழ்வாரருளிச்செய்யுமிடங்களில் பாரீர்; "மட்டவிழுங் குழலிக்கா வானோர் காவின் மரங்கொணர்ந்தான்" என்றும் "மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்" என்றுமருளிச் செய்கிறார். இவ்விடங்களில் 'மட்டவிழுங்குழலி' என்பதும் மாதர் என்பதும் பொதுப்பெயர்களேயன்றிச் சிறப்புப் பெயர்களல்ல. இராமபிரான் குஹப்பெருமாளோடு சீரணிந்த தோழமை கொண்டபோது பிராட்டியைக் காட்டி இவள் உன் தோழி யென்று கூறியதைக் கூறுகின்ற திருமங்கையாழ்வார் "மாழைமான் மடநோக்கி உன்தோழி" என்கிறார். இங்கு 'மாழைமான் மடநோக்கி' யென்றது பொதுப்பெயரேயன்றி ஸீதைக்குச் சிறப்புப்பெயரன்று. திருவாய்மொழியில் *ஆயர்கொழுந்தாய் அவரால் புடையுண்ணும் மாயப்பிரானை* என்ற பாசுரத்தில் கண்ணபிரான் விஷயத்தில் பிரயோகிக்கப்பட்ட 'ஆயர் கொழுந்து என்னும் சொல்லை அவ்வாழ்வார் தாமே * கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன்றன்னை * என்ற பாசுரத்தில் நப்பின்னைப் பிராட்டிக்கு வாசகமாகப் பிரயோகித்தருளினார். இங்ஙனமெடுத்துக் காட்டப்புகின் விரிவு பெரிதுடைத்தாம். இப்படிப்பட்ட பிரயோகம் அருளிச் செயல்களில் மட்டுமேயல்ல; கம்பராமாயணம், அஷ்டப்பிரபந்தம் முதலிய தமிழ் நூற்க ளெல்லாவற்றிலும் யதேஷ்டமாகக் கிடைக்கும். இந்த ஸரணியானது தமிழ் நூல்களுக்கே அஸாதாரண மென்னலாம். "அர்த்தாத் ப்ரகரணால்லிங்காத்—அர்த்த நிர்ணய:" என்று வட நூலார் காட்டிய வழியைக் கொண்டு பொருள் காண்கிறோம்.

இனி ப்ரக்ருத விஷயத்தைக் கொள்வோம். கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளுங்காலத்து ஏழெருதுகளை வலியடக்கி கும்பர் மகளான நப்பின்னையை மணம் புணர்ந்ததாக ஒரு சரித்திரமுண்டு. இதை ஆழ்வார்கள் அடிக்கடி பேசியநுபவிப்பர்கள். அந்த நப்பின்னையையே பின்னையென்றும் வழங்குவர். [பின்னை மணாளனை, பின்னைதோள் மணந்த பேராயா!] அவளுக்கு வடமொழித் திருநாமம் நீளா என்பதாம். அது கூரத்தாழ்வானாலும் பட்டராலும் வெளியிடப்பட்டுள்ளது. ஸுந்தர பாஹுஸ்தவத்தில் "நீளா குலேந ஸத்ருசீ" என்றது கூரத்தாழ்வான் திருவாக்கு: "நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்" இத்யாதியான திருப்பாவைத் தனி

யன் பட்டர் திருவாக்கு. அப்பயதீக்ஷிதரால் குவலயாநந்தத்தில் உதாஹரிக்கப்பட்டுள்ள "பத்மே த்வந்நயநே ஸ்மராமி" என்றவொரு ச்லோகத்திலும் நீளா என்கிற இத்திருநாமம் காட்டப்பட்டுள்ளது. ஆகவே எருதேழடர்த்து மணந்துகொள்ளப் பட்ட மனைவிக்கு நப்பின்னையென்பது தென்மொழித் திருநாமமென்றும் நீளா என்பது வடமொழித் திருநாமமென்றும் தேறி நின்றது. ஆழ்வார்கள் எருதேழடர்த்த கதையைக் கூறுமிடங்களில் பெரும்பாலும் நப்பின்னையை வெளிப்படையாகக் கூருது பொதுப் பெயர்களாலேயே கூறியுள்ளார்கள். 'காம்பணைதோள்பின்னைக்க ஏறுடனேழ் செற்றதுவும்" "பின்னைபொருட்டு ஆன்வென்ருனூர்" என்றிங்ஙனே யுள்ள பாசுரங்கள் மிகச்சிலவே. "மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா, மன்னுசினத்த மழவிடைகள் ஏழன்றடர்த்த மாலதிடம்" "கொடியேரிடையாள் பொருட்டாக, வன்தாள் விடை யேழன்றடர்த்த" "பந்தணைந்த மெல்விரலாள் பாவை தன் காரணத்தால் வெந்திறலேறேழும் வென்ற வேந்தன்' என்றிங்ஙனேயுள்ள பாசுரங்கள் மிகப்பல. மேலேயெடுத்துக் காட்டியுள்ள பாசுரங்களில் நப்பின்னையென்கிற சிறப்புப்பெயர் இல்லை, பொதுப்பெயரேயுள்ளது. இருந்தாலும் எருதேழடர்த்தவாற்றைச் சொல்லயிருக்கையாகிற ஸமபிவ்யாஹார பலத்தினுல் நப்பின்னையென்கிற சிறப்புப் பொருள் கிடைத்தே தீருகின்றது திருமங்கையாழ்வார் திருவெழு கூற்றிருக்கையில் "அறுபதமுரலுங் கூந்தல் காரணம், ஏழ்விடையடங்கச் செற்றனை" என்றருளியுள்ளார். இங்கு 'ஏழ்விடையடங்கச்செற்றனை என்பதற்கு—ஏழெருதுகளைக் கொன்றுயென்று பொருள். அதற்கு முன்னேயுள்ள அறுபதமுரலுங் கூந்தல் காரணம்' என்பதற்கு என்ன பொருளென்று விமர்சிக்க வேணும். அறுபதமென்று வண்டுக்குப் பெயர். வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்ற கூந்தல் என்றதாயிற்று. இச்சொல்தொடர் அன்மொழித்தொகை [பஹுவ்ரீஹி ஸமாஸம்] பெற்றது. ஆதலால் வண்டுகள் முரலப்பெற்ற கூந்தலையுடையவள் என்று பொருள்பட்டு நிற்கும். எனவே, இது மாதர்க்குப் பொதுப் பெயராக நின்றது. பிரகரணம் நோக்கி 'நப்பின்னைப் பிராட்டிக்காக' என்று பொருள் கொள்ளக்குறையில்லை. இதை வடசொல்லால் மொழிபெயர்க்கவேண்டுமானுல் வசநவ்யக்தி எப்படியிருக்க வேணுமென்பதை வித்வான்கள் அறிவார்கள். நீலா நிமித்தம் என்றே, ஷட்பதஜங்க்ருத சிகுரசாலிநீ நிமித்தம் என்றே மொழிபெயர்க்கவேணுமேயல்லது வேறு விதமாக மொழிபெயர்க்கலாகாதென்பது கல்வெட்டு. இப்படி திருமங்கையாழ்வாருடைய திருவாக்கில் 'அறுபதமுரலுங் கூந்தல் காரணம்' என்று அவதரிப்பது போல நம்மாழ்வாருடைய திருவாக்கிலும் "வம்பவிழ் கோதை பொருட்டா மால் விடையேழுமடர்த்த" என்கிற பாசுரம் அவதரித்துள்ளது. சொல்வடிவத்தில் வாசியுள்ளதேயன்றி கருத்தில் சிறிதும் வாசியில்லை. நப்பின்னைக்காக எருதேழடர்த்த வாற்றையே இவ்வாழ்வாருமருளிச் செய்கிருர். நப்பின்னையை 'அறுபதமுரலும் கூந்தல்' என்ற சொல்தொடரால் திருமங்கையாழ்வார் குறித்தனர். அப்பிராட்டியையே நம்மாழ்வார் 'வம்பவிழ் கோதை' என்ற சொல் தொடரால் குறிக்கின்றனர். அங்கு எப்படி அன்மொழித் தொகையோ இங்கும் அப்படியே அன்மொழித் தொகை [பஹுவ்ரீஹி ஸமாஸமே] இதை ஒருபோதும் மறக்கலாகாது. நறுமணம் புறப்படுகின்ற பூமாலையையுடையவள் என்பது சப்தார்த்தம். கோதையென்கிற தமிழ்ச் சொல்லுக்குப் பூமாலையென்பதும், கூந்தலென்பதும் பொருள். பூமாலை

யென்கிற பொருளிலேயே பெரும்பான்மையான பிரயோகம் காண்கிறது. "வம்ப விழ் கோதைபொருட்டா" என்பதற்கு பரிமள ப்ரசுரமான பூமாலையை யணிந் துள்ளவளுக்காக மால்விடையேழுமடர்த்தவனென்றதாயிற்று. அவள் யாவளென் னில் நப்பின்னைப் பிராட்டியென்பது அர்த்தாத் ஸித்தம். திருவாய்ப்பாடியில் விடை யேழடர்த்தது நப்பின்னைக்காகவேயன்றோ. இனி *வம்பவிழ்கோதை பொருட்டா' என்கிறவிதனை வடமொழியில் மொழிபெயர்க்க வேணுமானல் எங்ஙனேயாகவேணு மென்பதை விவேகிகள் விமர்சிப்பது. கருத்துவகையில் நீளார்த்தம் என்றும், சொல் வடிவத்தின்மேல் 'ஸுரபிமால்யாலங்க்ருதலலநார்த்தம்' என்றும் மொழி பெயர்க்க லாமேயல்லது வேறுவிதமாக மொழிபெயர்க்கத் தகுதியில்லை.

தேசிகர் கோதார்த்தமென்று மொழிபெயர்த்திருப்பதாக த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளியில் பாடம் காண்கிறது. மூலத்தில் 'கோதை பொருட்டா' என்றிருப்பதால் அதற்கு நேராக இங்ஙனே மொழிபெயர்த்ததில் என்ன பிசகு? என்று சிலர் கேட்கக்கூடும். அவர்கள் என்ன ஆலோசிக்கவேண்டுமென்றால், மூலத் தில் 'நங்கை பொருட்டா' 'மங்கை பொருட்டா' என்றிருந்தால் அதை நங்கார்த் தம் மங்கார்த்தம் என்று மொழிபெயர்த்து விடலாமாவென்று ஆலோசிக்க வேண் டும். இங்கு மூலத்திலுள்ள கோதை யென்கிற தமிழ்ச் சொல்லுக்கு என்ன அர்த்தம்? கோதா என்கிற வட சொல்லுக்கு என்ன அர்த்தம்? என்று நன்கு விமர் சித்தால் கோதை பொருட்டாவென்கிற மூலத்திற்கும் கோதார்த்த மென்பதற்கும் ஸமந்வயலேசமுமில்லையென்று எளிதிலுணர்வர்.

மஹா ஜ்ஞாதாவான தேசிகர் *கோதை பொருட்டாவென்கிற இவ்விடத் திற்கு கோதார்த்த என்று ச்லோகமிட்டதுபற்றி ஆராயவேணும். இந்த த்ரமி டோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளிக்கு அடியேன் தமிழுரை யெழுதிப் பலவாண்டு கட்குமுன்பே அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன்; எடுத்துப்பார்க்க. தேசிகருடைய ஞானத்திற்குக் குறைகூற வொண்ணாது; இங்குப் பாடப்பிறழ்வு நேர்ந்திருப்பதா கக் கொள்வது தவிர வேறு புகலில்லை. திருநாட்டிலிருந்து சில வித்வான்கள் திரும்பி வந்தாலும் கோதார்த்தமென்பதை ஸமர்த்திக்க ஒருபடியாலும் முடியாதென்பது திண்ணம். *சேவடி மேலணி செம்பொற்றுழாயென்றே கூவுமால் கோள்வினை யாட்டியேன் கோதையே* என்றும், *கோலந்திகழ் கோதையென் கூந்தலுக்கே* என்றுமுள்ள திருவாய்மொழிப் பாசுரங்களைக்கொண்டு, தமிழறிவற்ற சிலர், நம் மாழ்வார்க்கும் கோதை யென்கிற திருநாமமுண்டுகாணும் என்று சொல்லுவதுண்டு; அதுபோல நப்பின்னைக்கும் கோதையென்றும், கோதா என்றும் திருநாமமுண் டென்று சில பாமரர்களின் செவியிலே ஏகாந்தமாகப் பேசிக்கொண்டு போது போக்கலாமத்தனையன்றி வேறொன்றும் செய்யலாகாது. யாதவாப்யுதயத்தில் நீலா என்றே ஸ்வாமி ஸாதித்தது. (*)

ஆரியர்காள்! பூர்வபக்ஷ விஷயங்களை நெஞ்சில் தெளிவாகத் தேக்கிக்கொண் டீர்களா? "நப்பின்னைக்கும் கோதா என்று திருநாமமுண்டென்று சில பாமரர் களின் செவியிலே ஏகாந்தமாகப் பேசிக்கொண்டு போதுபோக்கலாமத்தனை யன்றி வேறொன்றும் செய்யலாகாது'! என்று நாமெழுதியிருந்ததைச் சிக்கனப் பிடித்துக்

கொண்டார் ப்ரக்ருத ப்ரதிவக்தா. ஏகாந்தமாக வென்ன? லோகாந்தமாகவே வெளியிடுகிறேனென்று முன்வந்துவிட்டார். * நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்* என்றபடி கரந்துறையுமவற்றுக்கும் விதிமாளும் நாள் ஒன்றுண்டே; அதேபோல இக்கட்டுரையும் நான்குமாதம் கரந்துறைந்து இன்று மாய்ந்தொழி யப்பெறுகின்றது.

## — நப்பின்னையின் வரலாறு —

திருப்பாவையில் 18, 19, 20-ஆம் பாட்டுக்களில் மட்டுமே நப்பின்னை யென் கிற திருநாமமுள்ளது. மற்றவிடங்களிலெல்லாம் பின்னையென்றே யுள் ளது. இவளைப் பற்றித் திவ்யப் பிரபந்தங்களில் நூற்றுக்கணக்கான விடங்களில் பாசுரமுள்ளது. எம்பெருமானுடைய திவ்யமஹிஷிகளான ஸ்ரீ பூ நீலா தேவி களில் நீலையின் அம்சமாகத் தோன்றியவள் இவள் என்பதை நம் ஆசாரியர்கள் ஆழ்வார்களின் பாசுரங்களை மட்டுங் கொண்டே அறுதியிட்டார்கள். *திருமகளும் மண்மகளும் ஆய்மகளும்* என்கிற பொய்கையார் பாசுரம், *குழற்கோவலர் மடப் பாவையும் மண்மகளும் திருவும்* திருமகள் மண்மகளாயர் மடமகளென்றிவர் மூவர்* இத்யாதியான நம்மாழ்வார் பாசுரங்கள், *ஒரு மகளாயர் மடந்தை ஒருத்தி நிலமகள் மற்றைத் திருமகளோடும் வருவான்* இத்யாதியான திருமங்கையாழ்வார் பாசுரங்கள்.......... இவற்றில் நீளையைச் சொல்லவேண்டுமிடங்களில் நியமேந ஆய் மகளென்று பின்னையையே சொல்லியிருப்பதனால் இப்பாசுரங்களையே ஆதாரமாகக் கொண்டு நம் ஆசாரியர்கள் நப்பின்னைக்கு நீளையென்று பெயரிட்டார்கள். ஸுந்தர பாஹுஸ்தவத்தில்* நீளா குலேநஸத்ருசீ* என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியும் *நீளாதுங்க ஸ்தநகிரிதடீஸுப்தம்* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியுமே முந்துற முன்னம் அவதரித்தவை யென்று ஏற்கெனவே காட்டியுள்ளோம்.

திவ்வியப் பிரபந்தங்களைப் பற்றியும் தத்வ்யாக்க்யானங்களைப் பற்றியும் விபரீதமாக எழுதிக்கொண்டிருந்து, நம்முடைய செந்தமிழாராய்ச்சி முதலிய நூல் களினால் தெளிவுபெற்று ஓய்ந்தவரான (காலஞ்சென்ற) மு. இராகவையங்காரவர் கள் ஒரு ஸமயம் எழுதினார்—"நப்பின்னையைப் பற்றி ஆழ்வார்கள் பேசியிருப்பது பண்டைத் தமிழ்நூல்களை யடி யொற்றியேயொழிய ஸம்ஸ்க்ருத நூல்களில் [இதி ஹாஸபுராணங்களில்] இதற்கு ஆதாரம் கிடையாது" என்று. அப்போதுதான் இதைப்பற்றி நாம் ஆர அமர ஆராய்ச்சி செய்ய நேர்ந்தது. யாதவாப்யுதயத்தில் நான்காம் ஸர்க்கத்தில் *திசாகஜாநாமிவ சாக்வராணாம்* என்ற ச்லோகத்தை யும், அதன் வியாக்கியானத்தில் அப்பய தீக்ஷிதர் ஹரிவம்சத்திலுள்ளதாக எழுதி யிருக்கும் வரலாற்றையும் முதன் முதலாக உலகுக்கு எடுத்துக்காட்டினது நாமே நாமே நாமே. நமது ஐந்தாறு நூல்களில் ப்ரஸக்திவசாத் இதை விரித்தெழுதி யுள்ளோம்.

ந்ருஸிம்ஹப்ரியாவில் விடை கூறவந்தவர் "இவ்வாறு சரிதம் காண்கிறது" என்றெழுதியுள்ளது ஹம்பக்கு; நிராதாரம். "....என்பதாக ஹரிவம்சத்திலேயுள் ளது" என்கிறார். தீக்ஷிதர் எழுதினதை நாமெழுதினோம்; நாமெழுதினதை இவ ரெழுதிவிட்டார். ஹரிவம்சம் அச்சிடப்படாமலில்லை. எந்த பர்வத்தில் எத்தனை

யாவது அத்யாயத்தில் இவ்வரலாறு உள்ளதென்பது எடுத்துக்காட்டி விவரித்தாலன்றோ இவருடைய பரிச்ரமம் விளங்கும். ப்ரக்ருதத்தில் இந்த வரலாறு பற்றிய விசாரம் அப்ரஸக்தமுமாகும். கண்ணபிரான் நப்பின்னையை மணம் புணர எருதேழ டர்த்த கதையிலும், அந்த நப்பின்னைக்கு வடமொழித் திருநாமம் நீளா என்பது தான் வேதாந்தவாசிரியரும் நிஸ்ஸந்தேஹமாகப் பணித்த தென்பதிலும் விவாத லேசமும் விளையவில்லை. த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நவளியில் *வம்பவிழ் கோதை பொருட்டா* என்பதற்கு *கோதார்த்தோக்ஷாவமர்த* என்றிட்டது தவறு என்றதை மறுக்கவேண்டியவர் ப்ரதிவக்தா. மலையேறி எலி பிடித்த கதையாய் "வைகாநஸத்திலே க்ரியாதிகாரத்திலே முப்பத்து நான்காமத்யாயத்திலே கோதா ப்ரதிஷ்டாவிதி" யிருப்பதாகக் கூறுகிறார். *கோதேதி நாம்நா விக்யாதா .... புரா ப்ருந்தாவனே ஹரிம் ப்ராப்தவதீ ஸ்வயம் * என்று சுலோகமிருப்பதாகக் காட்டுகிறார். இந்த அபத்த பஞ்சாங்கத்தைச் சென்னிமேற் சூடத் தடையில்லை. "நீளையைப்பற்றி" என்று தாமாக வொரு மகுடமிடுகிறார். காட்டும் சுலோகத்தில் நீளையைச் சேர்த்துக் காட்டியிருந்தாலாவது சில நாள் உய்யலாமிவர். ஆண்டாள் *விருந்தாவனத்தே கண்டோமே * என்று ஒன்பதின்காற் சொன்னமையால் அதையடியொற்றி சுலோகமியற்றிய வைகாநஸர் "புரா ப்ருந்தாவனே புண்யே ஹரிம் ப்ராப்தவதீ "என்று கவிகட்டினார். "கட்டின கவியன்று, வேதம் போலுண்மையானதே", என்றே கொள்வோம். "பக்ஷிதேபி லசுநே ந சாந்தோ வ்யாதி:"

கண்ணனையநுகரித்த பௌண்ட்ரக வாஸுதேவனைப் போலே நம்மையநுகரிக்க விரும்புமிவர் "உற்று நோக்கத்தக்கது" இத்யாதிகளையெழுதி விட்டாலும் நோக்கத்தக்கது ஆகாசந்தவிர வேறொன்றுமில்லையே. இந்த வேதாந்தத்தில் காட்டின மருள் போதாமல் வடமொழி வேதாந்தத்திலும் அது புஷ்கலமென்று காட்ட "தேவதாதிகரணத்தில் "என்று தொடங்குவது வியக்கத்தக்க ஸாஹஸம்'

முடிவாக வொன்றே சொல்லித் தலைக்கட்டுகிறோம். *வம்பவிழ் கோதை பொருட்டா* என்பதற்கு இருபத்து நாலாயிரப்படி ஈடு முதலான வியாக்கியானங்கள் கிடக்கட்டும்; இவர்கள் புதுத் தெய்வங் கொண்டாடப் புகுந்த காலத்திலே இட்டுக் கொண்ட வியாக்கியானங்கள்- ஸக்ஷாத்ஸ்வாமியென்பவர் பணித்த இருபத்து நாலாயிரப்படி சப்தார்த்தம், ரங்கராமாநுஜஸ்வாமியிட்ட வடமொழிப் பதவுரையான ஒன்பதினாயிரப்படி, பெரிய பரகாலஸ்வாமி பணித்த பதினெண்ணாயிரப்படி - ஆகிய இவற்றில் "வம்பவிழ் கோதை பொருட்டா=பரிமளம் ப்ரஸரிக்கிற மாலையையுடையவள் பொருட்டாக—நீளைபொருட்டாக வென்றபடி." என்றும், "பரிமள ப்ரஸாரிமால்யயுக்தாயா நீலாயா அர்த்தே" என்றும் "வம்பென்று பரிமளம்; கோதை—மாலை; அது மயிர்முடியை உபலக்ஷிக்கிறது. அவிழ்கை—ப்ரவஹிக்கை ஆக பரிமளம் ப்ரவஹியா நின்றுள்ள மாலையை யுடையவ ளென்றபடி" என்றும் எழுதியுள்ளவற்றை அஸம்பத்தமென்று முடித்ததுதான் இவரும் இவரை யெழுதவிட்டவர்களும் கை கண்ட பயன். "அப்ராப்யமென்று கண்ண நீரோடே மீளுவது" என்று ஸ்ரீ வசனபூஷணத்தில் ஸாதித்ததே தஞ்சமென்று கொண்டு நிற்பதே தகுதி. .... ....

## மறைகளின் மறைவும் துறைகளின் தவறும்

ந்ருஸிம்ஹப்ரியா கீலக பங்குனி ஸஞ்சிகையில் ''மறைகளின் மறைவு'' என மகுடமிட்டுக் காடுபாய்ந்தெழுதினவரும் அவரே. "ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதி." என்றதை விசேஷித்து நினைப்பூட்டுங் கட்டுரை இது. இரண்டு பகுதியாகவுள்ள விதில் முதற்பகுதியைத் தள்ளி "தமிழ் மறையின் மறைவு" என்கிற இரண்டாவது பகுதியை ஆராய்வோமிங்கு. இதற்கு மூலமான நம்முடைய கட்டுரையைப் பல மாதங்களுக்கு முன்பு வாசித்தவர்களுக்கு இப்போது நினைவூட்ட வேண்டுவது அவசியமாதலால், விடையின் பொருத்தம் எத்தகைத் தென்று விவேகிகள் உணர்வதற்காக நமது பூர்வபக்ஷக் கட்டுரையை முன்னம் உபஹரிக்கிறோ மிங்கு.

ந்ருஸிம்ஹ ப்ரியாவின் தேசிக ஜயந்தி மலரில் (பக்கம் 58-ல்) ''எப்படி ஆசார்யரானார்?'' என்ற மகுடத்தின் கீழ் குருபரம்பராஸார ஸ்ரீ ஸூக்தியொன்றை யெடுத்துக் காட்டி, அதற்கு ''ரஹஸ்யத்ரஸாரம்—குருபரம்பராஸாரம்'' என்று ஆகரம் காட்டியுள்ளது. இங்கு இருவகையான மருள்கள். ஒரு மருளைப் பலகால் நாமெடுத்துக்காட்டியிருந்தும் தெளிவு பிறக்கவில்லையந்தோ! ஸ்வாமி ஸாதித்த ரஹஸ்யத்ரயஸாரத்தோடு குருபரம்பராஸாரத்திற்கு எவ்விதமான தொடர்பும் கிடையாது. இரண்டும் தனித்தனி ரஹஸ்ய நூல்கள். குருபரம்பராஸாரம் ரஹஸ்யத்ரய ஸாரத்தின் முதலதிகார மென்கிற மருள் அவிவேகிகளான பலர்க்குமுண்டு. விவேகிகளுக்குமுண்டு என்ன வேண்டியதாயிற்று. இதற்குக் காரணம் பரம்பரையாக இந்த க்ரந்தங்களில் அந்வயமில்லாமையேயாம். ''ரஹஸ்யத்ரயஸாரே ஸம்ப்ரதாய பரிசுத்திः'' ''ரஹஸ்யத்ரயஸாரே ஸாரஸாரः'' ''ரஹஸ்ய த்ரயஸாரே முநிவாஹநபோகः'' என்றால் எவ்வளவு பரிஹாஸ்யதையுண்டோ, அவ்வளவுண்டு 'ரஹஸ்யத்ரயஸாரே குருபரம்பராஸாரः' என்றாலும். இந்த மருள் அவிவேகத்தினாலாகில் மாய்ந்து போக விரகுண்டு; கேவலம் துராக்ரஹத்தினாலென்பது தெரிய வருவதால் மாயாது. இனி விதண்டா வாதமும் விளையக்கூடும். ''மூர்க்கச்ச மகரச்சைவ க்ருஹீதக்ராஹிணாவுபௌ'' என்பர்.

இங்கு இருவகையான மருளென்றோம்; ஒருவகை மருள் காட்டியாயிற்று. மற்றொரு வகையான மருள் கேளீர். எப்படி ஆசார்யரானார்? என்பது கேள்வி; அதற்கு விவரணம் - 'நம்மாழ்வாருக்கும் நாதமுனிகளுக்கும் நடுவில் ஆயிரக்கணக்கான வருஷங்கள் கடந்திருக்க, ஆழ்வார் நாதமுனிக்கு எப்படி ஆசார்யரானார்?' என்று உடனே "இக்கேள்விக்கு ஸ்ரீதேசிகன் அருளிய ஸமாதானம்" என்று மகுடமிட்டு குருபரம்பராஸார ஸ்ரீ ஸூக்தி உதாஹரிக்கப்பட்டுள்ளது. அதாவது, "நாதமுனிகளுக்கு ஸ்ரீமதுரகவிகள் முதலாக உண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானார்'' என்று. இத்தகைய வாக்யஸந்நிவேசம் ஸ்வாமியினுடையதாக இருக்க ஔசித்யமே கிடையாது. உம்மையின் உபக்ரமமும் உபஸம்ஹாரமும் பொருத்த மற்றது. ''பரம்பரையாலும்.. முகத்தாலும்'' என்ற உம்மைகளோடு சேரவேண்டில் ''யோக தசையிலே ஸாக்ஷாத் காரத்தாலும்'' என்றிருக்கம் வடுக்குமேயல்லது, ப்ரக்ரமபங்கத்திற்கும் அநந்வயத்திற்கும் ஆஸ்பதமாக இப்படிப்பட்ட வாக்யஸந்நிவேசம் ஸ்வாமி திருக்கையால் ஒருகாலும் அவதரியாது. மேலும்

''மதுரகவிகள் முதலாகவுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும்'' என்றதும், ''திருவாய்மொழி முகத்தாலும்'' என்றதும் அர்த்தமற்ற வார்த்தைகளேயாம். ''யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராய் நம்மாழ்வார் நாதமுனிகளுக்கு ஆசார்யரானார்'' என்னுமிவ்வளவே பர்யாப்தம்.

சங்கையென்ன? ஸமாதானமென்ன? என்று பார்க்கவேணும். ஆழ்வார்க்கும் நாதமுனிகளுக்குமிடையில் அத்யந்த காலவ்யவதான மிருக்கையாலே இவ்விருவர்க்கும் ஆசார்ய சிஷ்யபாவம் எங்ஙனே கூடிற்று? என்பது சங்கை. இதற்குப் பரிஹாரம் செய்ய வேண்டிய முறை—*வ்யோம்ந: பரஸ்தாத் ஸவிதம் ஸமேத்ய லக்ஷ்ம்யா நியோகாத் குருகாதிராஜ:, ஸமந்த்ரராஜத்வயமாஹ யஸ்மை நாதாய தஸ்மை முநயே நமோஸ்து* என்று ப்ரஸித்தமான நாதமுனிகள் தனியனால் ஸுப்ரஸித்தமான இதிஹாஸ விசேஷத்தைக் காட்டுவதேயாம். பூர்வாசார்ய க்ரந்தப்ரஸித்தமானது அந்த இதிஹாஸம். அதைப் பலகால் நாம் விவரித்திருக்கிறோம்.

ஸ்வாமி ஸாதித்த ஸம்ப்ரதாய பரிசுத்தியில் ''ப்ராதுர்ப்பாவ விசேஷத்தால் நாதமுனிகளுக்கு நம்மாழ்வார் ஆசார்யரானார்'' என்றுள்ள ஒரு வாக்கியத்தை யெடுத்துக் காட்டியிருந்தாலே போதும் சங்காபரிஹாரத்திற்கு. ''மதுரகவிகள் முதலாகவுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும்'' என்ற ஹேதூக்திகளிரண்டும் இன்னமும் சங்காஜனகமேயொழிய சங்காபரிஹாரகமாக வழியில்லை. இதற்குச் சிலர் செய்துள்ள விவரணங்களும் ''ஸ்திதஸ்ய கதிச் சிந்தநீயா'' என்கிற கட்டளையிலும் சேராது. ''யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும்'' என்ற வாக்யத்தை ''ஸாக்ஷாத்க்ருதராய் உபதேசிக்கையாலும்'' என்று சேஷபூரணம் பண்ணி நிர்வஹிப்பதிற்காட்டிலும் மூலத்திலுள்ள விபர்யயத்தைத் திருத்தி ப்ரவர்த்திப்பித்தல் பாங்கு. ஸ்வாமி தாமே ஸ்தோத்ரபாஷ்யத்திலும்—''காலவிப்ரகர்ஷேபி பரமபுருஷ ஸங்கல்பாத் கதாசித் ப்ராதுர்ப்பூய ஸாக்ஷாதபி ஸர்வோபநிஷத் ஸாரோபதேஷ்டாரம்'' என்றருளிச் செய்துள்ளார். இதில் அபி சப்தம் வர்ஜநீயம்; மதுரகவி ப்ரஸ்தாவமும் அப்படியே.

''மதுரகவிகள் முதலாகவுண்டான ஸம்ப்ரதாய பரம்பரை'' என்னும் படியாக ஒரு பரம்பரை கிடையவே கிடையாது. மதுரகவிகள் திருவம்சத்திலே பிறந்த வொருவர் ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்து வந்தவர் நாதமுனிகளுக்குக் கண்ணிநுண் சிறுத்தாம்பு பிரபந்தத்தைப் பாடம் செய்வித்தாரென்பது கொண்டு மதுரகவிகளிடமிருந்து ஒரு ஸம்ப்ரதாய பரம்பரை வந்ததாகக் கல்பிக்க வொண்ணுமோ? ''திருவாய்மொழி முகத்தாலும்'' என்பதற்கு என்ன அர்த்தமென்று கேட்டால் வாய் திறக்க வழியுண்டோ? நாதமுனிகள் நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்த பின்புதானே அவர்க்குத் திருவாய்மொழியுபதேசம் ப்ராப்தமாயிற்று. ஆகவே ''கால விப்ரகர்ஷேபி பரமருபுருஷ ஸங்கல்பாத் கதாசித் ப்ராதுர்ப்பூய ஸர்வோபநிஷத் ஸாரோபதேஷ்டாரம்'' என்ற ஸ்தோத்ர பாஷ்ய ஸ்ரீஸூக்திக்கிணங்கினதான ''யோகதசையிலே ஸாக்ஷாத் க்ருதராய் ஆசார்யரானார்'' என்கிற வாக்கியமொன்றுதான் ஸங்கதம். காலவிப்ரகர்ஷப்ரயுக்தசங்கை மதுரகவிகளிடத்தும் துல்யம். அதற்கென்ன பரிஹாரம்?

ஸ்வாமி யெழுதின ரஹஸ்ய நூல்கள் அவருடைய காலத்திலோ, அவருடைய வாழ்நாளுக்குப்பிற்பட்டு ஐந்நூறு வருஷ காலத்திலோ ப்ரசாரம் பெறவில்லை. பிள்ளைலோகாசார்யருடைய ரஹஸ்ய க்ரந்தங்களின் முன்னே மற்ற பலருடைய ரஹஸ்ய நூல்கள் பகல்விளக்கும் மின்மினியுமாயொழிந்தன. வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர், ஆச்சான் பிள்ளை, சிறிய யாமுனார்யர் முதலான ஏழெட்டு ஆசாரியர்களும் சிறியனவும் பெரியனவுமான ரஹஸ்ய நூல்களை யெழுதி வைத்திருந்தும் அவை எப்படி பிரசார மற்றிருந்தனவோ அப்படியேதான் ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலான ரஹஸ்யங்களும் ஏட்டளவிலே நின்றிருந்தன, "புதுத் தெய்வங் கொண்டாடுந் தொண்டர்" என்ற கலியன் ஸ்ரீஸூக்திக்கு இலக்கானவர்கள் தோன்றின பின்பு *மூலையிலே கிடந்தவற்றை முற்றத்திலே யிழுக்கிற கதையாக நேர்ந்தபோது அவை பலவகையான விகாரங்களுடன் வெளிப்பட்டன. இதில் விவேக குசலர்கள் ஸந்தேஹ லவலேசமுங் கொள்ளார்கள்.

இது தான் நமது பூர்வபக்ஷக் கட்டுரை. இதற்கு ப்ரக்ருத ப்ரதிவக்தா எவ்விதமாக விடையிறுக்கிருரென்பதை இனியாராய்வோம்.

ஸ்ரீமந் நாதமுனிகளின் காலத்தில் நாலாயிரமும் லோபமடைந்திருந்ததாகத்தான் ப்ரஸித்தி. திருவாய்மொழியாயிரம் மட்டுமே லோபமடைந்திருந்ததாக இவர் எழுதுவது நிராலம்பம். * நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே * என்பது நம்மாழ்வார்க்கு வழங்கிவரும் வாழிதிருநாமம். ஆழ்வார்க்குப் பிறகு நாதமுனிகள் வரையில் ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸௌபிக்ஷம் குறையுற்றிருந்தபடியினுலேயே திவ்யப்ரபந்தங்களுக்கு அத்யயன பரம்பரை லோபித்திருந்தது. திருவாய்மொழி மட்டும் லோபித்திருந்ததாக வொருபுதிய கற்பனையிட்டு அதற்கு இவர் எழுதியுள்ள காரணுபாஸம் அநுவதிக்கவும் தகாதது. வடமொழி வேதத்திலும் * ஸுவர்க்கமேவ லோகமேதி * என்றும், * ஸுவர்க்கமேவைநம் லோகம் கமயதி* என்றும் வாய்க்கொரு தடவை வந்திருக்கச் செய்தேயும் 'கொல்லும் வேதம்' என்கிற அபக்க்யாதி ஏற்படவில்லை: அதன் அத்யயன பரம்பரையும் ஓயவில்லை; * விண்ணவர்கோனடி நண்ணுவரே * வைகுந்தஞ் சேர்வரே * ஒளிவிசும்பாள்வர்தாமே* என்ருற்போன்ற பலச்ருதி திருவாய்மொழியிற்போல மற்ற திவ்யப்ரபந்தங்களிலும் தாராளமாக இடம்பெற்றிருக்க, திருவாய்மொழிமட்டும் அபக்க்யாதிக்கு இலக்' காகி யொழிந்தது என்பதும், ஏடுகளையுங் கூடத் தாமிரபர்ணியில் எறிந்துவிட்டார்களென்பதும் அம்மையார் கதையே "மாறன்மறை மாரகமறையாயிற்று' என்கிற அச்லீல வாக்கியத்தை இவரொழிய வேறெருவருமெழுத முன்வந்ததில்லை.

ஆழ்வார்க்கும் நாதமுனிகளுக்குமிடையில் காலவ்யவதானம் மிகவுமிருக்க ஆசார்ய சிஷ்யக்ரமம் எங்ஙனே கூடிற்று? என்கிற சங்கைக்கு யோகதசையில் ஸாக்ஷாத்காரத்தாலே என்கிற வொன்றுதவிர வேறு காரணம் வாய்திறக்கவும் வழி கிடையாது. "அபத்த பஞ்சாங்கத்திற்கு அறுபது நாழிகையும் த்யாஜ்யம்" என்ற முதுமொழிக்கு இலக்கான சுவடிகளிலுள்ள பொற்றலையடைக்க இவரா அதிகாரி? இவரால் முடியுமா? ஒன்ரு இரண்டா? * மருள் தானீதோ மாயமயக்கு மயக்கே, *

ஒரு விநோதத்தை முன்னம் காட்டுகிறேன். " நாதமுனிகளுக்கு ஸ்ரீ மதுர கவிகள் முதலாகவுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத் தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யராஞர்" என் றெடுத்துக் காட்டப்பட்ட வாக்ய ஸந்நிவேசம் அபத்தம் அஸம்பத்தம் - என் றெழுதினேம். பரம்பரையாலும் முகத்தாலும் என்ற உம்மைகளோடு சேரவேண் டில் 'யோகதசையில் ஸாக்ஷாத்காரத்தாலும்' என்றிருக்கவேணுமே யொழிய, ப்ரக் ரமபங்கத்திற்கும் அநந்வயத்திற்கும் ஆஸ்பதமாக இப்படியொரு வித்வான் எழுதி யிருக்கமாட்டார் - என்றெழுதினேம். இதற்கு ஸமாதான மெழுதப் புகுந்த விவர், பகவத்கீதையின் இறுதியில் உள்ள *இதம் தே நாதபஸ்காய * என்னும் சுலோகத்தை யெடுத்துக்காட்டி இதில் மூன்று பாதங்களில் சதுர்த்தீப்ரயோகமிருக்க, நான்காவது பாதத்தில் மட்டும் வேறுபாடு காண்பது எப்படி ஒரு விசேஷார்த்த ஸூசனத்திற் காகவோ அப்படியே இங்கும் கொள்ளவேண்டிய தென்கிறுர். இது வடமொழி யின் நரம்பறியாத சில பாமரர்களை மயக்கக் கூடும். அந்த ச்லோகத்தில் நான்கு பாதங்களிலும் நான்கு நஞ் இருப்பதை உற்றுநோக்கினுல் நான்கும் தனித்தனி வாக்கியங்களென்பது ஸ்பஷ்டமாக விளங்கும். * நக்ரோதோ நச மாத்ஸர்யம் நலோபோ நாசுபா மதிஃ, பவந்தி க்ருத புண்யாநாம் பக்தாநாம் புருஷோத்தமே * என்கிற ப்ரஸித்த ச்லோகத்திற்போல இங்குத் திகைக்கவேண்டிய ப்ரஸக்தியில்லை. ஸூஸ்பஷ்டமாய்த் தனித்தனி வாக்கிங்களாக அமைந்த கீதா ச்லோகத்தை ஏக வாக்யமான விவாதவாக்யத்திற்கு நிதர்சனமாகக் காட்டுவது "அஸ்மாகூணும் தார்க்கிகேஷாம் இத்யேதத் இக்ஷ்வாகூணும் விச்வேஷாமிதிவத்" என்றதோ டொக்கு மத்தனே. "அதபஸ்கஃ இதம் ந ச்ருணுயாத் ; அபக்தம் ந ச்ராவயேத் ; அசுச் ருஷூணு இதம் நாவபோத்தவ்யம், பகவதப்யஸூயவே இதம் ந வாச்யம்' என்று ஒவ்வொரு வாக்கியத்திலும் விபக்தியை மாற்றிக் கொண்டே போனுலும் கேள்வி யில்லை கிடீர். * த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்யபடியே எத்திசையு முழன்ருேடினுலும் 'யோகதசையிலே ஸாக்ஷாத்காரத்தாலும்' என்று திருத்தினுலல்லது உய்ய விரகில்லை கிடீர். இது உறுதியானவார்த்தை.

ஸ்ரீ பாஷ்யத்தில் முதலத்யாயம் இரண்டாவது பாதத்தின் தொடக்கம் * ஸர்வத்ர ப்ரஸித்த்யதிகரணம். ஸூத்ரத்தைத் தொடுவதற்கு முன்னே முதல் பாதத்தின் ப்ரமேயங்களைச் சுருக்கியருளிச் செய்கின்ற ஸ்வாமி பத்து வாக்கியங்கள் அற்புதமாக வருளிச்செய்கிருர், அவற்றின் நிகமனம், உக்தம் .... ப்ரத்யபாதி .... அப்யதாம அப்ரூம உபாபீபதாம ஸமார்த்திதாமஹி உதைரிராம ஸமகரிஷ்மஹி ஆதிஷ்டாமஹி அப்ரூமஹி - என்றிங்ஙனேயுள்ளது. கர்மணியையும் கர்த்தரியை யும் பரஸ்மைபதியையும் ஆத்மநேபதியையும் லங்ஙையும் லுங்ஙையும் யதேஷ்ட மாகக் கலசினுரென்று குறைகூறுவாராருமில்லை. ஸர்வாத்மநா அநந்விதமான வாக்யத்திற்கு கீதையையும் கீதாபாஷ்யத்தையும் காட்டுவது பாமரப்ராமகமத் தனே. " * மாமான்மகளே * என்று திருப்பாவையில் ஸ்பஷ்டமாக ஸாதித்திருக் கையாலே மாதுலஸூதாபரிணயம் சாஸ்த்ரீயமென்னத் தட்டில்லை " என்கிற வாக் யார்த்தத்தோ டொக்குமிது.

நாதமுனிகளுக்கு மதுரகவிகள் முதலாக ஒரு ஸம்ப்ரதாய பரம்பரையும் கிடையாது. ஆழ்வார்க்கும் நாதமுனிகளுக்கும் எவ்வளவு காலவிப்ரகர்ஷமுண்டோ, அவ்வளவு விப்ரகர்ஷம் மதுரகவிகளுக்கும் நாதமுனிகளுக்கும் ஏற்றக் குறைவின்றி யுள்ளது நாதமுனிகளுக்கும் இன்றுள்ள நமக்கும் எவ்வளவு விப்ரகர்ஷமுள்ளதோ இதைவிட இரட்டிப்பான விப்ரகர்ஷமுள்ள தென்று தலைவிதியாக இசைந்து தீரவேண்டும். நாதமுனிகள் காலத்திலிருந்த வொரு மதுரகவி வம்சஸ்தர் முனிகளுக்கு ஓர் உபகாரம் செய்தவளவால் மதுரகவிகளிடமிருந்து ஸம்ப்ரதாய பரம்பரை வந்ததாக எப்படியாய் விடுமையா ? அப்படியொரு ஸம்ப்ரதாயபரம்பரை உண்மையில் இருந்திருக்குமானால் கால விப்ரகர்ஷப்ரயுக்த சங்கைக்கு உதயமேயில்லையே. எம்பெருமானார்க்கும் நமக்கும் இடையில் அத்யந்த காலவ்யவதானமிருக்க எப்படி அவர் நமக்கு ஆசார்யரானார்? என்று சங்கையுதித்ததுண்டோ? உதிக்குமோ?

''இந்த ஐதிஹ்யங்களை குருபரம்பராக்ரந்தங்களில் விஸ்தாரமாகக் காணலாம்'' என்பதாக இதுவொரு ப்ரதாரணம் ''கண்ணனுடைய அத்தையின் தலையில் கூந்தல் அதிகமாக இருந்ததென்பதை *அத்தைக்கும் வந்து குழல்வாராய் அக்காக்காய்* என்கிற பெரியாழ்வார் திருமொழியினால் நன்கறியலாம்'' என்பதோடொக்குமன்றோ இது.

—அவச்யமான அறிவிப்பு—

ஸ்வாமிந்!, உங்கள் குருபரம்பரை படுகிற பாட்டை நமது நற்பொருளெழுநூறில் ஆறுவது நூறில் 516 முதலிய பல பாராக்களிலும் மற்றும் பல நூல்களிலும் கண்டிருக்கிறீரே. ஸ்ரீராமாநுஜன் 236ம் மற்றும் எனது நூல்கள் பலவும் திருவாராதனத்தில் இருக்குமே, எடுத்துப்பாரீர். முக்கியமாக வொன்று விஜ்ஞாபயே. இப்போது தேவரீர் வாழ்வது கோயிலில். அவ்விடத்திலேயே ஸ்ரீமதுபயவே. ஸ்ரீஸூக்தி ரத்நாகர இளையவில்லி ஸ்வாமியும், திருமலை அனந்தாண்பிள்ளை. சதாபிஷேகா சார்ய ஸ்வாமியும், திருநாங்கூர் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியும் அத்யாத்ம சாஸ்த்ர ப்ரவசனங்கள் செய்து போருகின்றார்கள். அவர்கள் தேவரீர்க்குப் பரம ஸ்நிக்தர்களுமன்றோ? அவர்களில் ஒருவரிடத்திலோ மூவரிடத்திலுமோ தேவரீர் அபிமானிக்கிற குருபரம்பரைகளைக் காட்டி மதுரகவிகள் முதலாக வுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையினாலும் திருவாய்மொழி முகத்தாலுமென்கிற அஸங்கதோக்தியை இன்ன இன்ன ஐதிஹ்யங்கள் ஸமர்த்திக்கின்றனவென்று நன்கு மூதலித்து உய்வீராக.

"திருவாய்மொழி முகத்தாலும்" என்கிற வார்த்தையில் மிகவும் அசட்டுத் தனம் சொட்டுகிறது அதை ஸமர்த்திக்கப் புகுந்த உமது வார்த்தைகளில் அது வெள்ளமிடுகிறது. *ஆராவமுதே* யென்கிற திருவாய்மொழி நாதமுனிகளுக்கு யாத்ருச்சிகமாகச் செவிப்பட்டதத்தனே. உபதேசப்ரஸக்தியே கிடையாது எதையும் குருமுகமாகக் கேளாமல் அரை குறையாகக்கேட்டு அநந்விதமாகவும் பூர்வோத்தர விருத்தமாகவும் எழுதிவைத்ததையெல்லாம் ஸமர்த்திக்க ஆசைப்படுவது இன்னமும் பல பல அஸதஸ்யங்கள் ப்ரகாசமடைய ஹேதுவாமத்தனே. நீங்கள் குலாவும் பங்க்திகளின் ஸ்வாரஸ்யம் (அல்லது பரிஸ்திதி) எப்படிப்பட்டதென்றால்,

> "சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய் என்கிற படியே குகனோடுங் கங்கை தன்னில் சீரணிந்த தோழமை கொண்டதை அடையாளமாக்கும்படியாயிறே யிருப்பது. அதுதானும் உம்பியெம்பி யென்றொழிந்திலை யென்னும்படி உகந்த தோழனுக்கு உகப்புக்கு ஹேதுவா யிருக்குமாயிற்று. உற்றேனுகந்து பணிசெய்து என்கிற உகப்புக்கும் வெறிதேயருள் செய்வர் செய்வார்கட்குகந்து என்கிற உகப்புக்கும் வாசி யென்னென்னில், ஸாமாநாதிகரண்ய வையதிகரண்யங்களாலே வாசி யறியலாமென்பார்கள். வாசித்துங்கேட்கும் என்றதற்கும் வாசிவல்லீரிந்தளூரீர் என்றதற்கும் வாசியாகி நேசமின்றி என்றதற்கும் வாசியில்லையோ வென்னில், ஒன்று ஸ்வநிஷ்டமாய் மற்றவை பரநிஷ்டமாயிருக்கை யாலே அண்டத்தமரர் பணியநின்றார் என்றதோடு அண்டக்குலத்துக்கதி பதியாகி யென்றதோடு துடக்கற்றிருக்கிற கணக்கிலே நிர்வஹிக்கும்படி யாயிருக்குமென்று நடாதூராழ்வானிடம் கேட்டு ஆச்சான் பணிக்கும்படி".

என்றிப்படிப்பட்டதாயிருக்குமென்று திருக் கண்ணபுரம் ஞானப்பிரான்காட்டின கட்டளை.

நம்பிள்ளை பிள்ளைலோகாசார்ய ப்ரப்ருதிகளின் திவ்யக்ரந்தங்களில் அருமையான சில உபமான வாக்யங்களுண்டு. அவற்றைக் கண்ட இவராசிரியர் அவற்றைத் தாமும் கையாள ஆசை கொண்டு மருமமறியாமல் எழுதிவைத்திட்டு ப்ரவசன கர்த்தாக்களைத் திகைக்க வைப்பர். "காலன்கொண்டு மோதிரமிடு மோபாதி" என்பதொரு உபமான வாக்கியம். இது ஸ்ரீவசன பூஷணத்திலுள்ளது. இதன் கருத்தாவது—ம்ருத்யு பீடாபரிஹாரார்த்தமாக ஒருவன் மஹிஷதானம் பண்ணுகிறான். அதை ப்ரதிக்ரஹித்தவன் அதை ஒருவாறு பரிஹரித்து விடாதே அதை விற்று அந்தப் பொருளைக்கொண்டு மோதிரம் பண்ணுவித்து அணிந்து கொண்டாலும். குண்டலாதிகள் செய்வித்துப் பூண்டாலுகில் அது தன் கண்ணுக்குப் புலப்படுவது கதாசித்தாகும். இந்த அவிவேகி மோதிரம் பண்ணிப் பூண்டானகை யாலே இது அடிக்கடி கண்ணில்பட்டு ம்ருத்யுதானம் வாங்கினது இடையறாமல் நினைவுக்கு வந்து தனக்கே வெருவும்படியாயிருக்கும். இந்த த்ருஷ்டாந்தத்திற்கு இதுவே சுவைமிக்க கருத்து. கையாண்டவர்க்கு இதையறிய விரகில்லையாயிற்று.

சிஷ்யக்ருத்யாதிகாரத்தில் ''முறையொழியக் கேட்டுச் சொல்லுமாகில் காலன் கொண்டு ஆபரணம் பூண்டாற்போலே கண்டாரெல்லாரும் தன்னை அருவருக்கும் படியாம்'' என்கிறார். இதே ப்ரகரணத்தில் ''களவுகொண்டு ஆபரணம் பூண்டாற் போலே கண்டார்க்கெல்லாம் தான் அஞ்சவேண்டும் படியாம்'' என்றார். அது பொருத்த முடையதே. மோதிரமென்கிற விசேஷ நிர்தேசத்தின் சுவடறியாதே 'ஆபரணம் பூண்டாற் போலே' என்று பொதுப்படச் சொல்லி வைத்தது கிடக்க; அதனால் கண்டாரெல்லாரும் தன்னை அருவருக்க என்ன ப்ரஸக்தி? காலன் கொண்டு என்பதன் பொருள் இன்னதென்றறிந்திருந்தால் இப்படிப் பங்க்தியெழுதக் கை வந்திருக்குமோ? ஏனறிந்திலர்? அறிந்துதானெழுதியுள்ளாரென்னில்; பூண்ட ஆபரணம் காலன் கொண்டு பூண்டதென்று பிறரறிய ப்ரஸக்தியேது? அது என்ன ஆபரணம்? ஸௌவர்ணகடிஸூத்ரமா? கண்ட பூஷண கர்ணபூஷணாதிகளா? எது வானாலும் எல்லாரும் இவனையருவருக்க ப்ரஸக்திலேசமுமில்லையே. இப்படிப்பட்ட அசடு வழியும் திவ்யஸூக்திகளுக்கு வ்யாக்கியானப்புலிகள் தாம் என்ன பண்ணுவர் கள் பாவம்! அதுவொரு வெட்கக்கேடு.

பட்டரருளிச் செய்வர், ஜீயரருளிச் செய்வர் இத்யாதி ஸ்ரீஸூக்திகளை நோக்கித் தாமும் அங்ஙனே எழுதிவைக்க ஆசைப்பட்டு ''கல எள் கட்டுப் போய் கல எண்ணெயாயிற்று என்று எம்பாரருளிச் செய்தாரிறே'' என்று கம்பீரமாக வெழுதிவைக்கிறார். இது மஹாவிச்வாஸ தௌர்லப்யத்திற்கு நிதர்சனமாம். இதையெல்லாம் ப்ரவசனம் செய்வார் திசைதொறும் விழிக்கு மழகையும், கிளைக் கதைகளைப் புகுரவிட்டு அந்யபரதை காட்டு மழகையுங்காண ஆயிரங்கண் வேணுமே. ''நடாதூரம்மாளருளிச் செய்யும் சுருக்கு'' என்று ஒன்று அற்புதமாகத் தலைகாட்டி நிற்கிறது.

இவற்றோடும் நில்லாமல் விப்ரலம்பக வாக்யங்களோ எண்ணிறந்தவை. ''இது *அநாவ்ருத்திச் சப்தாத்* என்கிற ஸூத்ரத்திலே விவக்ஷிதம். இந்த நிஷ்கர் ஷங்களெல்லாம் பாஷ்யத்திலே ஸத்ஸம்ப்ரதாயத்தோடே கூட சிரபரிசயம் பண் ணின மஹாப்ராஜ்ஞருக்கு நிலமாயிருக்கும்''........என்ன கம்பீரம்! என்ன ஸ்ரீமத் கம்பீரம்!! *பாஷ்யாதிக்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்யம் பஜேத* என்றது அத்விதீயமன்று காண் என்று பத்தராவி ஸ்வாமி பணிக்கும் சுருக்கு.

விச்ராந்தி பெறமாட்டாத ப்ராஸங்கிகமானவிவை கிடக்க. ப்ரஸக்தத்தை உபஸம்ஹரிப்போம். இன்னது எழுதுகிறோமென்று தெரியாதே காடு பாய்ந்து இன்னமும் சோத்யத்தை ஊர்ஜிதப்படுத்தி நிற்கிறார். ஒன்று ஸாக்ஷாத் காரணம்; ரண்டு பரம்பரயாகாரண மென்கிறார். இதுதான் ஏற்ற ஸமாதானம். பானை யுண்டாவதற்கு தண்ட சக்ரங்கள் ஸாக்ஷாத் காரணம்; கத்தியும் சாணையும் பரம்பரயா காரணம். எங்ஙனேயென்னில்; தண்டத்தை மரத்திலிருந்து வெட்டு வதற்குக் கத்தி இன்றியமையாது. அந்தக் கத்தி சடக்கெனக் காரியஞ் செய்வதற்கு சாணை இன்றியமையாதது. ஆகவே ஸாக்ஷாத் காரணத்தோடு பரம்பராகாரண ங்களும் ஆவச்யகமே.

இது பானகத்துக்கு மட்டுமன்று; துணிக்கும் பார்க்கலாம். துணிக்கு நூல் ஸாக்ஷாத்காரணம். கொல்லையும் தண்ணீரும் பரம்பரயா காரணம். எங்ஙனே யென்னில்; நூல் பஞ்சிலிருந்து உண்டாகவேணும்; பஞ்சுச் செடி பயிராவதற்கு ஒரு கொல்லை வேணும். தண்ணீரில்லாமல் பயிராகாதாகையால் அதுவும் வேணும். ஆக, நூல் ஸாக்ஷாத் காரணம். கொல்லையும் தண்ணீரும் பரம்பராகாரணம். இது ஓயாத ராமாயணம். மறைந்து கிடக்கிற சொத்தல் புழுத்தல்களெல்லாம் க்ரமேண வெளியாவதற்கு நம்மவருடைய ப்ரவ்ருத்திகள் *ஸததாநாரதாச்ராந்த ஸந்ததாவி ரதாநிசம்* என்கிற அமரகோசத்தின்படியே ஸததம் அநாரதம் அச்ராந்தம் ஸந்ததம் அவிரதம் அநிசம் செல்லுக.

மத்யஸ்த மஹநீயர்களே! முடிவில் ஒன்று நினைவூட்டுகிறோமிவர்க்கு. அஹோபிலமடத்துப் பத்ரிகையிலேயே ஒரு ஸமயம் வெளிவந்த ஆசார்ய ஜயந்தி மலரில் இவர் ''பாஷ்யகாரரர் இது கொண்டு'' இத்யாதியான ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியை உதாஹரித்து, அதற்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியான பங்க்தியாக எடுத்துக் காட்டினார்—''ஸ்ரீபாஷ்யகாரரர் இப் ப்ரபந்தத்தின் ஸூக்திகளைக் கொண்டு ஸூத்ரவாக்ய ஸந்திக்தார்த்தங்களை ஐககண்ட்யம் பண்ணியருளுவர் என்பதாக மாமுனிகள் விவரணமுள்ளது'' என்று. இதற்கு நாமெழுதினோம்—'இப்படிப்பட்ட அஸம்பத்தமான பங்க்தி இவர் கையாளும் நூல்களில் ஸுபிக்ஷமாயிருக்குமேயல்லது விசதவாக்சிகாமணிகளின் திருவாக்கில் ஒரு போதும் இடம்பெறாது. ஸந்திக்தார்த்தங்களை ஐககண்ட்யம் பண்ணுவதாக எழுதுகிற முறை இவர்கள் திரளில் நடையாடுமே யொழிய ஸதாசார்ய ஸ்ரீஸூக்தி ஸரணியில் புகவே புகாது. ஸந்திக்தார்த்தங்களை நிர்ணயிப்பதென்றும், அர்த்த விரோதம் தோன்றுமிடங்களில் ஐககண்ட்யம் பண்ணுவதென்றும் விவேகிகள் வ்யவஹரிப்பர்கள். இவர் பயிலும் க்ரந்தங்களில் வாஸனையே இவரை மருளச்செய்கிறது' என்று.

ஸ்ரீரங்கவாஸிகளான வித்வான்களுக்கு ப்ரத்யேக விஜ்ஞாபனம். இந்த மதுராந்தகம் ஸ்வாமி ஏறக்குறைய நாற்பது வருஷகாலமாக நம்மோடு வாதப்ரதிவாத ஸம்பந்தம் வைத்துக் கொண்டிருக்கிறார். எந்த விஷயத்திலும் இவர் ப்ரதிவாதத்தை ஆர்ஜவத்தோடு நடத்திப் பூர்த்திசெய்தவரல்லர். நாம் எது அச்சிட்டாலும் உடனே இவர்க்கு அனுப்பிவிட்டே பிறர்க்கு அனுப்புகிறோம். இவர் அது செய்வதில்லை. ''இன்னபத்திரிகையில் ஸமாதானம் வெளியிட்டிருக்கிறேன்; பார்த்துக் கொள்க'' என்றாவது எழுதலாமே நமக்கு. அதுவுமில்லை 'கண்ணில் படாதவரைக்குமாவது நம் எழுத்து ஜீவித்திருக்கட்டுமே' என்பதே இவருடைய நேயாசை. எம்பெருமான் இதை எங்ஙனம் ஸஹித்திருப்பன். நாம் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை யென்று விரதம் பூண்டிருக்கும் பத்ரிகைகள் எப்படியோ கண்ணில் பட்டுத் தொலைகின்றன.

— ''ஹந்த! பலவதீ பவிதவ்யதா'' — * ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி: *

# பேசுவதெல்லாம் பேச்சல்ல, எழுதுவதெல்லாம் எழுத்தல்ல.

எந்த பாஷையிலானுலும் பேச்சிலும் எழுத்திலும் ஒழுங்குபாடு குன்று திருக்கவேணும். மமிட்டி திருமட்டி தப்பளே மாப்பளே என்றுப்போலே பேசி விட்டாலும் எழுதும்போது அப்படி யெழுதக் கூடாதென்று பெரும்பாலும் தெரிந்துகொண்டிருக்கிறுர்கள். பத்ரிகைகளுக்கு ஸம்பாதகர்களென்று பேர்பெற் றிருக்குமவர்கள் நிரவத்யமாக எழுதப் பயிலவேணும். பிறர்க்கு வழிகாட்டிகளாக இருக்கவேணும். வெளிவருங் கட்டுரைகளேச் சிலவரிகள் வாசிக்கும்போதே இவர்கள் வ்யுத்பந்நர்கள் (அல்லது) அவ்யுத்பந்நர்கள் என்பது எளிதில் அறியக்கூடியதா கின்றது. கத்தவால் வனபர்த்தி ஸம்ஸ்தானங்களில் நடைபெறும் ஸதஸ்ஸுக் களுக்குச் செல்லும் வித்வான்கள் ''அஹம் உக்த்வா பவாந் வக்தவ்யம்'' என்பர் களாம். நான் சொல்லியான பிறகு நீர் சொல்ல வேண்டும் என்று விவக்ஷையாம்.

ஸம்ஸ்க்ருத வ்யவஹாரங்கள் கிடக்கட்டும். இதேபோலத் தமிழிலும் பரி ஹாஸ்யமாகப் பேசுவாரும் எழுதுவாருமுளர். வளர்த்துவானேன்? விவக்ஷிதத்தை வெளியிட்டு முடிப்போம். கீலக பங்குனி ந்ருஸிம்ஹ ப்ரியாவில் ''ஸம்பாதகரின் குறிப்புக்கள்'' என்ற பகுதியில் சந்தாதாரர்கள் அதிகநபர்களைச் சேர்த்துத் தர வேணுமென்னுங் கோரிக்கையை வெளியிடுகையில் ''இது பெரியகாரியமில்லே'' என் றெழுதப்படுகிறது. வடமொழியில் (யூயம் வக்தவ்யம்) என்பது போன்றதே இது - என்பதை இன்னமும் அறியாதவர்கள் இருக்கிறுர்களே! என்று உண்மையில் வியப்படைகின்றேம்.

இங்கு யோக்யனில்லே, இங்கு தரித்திரனில்லே என்று சொல்லலாம் எழுத லாம். இவன் யோக்யனில்லே, இவன் தரித்ரனில்லே என்றுல் 'இது அவ்யுத்பன்ன வ்யவஹாரம்' என்று உடனே அறுதியிடலாகும். இல்லே என்பதும் அல்ல என்ப தும் பரியாயமன்று. ப்ராகபாவம் ப்ரத்வம்ஸாபாவம் அத்யந்தாபாவம் அந்யோந் யாபாவம் என வகுக்கப்பட்டுள்ள நான்கு அபாவங்களில் அந்யோந்யா பாவத்தின் வாசியை அறியவேண்டும். 'எனக்கு இங்கே பெரிய காரியமில்லே' என்னலாம். 'இது எனக்குப் பெரியகாரியமில்லே' என்னக்கூடாது. பெரிய காரியமன்று, பெரிய காரியமல்ல-என்னவேணும். 'பொருளல்லாத வென்னே' என்கிற ஆழ்வார் பாசுரத்தை ''பொருளில்லாத'' என்று ஓதுவாருமுளர். அல்லாதவுக்கும் இல்லாதவுக்கும் வாசி யறிய வேண்டாவா.

ப்ரியாவில் 'இது பெரியகாரியமில்லே' என்றது தவறென்பதை வாசகர்கள் பெரும்பாலும் தெரிந்துகொள்ளமாட்டார்களெனினும் ஸம்பாதகர்நன்குதெரிந்து கொண்டிருக்க வேண்டாவா? இதை நாம் தெரிவிப்பது அழுக்காறு காரண மாக வன்று, இதமுணர்த்தும் வகையிலத்தனே. * சிரஸா ச்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி * என்பதை இத்தகைய விஷயங்களில் தழுவலாகாது. .... *

**முடிவான விண்ணப்பம்.** இத்தகைய பதவாக்ய சிக்ஷைகளே நாம் செய்து போருவது இன்று நேற்றல்ல. நெடுநாளாகச் செய்துவருகிறேம். ஸாமான்யர்களே நோக்கிச் செய்கிறேமல்லோம். பிரபல பண்டிதர்களே நோக்கியே செய்கிறேம். ஆனுல் பலனை கண்டிலோம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸைதிஹ்ய ரஸாயனம்.

அகலிபிக்லீதி விக்க்யாதை: ப்ரக்க்யாதைர் லிகிதம் புதை:,
ஐதிஹ்யலேகம் ஹந்யாந்மே ஸைதிஹ்யரஸாயநம்.

ஸ்ரீஸூக்திரத்நாகரபாலதந்வி-ஸ்ரீமச்சடாராதிகுரூத்தமாநாம்,
ஆஜ்ஞாமநர்க்காம் அவதம்ஸயந் ஸந் அண்ணங்கரார்யோ லிகதீதமத்ய.

## அப்ரமாணங்களை ப்ரமாணமாக்குவதன் அநௌசித்யம்.

ஐதிஹ்யரத்நாவளியென்று உபக்ரமித்துத் தலைகாலில்லாமல் எழுதிப் போந்து, முன்பின் வியாஸங்களிற் போல் (தொடரும்) என்றிடாதது க்ஷேமாய. ஐதிஹ்யமாவது இன்னதென்பதை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வ சதகத்தில் *அஹ்ருத ஸஹஜதாஸ்யாஸ் ஸூரய: *என்று தொடங்கும் சுலோகத்தில் நான்காவது பாதத்தில் *இதி ஹ ஸ்ம ப்ராஹு:* என்பதனால் காட்டியருளினார். (இதி ஹ) என்னும் அவ்யயத்தின் மேல் ஸ்வார்த்தே ஷ்யஞ் ஏறி ஐதிஹ்ய மென்றாகியிருக்கின்றது. 'இப்படியாம், இப்படியாம்' என்று பரம்பரயா சொல்லிக்கொண்டு வந்தது ஐதிஹ்ய மெனப்படும். ப்ரக்ருதம் ஐதிஹ்ய ரத்நமாலா என்று பெயர் வைத்து எதையெதையோ எழுதிப்போருமிவர் பிரபந்த சாரத்தை ஒரு பிரமாணமாக வெடுத்துக்காட்டுவதானது, நெடுநாளாக ஒதுக்கப்பட்டிருக்கும் ஓர் அம்மாவை யஜ்ஞசாலைத் தளிகையிலே புகுரவிடுவதோடொக்கும்.

நீதி மன்றங்களில் வியவஹாரங்கள் தொடுக்கப்பட்டால் முன்னம் ரிகார்டு தாக்கல் செய்வதென்பது ஒரு பெரிய காரியம். அப்போது செல்லாத பத்திரங்களை தாக்கல் செய்யும் போது பிரபலமான ஆக்ஷேபங்கள் நேர்ந்து அதிகாரிகளால் தள்ளுகடை செய்யப்படும். அதேபோல இங்கு அத்யந்தம் அப்ரமாணமான-நவீன கல்பிதமான பிரபந்த சாரத்தைப் புகுரவிடுவது மறைந்து போன பங்கங்களைப் புநருத்தாரம் செய்யவேயாம். பிரபந்த சாரத்தைப்பற்றின தத்துவங்களைச் சுருக்கமாகக் கேளீர்.

## பிரபந்தசாரத்தைப் பற்றின பரிசீலனைகள்.

ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை அருளிச்செயலென்றும் திவ்யப் பிரபந்தமென்றும் வழங்காமல் ப்ரபந்தமென்று வழங்குவது திவ்யப்ரபந்தத்வேஷிகளான ஸ்மார்த்தர்களின் திரளிலே தோன்றியது. அது பிறகு ஸாமானியர்களான வைணவர்களின்

வாக்கிலும் புகுந்தது. பூருவாசாரியர்கள், விசிஷ்ய நிகமாந்த மஹாகுரு. பிரபந்த மென்று ஒருவர் சொல்லக் காதால் கேட்டாலும் மாய்ந்து போவரே. இக்காலத்தி லொருவர் தம்முடைய திவ்யப்ரபந்தத்வேஷத்திற்கும், பூர்வாசார்ய வித்வேஷத்திற் கும் சாச்வத ஜயத்வஜமாக ப்ரபந்தரக்ஷை யென்று எழுதிவரும்படியான அவத்யம் தேசிகனிடத்தில் ஏறுமா; எங்ஙனே யேறும்? நூல்களில் பொது நிர்தேச மென்றும் சிறப்பு நிர்தேச மென்றும் இரண்டுண்டு; திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களில் கீழ்ப் ப்ரபந்ததத்தால் என்றும் இப் பிரபந்தத்தில் என்றும் அருளிச் செய்வதுண்டு. அது கொண்டு "பூருவர்களும் ப்ரபந்த மென்பதுண்டு" என்று காட்ட வருவது அபஹாஸ்யமாகும். ஸ்வாமி ஸ்தோத்ர பாஷ்யத்தில் *மாதாபிதாயுவதய:* வியாக்கியாந-உபக்ரமத்தில் "பரா சரப்ரபந்தாதபி "உபஜீவ்யப்ரபந்த நிர்மாணக்ரமாத்" என்று ஸாதித்துள்ளார். அது கொண்டு ஸ்ரீவிஷ்ணு புராணத்தை ப்ரபந்த மென்பதுண்டோ? "பாஷ்ய ப்ரபந்தே" "ச்ருத ப்ரகாசிகாப்ரபந்தே" இத்யாதி பரச்சத ப்ரயோகங்களுண்டு. அருளிச் செயலை விவ க்ஷித்து ப்ரபந்தமென்று வழங்குவது நவீனர்களிடத் தன்றிப் பூருவர்களிடத்து எங் குங்காண முடியாது. ஆகவே ப்ரபந்த ஸாரமென்கிற நூற்பெயரே நவீன க்ருதி இது என்பதைக்காட்டும்.

ஸ்வாமி வரைந்தருளின குருபரம்பராஸாரத்தில் ஆளவந்தார் முதலான ஆசார்யர்களின் ப்ரஸ்தாவத்தில் "இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள்" என்று அஸக்ருத் ஸாதிக்கிறார். எம்பெருமானார் ப்ரஸ்தாவத்தில் "திருவாய்மொழி யோதினார்" "திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டருளினார்" என்றே ஸாதித்திருப்ப தைக் காணலம். இப்படிப் பட்ட மஹாசாயர் ப்ரபந்தஸார மென்று பெயரிட்டு ஒரு ப்ரபந்தம் பண்ணினாரென்கை அநுவதிக்கவும தகாததே. இது வெளிவ்யவ ஹாரங்களோடு நின்றாலும் பாதகமில்லை. "வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்த சாரம்" என்று நூலினுள்ளும் நுழைந்திருப்பது மிகவும் அருவருக்கத் தக்கதன்றோ

எந்த ப்ரபந்தத்தின் எந்த விதமான ஸாரம் இதில் எந்த பாட்டில் பொறித் திருப்பதென்று கேட்டாலோ வர்ஷசதமானாலும் விடையிறுக்க முடியாது. ஸ்வாமி ரஹஸ்யத்ரய ஸாரமென்றும், ஸாரஸார மென்றும், த்ரமிடோப நிஷத்ஸாரமென் றும் சில பிரபந்தங்கள் ஸாதித் திருக்கிறாரே. இவற்றில் ஏதேனும் கேள்வி பிறப்ப துண்டோ? ரஹஸ்யத்ரயத்தின் ஸாரப் பொருள்களைக் கொண்டது ரஹஸ்ய த்ரய ஸாரம்; அந்த ஸார க்ரந்தத்தின் ஸாரம் கொண்டது ஸாரஸாரம். த்ரமிடோப நிஷத்தான திருவாய்மொழியின் ஸாரங்கொண்டது த்ரமிடோபநிஷத்ஸாரம். மற்றும் அருளாளப் பெருமாளெம்பெருமானார், நடாதூரம்மாள் முதலானாருடைய, ஞானஸாரம், ப்ரமேயஸாரம், தத்வஸாரம் முதலிய க்ரந்தங்களின் திருநாமங்களி லும் விசாரம் தோன்ற ப்ரஸக்தியே கிடையாது. திவ்யப்ரபந்தார்த்த விசாரலேசமு மற்ற சுவடிக்கு ப்ரபந்தசார மென்று ஒருகாலும் ஸ்வாமி பெயரிட மாட்டாரென் றால் இதை மறுக்க நினைப்பவர்களா தேசிக பக்தர்கள்?

"பிரபந்தங்களின் ஸாரமான வகை தொகைகளை வெளியிடும் நூலாகை யாலே பிரபந்த சாரமெனப் பெயரிட்டிருக்கலாம்" என்று ஒருவர் சோதிடம்

சொல்லுவது போல் எழுதினர். சாரீரகமீமாம்ஸையில் இத்தனை அத்யாயங்கள், இத்தனை பாதங்கள், இத்தனை ஸூத்ரங்கள், இத்தனை யதிகரணங்கள், இதை இன்னாரியற்றினர்—என்று இவ்வளவே விவரித்து ஒருவர் ஒரு நூலெழுதினல் அதற்கு சாரீரகஸார மென்று பெயரிடலாம் போலும். "பெயரிட்டிருக்கலாம்" என்றெழுதினவருடைய நெஞ்சுக்கே குழப்பம் தீரவில்லையென்பது விளங்கவில்லையா!

## பிரபந்தசாரத்தின் அஸமஞ்ஜஸத் தன்மைகள்.

இனி இச்சுவடியில் அதாவது ப்ரபந்தசாரத்தில் முதற்பாட்டைப்பாருங்கள். "ஆழ்வார்களவதரித்த நாளூர் திங்கள்" என்பது தொடக்கம். [நாள் ஊர் திங்கள்] நாளென்பது நக்ஷத்திரம்; ஊரென்பது தெரிந்ததே; திங்களென்பது மாஸம். ஊரை முன்னேயோ பின்னேயோ எங்கும் வைக்கலாம். மாஸ நக்ஷத்ரங்களை மாற்றவே தகாது. இன்ன மாஸத்தில் இன்ன நக்ஷத்ரத்தில் என்பது தானே அடைவு; "ஆழ்வார்களவதரித்த ஊர் திங்கள் நாள்" என்றே "திங்கள் நாளூர்" என்றே சொல்லுவதில் யாப்புச் சிதைவு எள்ளளவும் நேராது. "நாளூர் திங்கள்" என்பதும் இரு தேமாச்சீர்களே. ஊர் திங்கள் நாள் என்பதும் இரு தேமாச்சீர்களே. திங்கள் நாளூர் என்பதும் இரு தேமாச்சீர்களே. "உத்தராயணே விச்வாவஸுநாம ஸம்வத்ஸரே, தசம்யாம் திதௌ சுக்லபக்ஷே கந்யாமாஸே" என்று சொல்லுவது எங்கேனும் கண்டதுண்டோ? இந் நேர்த்திக்குச் செய்யுள் கூடாவிட்டாலும் சிரமப்பட்டுக் கூட்டுவர்கள் சிறிய ஞானத்தர். எளிதாகவே கூடுவதாயிருக்க, விபரீதமாகப் பாடினரென்னு மவத்யத்தை ஸ்வாமி திருமுடி மேலா ஏற்றுவது? இப்படியும் ஒரு வீண்பிடிவாதமா?

விவாத நூலில் *வையகமெண்* என்கிற பதினேழாம் பாட்டு மிகவும் பிற்பட்டது. ஒருவர் செய்து முடித்த பிறகு மற்றொருவர் செய்து நுழைத்ததென்பதில் ஐயுறவேண்டா. இப்பாட்டில் (17ல்) ஆழ்வார்கள் பன்னிருவரையும் பேசி முடித்தபின் "எதிராசர் தம்மோடு ஆறிருவர் ஒரொருவர் அவர் தாம் செய்த நாலாயிரமும்" என்றுள்ளது. இதனல் இராமானுச நூற்றந்தாதியை இராமானுசர் தாமே செய்தருளியதாக நிஸ்ஸந்தேஹமாய்க் கூறப்பட்டதாயிற்று. இதற்கு இப்படி பொருளல்லவென்றும், இராமானுசர் செய்வித்தநூலென்று பொருள் கொள்ளலாமென்றும் வேறு விதமாகவுங் கொள்ளலாமென்றும் நவீன வுரைகாரர்கள் சிரமப்படுகிறர்கள். அது '......வ்ருதா ச்ரம:' அத்தனை. 'இராமானுசர்இயற்றினபடியாலே இராமானுச நூற்றந்தாதி யெனப் பெயர் வந்தது' என்று மருண்ட வொருவர் செய்த செய்யுளிது, 'பர்த்ருஹரி, பட்டிகாவ்யம், பாரவி, முராரி' இத்யாதியாக வழங்கும் க்ரந்த நாமங்கள் ப்ரம ஹேதுவாயின. தேசிகப்ரபந்த மென்றல் தேசிகரியற்றிய ப்ரபந்த மென்று தானே பொருள் அப்படியே கொண்டார்களிங்கும்.

## நவீனர்கள் செய்துள்ள கற்பனைகள்.

சில கற்பனைகள் கேண்மின். திருவெவ்வுளூரெம்பெருமானுக்கு தேசிக ஸ்துதியில்லையே யென்று குறைப்பட்ட சிலர் கிங்க்ருஹேசஸ்துதி யென்று ஒன்று கல்பித்து

ஸ்வாமியின் க்ருதியாக வெளியிட்டிருக்கவில்லையா? யாரோ வொருவர் செய்த ஹரிதிநதிலகத்தை ஸ்வாமியின் க்ருதிகளிலே பரிகணனம் செய்திருக்கவில்லையா? ஆசார்ய கோஷ்டியில் சேராத வொருவர் செய்த ஸ்ரீ ஸூக்த பாஷ்யத்தை நஞ்சீயருடைய க்ருதியாக ஏறிட்டு வெளியிட்டிருக்கவில்லையா? ப்ரமத்தினால் சில, ஆக்ரஹத்தால் சில, என்று வாசியுள்ளது. கிங்க்ருஹேசஸ்துதி—ஹரிதிநதிலகாதிகளை ஸ்வாமியின் க்ருதியாக ஸாமான்யர்கள் எழுதிவைத்திருந்தால் கேள்வியில்லை. தர்சனஸ்தாபகாசார்யர்களென்று விருது பெற்றவர்களுமன்றோ எழுதிவைத்திருக்கிறார்கள். இல்லை யில்லையென்றால் ஸதஸ்ஸில் காட்ட ஸஜ்ஜனா யிருக்கிறேன். இவர்களது ஓ[illegible]ப்பில் சிறியாரோடு பெரியாரோடு வாசியில்லை கல்பனைக்கு.

### ஆராய்ச்சிக்குச் சில சந்தர்ப்பங்களில் தான் அவகாசம்.

பட்டுநூல்கார வகுப்பினர் பூணூலணிந்து பன்னிரு நாமஞ்சாத்திப் பஞ்சகச்ச வேஷ்டியுமுடுத்து ஆங்காங்கு ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணர்களோடு கலந்து பரிமாறுகிறார்கள். மஹோத்ஸவங்களில் ததீயாராதன கோஷ்டிகளிலும் ஸமபங்க்தியில் அந்வயித்து புஜிக்கிறார்கள்' இப்படியே காலந் தள்ளுகிறது. ஸமய விசேஷங்களில்' இவ்வநீதியை எம்பெருமான் தானும் ஸஹித்திருக்கமாட்டாமல் பிடியுண்ணச் செய்கிறானிவர்களை. அடியேன் வெகு நாள் நினைத்திருந்ததையும், விமர்சிக்கவேண்டிய ஸந்தர்ப்பம் விளைந்ததையும், அதனால் தத்துவமுணர்ந்து உணர்த்தலானதையும் பலகால் விவரித்தெழுதியிருக்கிறேன். இங்குச் சுருக்கமாக வெழுதுகிறேன். ராமாநுஜாபாத்ரம், நமோ ராமாநுஜார்யாய, வாழிகள், பிள்ளையந்தாதி, பிரபந்தஸாரம், ப்ரபந்தாநுஸந்தானதீபிகை, வடகலைகுருபரம்பராப்ரபாவம். என்னுமிவையேழையும் இளம்பிராயத்திலேயே அடியேனறிவேன். 'நம்ம ஸம்ப்ரதாயத்தில் நாம் வைத்துக் கொண்டிருப்பது போல அவர்கள் ஸம்பிரதாயத்திற்கு இவை' என்றே ஸஹஜமாக நினைத்திருந்தேன். இப்படியிருக்கையில் ராமாநுஜா பாத்ரோத்ஸவமென்று ஒன்று முளைத்தது. பரம கம்பீரமாய் எங்கும் பங்கப்படாத தான*ஸ்ரீமாந் வேங்கட தனியனிருக்க, அதற்கொன்றுமில்லாமல் இதற்கென்னவந்ததென்று கீர்த்தி மூர்த்தியான நாவல்பாக்கம் ஸ்வாமி ஸாதிக்கவே இந்த விசாரம் என்னுள்ளத்தில் குடிபுகுந்தது. அதற்குமேல் கோயில் திருமலை பெருமாள் கோயில் வ்யவஹார விஷயங்களையும் விமர்சிக்க ப்ராப்தமாயிற்று.

ஆப்தசிகாமணிகளே! இதைப் பாரதமாக வளர்த்தாமல் இதோ முடித்துவிடுகிறேன். வாழி திருநாமத்தில் ஸ்ரீசைலேசதயா பாத்ரத்தனியனுக்கு முன்னே மணவாளமாமுனிகளின் ஆசார்யருடைய தனியன் *நம: ஸ்ரீசைலநாதாய* என்பது அநுஸந்திப்பது: அது ஸகல பரம்பரைகளிலும் ஒரே விதம். அந்த ஸ்நானத்தில் தேசிகருடைய ஆசார்யருக்கு இவர்கள் இயலில் சொல்லிவரும் தனியன் *நமோ ராமாநுஜார்யாய* என்பது. அது உண்மைத் தனியனன்று என்பதை யாவருமறிவர். இந்த ச்லோகம் எப்போது செய்யப் பட்டது? யாரால் செய்யப்பட்டது? ஸ்வாமி ஸாதித்த மஹா கம்பீரமான வேறு தனியனிருக்க இது எதற்காகச் செய்யப்பட்டது? என்று பல வருடங்களாகப் பல மஹான்களையும் கேட்டு வருகிறேன்.

அடியேனுடைய ஏழெட்டு நூல்களில் இதைப்பற்றி வலிதாக எழுதியுமிருக்கிறேன். "வ்ருச்சிக தஷ்டமலிம்லுசவத் இருக்கின்றீர்களே" என்றுகூட வெழுதியிருக்கிறேன். இதற்கு ப்ராமாணிகமான விடை என்றைக்கு வெளிவந்தாலும் "அடியேனுடைய துர்வாதங்களை க்ஷமிப்பது" என்று விஜ்ஞாபித்து அஞ்ஜலிபந்தத்தோடு விச்ராந்தனுவேன். சாரீரகமீமாம்ஸையில் முதலத்யாயத்தின் முடிவான ஸூத்ரம் *ஏதேந ஸர்வே வ்யாக்க்யாதா வ்யாக்க்யாதா:* என்பது. அதையே இங்கு அநுஸந்தித்து நிற்கிறேன்.

### இதற்கு விடைகூற வேண்டா; அவரவர்கள் சிந்தைசெய்வதே போதுமானது.

"அடியார்கள் வாழ அரங்க நகர்வாழ சடகோபன் தண்டமிழ் நூல்வாழ" என்னும் வெண்பாவுக்குப் பிரதியாக 'நானிலமுந்தான் வாழ நான்மறைகள் தாம்வாழ, மாநகரில் மாறன் மறைவாழ" என்கிற வெண்பா வெளி வந்துளது. மாறன்மறையாகிய திருவாய்மொழி மாநகரில்வாழ என்கிறது இதில். மாநகர் என்பது எது? திருவாய்மொழியில் "தென் திருப்பேரெயில் மாநகரே" என்றுள்ளதனுல் ஆழ்வார் திருநகரி ஸமீபத்திலுள்ள தென் திருப்பேரைக்கே மாநகரென்று திருநாமமுண்டு. அவ்விடத்திலா மாறன்மறை வாழவேணும்? "ஸர்வதேச தசாகாலேஷு" என்றுப்போலே உலகமெங்கும் வாழ வென்று ஆசாஸிக்க வேண்டாவா? ஏற்கெனவே *அரங்கநகர்வாழ* என்பது ப்ரஸித்தமாய் விட்டபடியால் அதை ப்ரஸ்தாவிக்க முடியாமற்போனுலும் "மாநிலத்தில் மாறன்மறைவாழ"என்னலாமே ஏதோவொரு நகரை உத்தேசித்துத்தானே 'மாநகரில்' என்கிறீர்கள். அந்நகர் இன்னதென்று பக்தர்கள் தெரிந்துகொள்ள வேண்டாவா? தத்துவத்தை நாம் தெரிந்துகொண்டேயிருக்கிறோம். ஸயூத்த்யர்கள் தெரிந்துகொள்ளச்செய்வது நன்று. இங்ஙனே ஒவ்வொன்றும் கற்பனைக்குக் கைவிளக்கு.

### நவீனர்களின் பரிஸ்திதிகள்.

காரண விசேஷத்தால் பிரபலமான ஸ்பர்த்தை யேற்பட்டு *அந்யமிந்த்ரம் கரிஷ்யாமி போலே கல்பித்தவற்றை இன்ருக விடுவதென்றுல் இது ஸாத்யமா? ஸம்பாவிதமா? இனி யொருகாலும் விடார்களென்பதறிவேன். "பல்லாண்டு பல்லாண்டு" என்று வாயால் சொன்னுலுங்கூடப் பாதகமாகு மென்று "தந்த ஸம்வத்ஸரம் தந்த ஸம்வத்ஸரம் தொலைந்ததா!" என்று சொல்லிக் கொண்டிருந்த வகுப்பினர் திவ்யப்ரபந்த மென்னுமல் பிரபந்த மென்று சொல்லிக் கொண்டாவது மன்ருடுவது நன்றேயன்றே. தந்தஸம்வத்ஸர கதை மிகப் பெரிது; அந்யத்ர விஸ்தர:.

ஸ்வாமி ஸாதித்த ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலான ரஹஸ்ய க்ரந்தங்களில் ஆதிமத்யாவஸானங்களில் சுலோகங்களும் பாட்டுக்களுமுள்ளன. அந்த சுலோகங்கள் எப்படி தனிப்பட்ட பிரபந்தங்களல்லவோ. அப்படியே பாட்டுக்களும் தனிப் பிரபந்தங்களல்ல வென்பது சிலாலிகிதம். "அவை தனிப்பிரபந்தங்களாகவும் தொன்று தொட்டு விளங்கி வருகின்றன" என்பது ஹாஸாஸ்பதம் கேவலம். கோவில் சண்டை தோன்றுவதற்கு முன்பு ஸ்வாமியை இன்னுரென்றே யறியாதிருந்த வகுப்பினர் 'தொன்றுதொட்டு' என்றெழுதுவது பாமரவஞ்சனை மட்டுமன்றே. ஆத்ம வஞ்சனையுமல்லவா?

அடுத்தபடியான வார்த்தை—"ஸ்ரீதேசிகன் அர்ச்சை வடிவில் எழுந்தருளியிருக்கும் பாக்கியம் பெற்ற எல்லாத் திவ்விய தேசங்களிலும் விசேஷமாய் திரு நக்ஷத்திர தினங்களிலும் அநுஸந்திக்கப்படுகின்றது" என்பது. கோயில் திருமலை பெருமாள் கோயிலென்று ப்ரஸித்தமான திவ்ய தேசங்களிலும் திருவவதார ஸ்தலமான திருத்தண்காவிலும் நீதிமன்றங்கள் மூலமாக வாய்ப்பூட்டு போட்டிருப்பது த்ரிஜகத் ப்ரஸித்தமாயிருக்க இங்ஙனே யெழுதி அழகு பார்த்துக்கொள்வதில் என்ன லாபமோ அறியோம். திருத்தண்காவின் ப்ராந்தத்தில் புதிய நிர்மாணமான பரகால மடத்திலும் ஸ்ரீரங்கராஜ வீதி நூதன ஸந்நிதியிலும் இங்ஙனே ஆங்காங்கு (கி. பி. இருபதாம் நூற்றுண்டில்) நூதன நிர்மாணமான ஸன்னிதிகளிலும் சொல்லப்பட்டு வருகின்றதென்றுல் இதை யாரே மறுப்பார்? நைஷதத்தில் சந்த்ரோபாலம்ப கெட்டத்தில் "அநுபவம் வசஸா ஸகி! லும்பஸி" என்றதுதான் நினைவுக்கு வருகிறது. அப்படி தொன்றுதொட்டு வந்திருக்குமாயின் அநாதிதிவ்யப்ரபந்தாதிகாரிகள் வாக்கிலன்றே வந்திருக்கும். அடியேனுடைய "வரதன் ஸன்னிதி வரலாறு" என்னும் நூலிலும் "பரமார்த்த பூஷணம்" முதலான மற்றும் பல நூல்களிலும் முடிந்துபோன சர்ச்சைகளன்றே இவை.

### நவீனர்களின் அஸங்கதோக்திகள்.

"இராமாநுச நூற்றந்தாதி நாலாயிரத்தில் சேர்ந்ததென்று ஒரு சாரார்; சேராததென்று ஒரு சாரார்" என்பது ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் பரிமாறும் வார்த்தையன்று. கண்ணிநுண் சிறுத்தாம்பு நாலாயிரத்தில் சேர்ந்ததானுல் நூற்றந்தாதியும் அத்தகைத்தே. திருக்கார்த்திகைக்குப் பிறகு கொள்ளும் அநத்யயன க்ரமம் நூற்றந்தாதிக்கும் நிர்விசேஷமானதே. திருமடல்களைப்பற்றி இன்னமுமா மருள்? பூருவாசாரியர்களில் ஒருவரும் திருமடல்களில் பாசுரப்பகுப்பு செய்தது கிடையாது. திருவெழு கூற்றிருக்கை போலவே திருமடல்களையும் ஒவ்வொரு பாட்டாகத்தான் பூருவாசாரியர்களனைவரும் ஒரு மிடருகக் கொண்டிருந்தார்களென்பதில் ஸந்தேஹ லவலேசமும் வேண்டா.

உண்மையில் ஸ்வாமி ப்ரபந்தஸாரம் பணித்திருந்தால், அது தன்னில் திருமடல்களைப் பல பாட்டுக்களாகப் பிரித்துமிருந்தால் அது பூர்வாசார்ய பரம்பரா ப்ராப்தமான ப்ரணாளியாகத்தானிருக்கும்; இதற்கு மாருக முன்னோர்கள் யாரும் அபிப்பிராயங்கொள்ள அவகாசமேயிராது. ஆகவே திருமடல் விசாரம் ஸர்வாத்மநா அஸம்பத்தம். திருவந்தாதிகள், திருச்சந்தவிருத்தம், திருவாசிரியம்,

பெரிய திருவந்தாதி, அமலனுதிபிரான், திருவெழுகூற்றிருக்கை, திருமடல்கள், இராமாநுசநூற்றந்தாதி ஆகிய இவற்றில் இன்னாரருளிச்செய்ததென்று திருநாமக் குறிப்பு இல்லாதிருக்கவும் முன்னோர்கள் சொல்லிவந்ததை மீறிச் சொன்ன துண்டோ? மாஸ நக்ஷத்ர அவதார ஸ்தலங்களைத்தான் மாற்றினதுண்டோ? பெரிய வாச்சான்பிள்ளை யருளிச்செய்த அர்த்தங்களை ரேகாமாத்ரமாவது அதிலங்கித்த துண்டோ? ஆறுயிரப்படியில் பிள்ளானருளிச்செய்த அர்த்தங்களையுங்கூட உபே க்ஷித்தன்றோ பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த அர்த்தங்களையே ஆதரித்துப் போருகிறார் ஸ்வாமி. இதெல்லாம் ப்ரதிஜ்ஞாமாத்ரமேயன்றே, ஒவ்வொன்றிலும் விபுலவிவரணமன்றோ காட்டியிருக்கிறேன். *வாஸுதேவக்ருஹம் த்வேகம் ந ப்லா வயதி ஸாகர:* என்றுப்போலே பிரளயத்திலுமழியாவே அடியேனுடைய நிரூ பணங்கள். இதற்கு, ஸமீபத்தில் வெளியிட்ட ஆசார்யஸூக்திரக்ஷையே ஸாக்ஷி.

## திருநெடுந்தாண்டகமும் திருப்பல்லாண்டும் பற்றி.

அஸத்தமயமும் அஸம்பத்த ப்ரசுரமுமான பிரபந்தசாரத்தினுல் இவர்கள் சாதிக்க விரும்பும் விஷயங்கள் இரண்டு. (அவையாவன) — (1) திருமங்கையாழ்வா ருடைய திவ்யப்ரபந்தங்களில் திருநெடுந்தாண்டகம் மூன்றுவதேயொழிய சரமப் பிரபந்தமன்று; (2) திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியோடு சேர்ந்து ஏகப்பிரபந்தமே யொழியத் தனிப்பிரபந்தமன்று. ஆக இவ்விரண்டு விஷயங்கள் திவ்யப்ரபந்த பாஷ்யர்களான இவர்கள் எப்படி நிர்ணயித்தாலும் இதில் நாம் தலையிட்டு யாதொன்றும் எழுதவேண்டிய அவசியமில்லை, ஆனாலும் இவர்களின் மருள் உலகுக்குத் தெரியவேண்டியதற்காகவும், கண்ணில் பட்ட தவறுன விஷயங் களைக் கண்டித்துத் தொலைப்பதாகிற இயல்வைக் காக்கவேண்டியதற்காகவும், எழுத வேண்டியதாகிறது. ஏற்கெனவே சிலவாண்டுகட்குமுன்பு ஸ்ரீ உ. வே. D. T. தாதா சாரியர் முதலான சிலர் எழுதி ஓய்ந்த விஷயங்களே இவை. காலவ்யவதானத் தாலே பலர்க்கு மறந்து போயிருக்கும்; சிலர்க்குத் தெரியாமலேயிருக்கும் என்றெண் ணியே இப்போது இவர் கிளம்பியுள்ளார். ஆதியிலிருந்தே இவர்களது வழக்கம் இதுவேயன்றோ. முதலில் திருநெடுந்தாண்டகத்தைப்பற்றி யெழுதிவிட்டு, உடனே திருப்பல்லாண்டைப்பற்றியெழுதுகிறேன். *துஷ்யது ந்யாநே பிரபந்த சாரத்தைப் பிரமாணமாக இசைந்தே இஃது எழுதப்படுகிறது. திருநெடுந்தாண்டகம் மூன்று வது பிரபந்தமென்பதையோ, திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமன்றென்பதையோ பிரபந்த சாரம் பேச வந்ததன்று என்பதை மேல்வரும் நிரூபணங்களினுல் உணர்க.

## தேசிகஸூக்திகள் பௌர்வாபர்ய நிர்ணயகமன்று.

ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்களிலோ பூர்வாசாரியர்களின் திவ்ய க்ரந்தங் களிலோ பௌர்வாபர்யத்தை தேசிகர்திருவாக்கைக் கொண்டு நிர்ணயிக்கவே முடி யாது. ஏனெனில், குருபரம்பரா ஸாரத்தில் ஆளவந்தாருடைய திவ்ய க்ரந்தங் களின் பரிகணனையில் "... ஸ்தோத்ரமும் சதுச்ச்லோகியும் ஆக எட்டு" என்றருளி யுள்ளார். இதனுல் ஸ்தோத்ரரத்னம் சதுச்ச்லோகிக்கு முற்பட்டதென்று நிஸ்ஸந் தேஹமாக விளங்குகிறது. ஸ்வாமிதாமே சதுச்ச்லோகீபாஷ்யத்தின் முடிவில் *ஸ்தோத்ரே ஸந்தர்சயிஷ்யதி* என்கையாலே சதுச்சலோகிக்குப் பிற்பட்டது ஸ்தோ

த்ரமென்று ஸ்பஷ்டமாகிறது. எதைத்தள்ளி எதைக் கொள்வீர்? அன்றியும் அந்த குருபரம்பராஸாரத்திலேயே எம்பெருமானுருடைய திவ்யக்ரந்த பரிகணனை பண்ணுமிடத்து— "இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள் ஸ்ரீபாஷ்யம் தீபம் ஸாரம் வேதார்த்த ஸங்க்ரஹம்——ஆக ஒன்பது" என்கிருர். இத்தால் ஸ்ரீபாஷ்ய தீப ஸாரங்கள் தாம் முற்பட்டவை யென்று ஸ்பஷ்டமாகிறது. ஸ்ரீபாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் மஹாஸித்தாந்தத்தின் கடைப் பகுதியில் "அயமர்த்தோ வேதார்த்தஸங்க்ரஹே ஸமர்த்தித;." என்னும்வாக்யத்தால் ஸ்ரீபாஷ்யத்திற்கும் முற்பட்டதாக வேதார்த்த ஸங்க்ரஹத்தை பாஷ்யகாரர் தாமே அறுதியிடுகிருர். எதைக் கொள்ளுகிறீரென்று கேட்டால் திசைதொறும் விழிக்கவேணும். ப்ராமாணிகராயிருந்து விடையிறுப்பதானல் இவர் கையாலெழுதித் தீரவேண்டுவது "தேசிகனுக்குப் பூர்வாசார்ய க்ரந்தங்களின் பௌர்வாபர்யத்தை நிர்ணயிப்பதில் நோக்கில்லை; இன்னின்ன க்ரந்தங்களென்று நிர்தேசிப்பதில் மட்டுமே நோக்கு. (என்றோ, அல்லது) பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி விருத்தமாகவும் ஸ்வோக்தி விருத்தமாகவும் பணிப்பதே பணி" என்றோ எழுதித் தீரவேண்டுமிவர்கள்; ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி க்ரம விஷயத்திலே ஸ்வோக்தி விரோதமும், ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்திக்ரம விஷயத்திலே பூர்வாசார்ய ஸூக்தி விரோதமும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டினேனுகையாலே. இதில் வாய் திறக்க வழியுண்டோ?

## ஸ்ரீமந்நாதமுனிகளின் கட்டளைகள்.

*மாறன்பணித்த தமிழ்மறை நான்குக்கும் ஆறங்கங்கூற அவதரித்தவரான திருமங்கையாழ்வாரருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களாறில் எது சரமப்பிரபந்தம்? எது சரமப்பிரபந்தமாக இருக்கத் தகுதியுடையது? என்பதைச் சிறிது ஆராய்வோம் இவ்வாறு பிரபந்தங்களின் அடைவுபற்றி ஆராய்வதற்கு முன்னே ஒரு விஷயம் தெரிவிக்கலாகிறது ஆழ்வார்களின் பௌர்வாபர்யத்தில் வைஷ்ணவேதரர்கள் இன்னமும் விவாதப்பட்டுக்கொண்டு வேறுபாடாகவே யெழுதிவருகிருர்கள். இது போலவே பிரபந்தங்களின் பௌர்வாபர்யத்திலும் விவாதப்படுவாருளர். அன்னவர்களைப்பற்றி நமக்கு விசாரமில்லை. வடமொழி வேதத்திற்கு வியாஸர்போல நமது தென்மொழி வேதத்திற்கு ஸ்ரீமந்நாதமுனிகள் பரிஷ்காரகர் என்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். அப்பேராசிரியர்தாம் திவ்யப்ரபந்தங்களை ஸாக்ஷாத்கரித்து ஸம்பாதித்தவர்; ஆழ்வார்களின் வரிசைக்கிரமத்தையும் திவ்யப்பிரபந்தங்களின் வரிசைக்கிரமத்தையும் ததநுபந்திகளான விஷயங்களையும் உபதேசித்தருளினவரும் அவரே. திருப்பல்லாண்டானது திவ்யப்பிரபந்தங்களுள் பதினோராவதாக இருக்கச் செய்தேயும் அதனை முதற்பிரபந்தமாக வைத்தருளினவர் நாதமுனிகளேயாவர். இன்னின்ன பிரபந்தங்கள் சேர்ந்து முதலாயிரம், இன்னின்ன பிரபந்தங்கள் சேர்ந்து இரண்டாவதாயிரம்...... இத்யாதி வ்யவஸ்தைகளைச் செய்தருளினவரும் அவ்வாசிரியரேயாவர். மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்து உதித்து முதலாழ்வார்களென்று பெயர்பெற்ற பொய்கை பூதம் பேயாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களை முதலிலே வைத்திடவேண்டியது ப்ராப்தமாயிருக்க அவற்றை மூன்ருவதாயிரத்தில்கொண்டு சேர்த்தது, திருமழிசையாழ்வாருடைய இரண்டு திவ்யப்ரபந்தங்களில் ஒன்றை முதலாயிரத்திலும் மற்றொன்றை மூன்ருவதாயிரத்திலும் சேர்த்தது, அதுதன்னிலும்

முதற்பிரபந்தத்தை முதலாயிரத்திலே சேர்க்காமல் மூன்ருவதாயிரத்திலே சேர்த்தது, இரண்டாம் பிரபந்தத்தைக் கொணர்ந்து முதலாயிரத்திலே சேர்த்தது, நம்மாழ்வார் பிரபந்தங்களையும் திருமங்கையாழ்வார் பிரபந்தங்களையும் பிரித்து பிரித்து வெவ்வேருயிரங்களிலே சேர்த்தது ...... ஆக இத்தகைய விபாகங்களைப் பல வகைப்பட்ட ஔசித்யங்களை நோக்கி ஸ்ரீமந்நாதமுனிகள் தாமே செய்தருளினபடியாலன்ருே இவற்றில் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் எவ்விதமான பிறழ்வும் நேராமலுள்ளது. 'திருமழிசைப்பிரானுடைய திருச்சந்த விருத்தம் முதலாயிரத்திலே சேர்க்கப்பட்டிருப்பதனுல் அவ்வாழ்வாருடைய இரண்டு பிரபந்தங்களுள் இதுவே முதற்பிரபந்தமாக இருக்கத்தகும்' என்று சிலர் கூறிஞல் 'அப்படியுமிருக்கலாம்' என்ருே 'அதுதான் பொருத்தமானது' என்ருே சொல்லக்கூடியவர்கள் ஒருவருமிலர். நான்முகன் திருவந்தாதியில் ஆழ்வார் தாம் பேறுபெற்றபடியைச் சொல்லிற்றிலர்; அதுதன்னைத் திருச்சந்தவிருத்தத்திலேதான் சொல்லியுள்ளார்; முடிவில் இரண்டு பாசுரங்களிலும் அது சொல்லப்பட்டுள்ளது. (119) *பொன்னிசூழரங்கமேய பாசுரத்தில் *என்னதாவி...... உன்னபாதமலர் மன்னவந்து பூண்டு வாட்டமின்றி யெங்கும் நின்றதே* என்றும் அதற்கடுத்த பாசுரத்தில் (120) *மயக்கிஞன் தன் மன்னுசோதி ஆதலாலென்ஞவிதான் இயக்கெலாமறுத்து அருதவின்பவீடு பெற்றதே* என்றும் அருளிச்செய்திருக்கக் காண்கையாலே இதுதான் சரமப்ரபந்தமாயிருக்கவடுக்கும் என்று விவேகசாலிகள் நிர்ணயிக்கக் குறையில்லை. ஸ்ரீமந்நாதமுனிகள் திருவுள்ளம்பற்றினதும் இந்த ஔசித்யமேயாம். ஏவஞ்ச, திருச்சந்தவிருத்தம் முதலாயிரத்தில் சேர்ந்திருப்பதனுலேயே அதற்கு முதன்மை வந்துவிடாது.

## திருநெடுந்தாண்டகமே சரமப்பிரபந்தமென்பதுபற்றி.

இந்த ரீதியிலே திருமங்கையாழ்வாருடைய திவ்யப்பிரபந்தங்களாறனுள் திருநெடுந்தாண்டகம் இரண்டாவதாயிரத்தில் சேர்ந்திருந்தாலும் அதுவே சரமப்பிரபந்தமாகும். *என்னில் அங்கமெல்லாம் வந்தின்பமெய்த எப்பொழுதும் நினைந்துருகியிருப்பன் நானே* என்று பேரின்ப வெள்ளமாகத் தலைக்கட்டியுள்ளவதனைச் சரமப்பிரபந்தமாகக் கொள்ளாமல், ஆழ்வார் பேறுபெருத கிலேசத்திஞல் எம்பெருமானைப் பழித்துக்கொண்டு தெருவேற மடலூர்வேன் என்று ஸ்வப்ரபந்த ஸமாப்தி பண்ணிஞர் என்று எழுதிவைக்க ஆசார்ய பீடத்திலமர்ந்தவர்கள் நெஞ்சாலும் நினையார்கள். நம்மாழ்வார் *அவாவற்று வீடுபெற்றமை சொல்லித் தலைக்கட்டினவாறு போலத் திருமங்கையாழ்வாரும் அங்ஙனே தலைக்கட்டினதான திருநெடுந்தாண்டகம் தவிர மற்ருென்று சரமப்ரபந்தமாயிருகக என்ன ஔசித்யமுள்ளது. திருமங்கையாழ்வாருடைய பிரபந்நத்தைச் சாத்துமுறை செய்யும்போது எங்கும் நியமேந திருநெடுந்தாண்டகமும் சாத்துமுறை செய்யப்பட்டுவருவது அபலபிக்க முடியாததொன்று. இது மூன்ருவது பிரபந்தமாயிருந்தால் இதனை எதற்காகச் சாத்துமுறை செய்வதென்று விமர்சிக்கவேணுமே' விமர்சித்தால், இது த்ருதீய ப்ரபந்தமன்று, சரமப்ரபந்தமே யென்பது பக்ஷபாதிகளுக்குங்கூட மறுக்கவொண்ணுததாம்.

## ப்ரஸங்காத் D. T. தாதாசாரியரின் நிரஸனம்.

திருநெடுந்தாண்டகமே கலியன் ஸ்ரீஸூக்திகளில் சரமப்ரபந்தமாயிருக்க அதை த்ருதீயப்ரபந்தமாக்கியும் பெரியதிருமடலை சரமப்ரபந்தமாக்கியும்

9

பேசியிருக்கின்ற பிரபந்தசாரம் தேசிகக்ருதியாயிருக்கத் தகுதியேயில்லையென்ற இந்த ஹேதூபபாதனமும் அசைக்க வொண்ணுதது இவ்விஷயத்தில் பதிலெழுதி னவர்களில்: ஒருவர் (D. T. T.)''திருநெடுந்தாண்டகம் சரமப்பிரபந்தமன்று என் பதைப் பாடக்ரமங்கொண்டே தெரிந்துகொள்ளலாம்'' என்றார். ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளை நான்கு ஆயிரமாகப்பகுத்த ஸ்ரீமந்நாதமுனிகள் திருநெடுந்தாண்ட கத்தை இரண்டாவதாயிரத்தில் சேர்த்தும், திருமடலை மூன்றுவதாயிரத்தில் சேர்த்துமிருக்கையாலே இந்தபாடக்ரமங்கொண்டே தெரிந்துகொள்ளலாமென்பது இவருடைய கருத்து இது மிகவும் அஸங்கதம்; திருமழிசையாழ்வாருடைய இரண்டு ப்ரபந்தங்களில் முதற்பிரபந்தத்தை மூன்றுவதாயிரத்தில் சேர்த்தும், இரண்டாம் பிரபந்தத்தை முதலாயிரத்தில் சேர்த்துமிருப்பதுகொண்டு அவற்றின் பௌர்வா பர்யமும மற்றும்பலவும் மாறுபடுத்த வேண்டிவருமென்பதை அவர் உணர்ந்திலர்

## திருப்பல்லாண்டு தனிப்ரபந்தமே யென்பதை உபபாதித்தல்

பெரியாழ்வார் திருப்பல்லாண்டென்கிற ஒரு பிரபந்தமும் பெரியாழ்வார் திருமொழியென்கிற மற்றொருபிரபந்தமுமாக இரண்டுதிவ்யப்பிரபந்தங்களை அருளிச்செய்தாரென்பது சிறியாரோடு பெரியாரோடுவாசியற அனைவருமறியத் தக்கதும் அறிந்ததுமாம். 'இரண்டல்ல, ஒரே பிரபந்தந்தான்' என்று சாதிப்பதற் குச் சிறிதேனும் உபபத்தியுண்டோவென்று பார்த்தால், உபபத்தி சிறிதுமில்லாத தோடு அநுபபத்திகளே அதிகமாகப் புலப்படும். நூறு பாசுரங்களை ஒரு பத்தாகக் கொள்வது ஸம்பிரதாயம். இந்த ரீதியில் *வண்ணமாடங்கள்சூழ்* தொடங்கி *மெச்சூது சங்கமளவும் ஒரு பத்தாக எங்கும் ப்ரஸித்தியுள்ளது, இப்பெரியாழ்வார் திருமொழிக்குத் திருப்பல்லாண்டைத் தொடக்கமாக வைத்திட்டால் *மெச்சூதுசங் கப்பதிகம் இரண்டாம் பத்தின் ஆரம்பமாக இருக்கமுடியாது; *மெச்சூது சங்கத் தையே இரண்டாம்பத்தின் தொடக்கமாக அறுதியிட்டிருப்பது அபலபிக்க வொண் ணுததொன்றும். *வண்ணமாடங்கள் தொடங்கி *மெச்சூது சங்கமளவும் நூறு பாசுரங்களிருப்பதனுல் முதற்பத்தின் ஆதியந்தங்களில் விப்ரதிபத்தி கொள்ளக் காரணமேயில்லை. திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழிக்கு முதற்பதிக மாகக் கொண்டால் முதற்பத்து நூற்றுப்பத்துப் பாசுரங்கள் கொண்டதென்று அஸம்பத்தமாகச் சொல்லவேண்டிவரும். இங்கே சிலர் சொல்லுவதாவது' ''திருப் பல்லாண்டைத் தனிப் பிரபந்தம்போல் ஸேவித்துவருகிறார்களே யென்னில், அது ஒருபெரிய பிரபந்தத்தின் ஏகதேசமாயிருக்கச் செய்தேயும் அதைத் தனிப்பிரபந் தம்போல் ஸேவித்து வரும்படி பூருவாசாரியர்கள் ஒரு நிபந்தனை செய்திருந்தபடி யாலே அதன்படி ஆசாரம் வருகிறதென்றும், அதுகொண்டு அதைத் தனிப்பட்ட பிரபந்தமாக்கிவிட முடியாதென்றும்'' சொல்லுகிறார்கள். பூருவாசாரியர்கள் அப்படி யொரு நிபந்தனை செய்திருந்தது உண்மையாகில் பெரியவாச்சான்பிள்ளை முதலான பேராசிரியர்கள் அதனைக் கடந்து தனிப்பிரபந்தமாகக்காட்டி வியாக்கியானம் செய் தருளியிருக்கவே மாட்டார்கள். திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக் கும் ஸ்ரீபரகாலஸ்வாமியின் வியாக்கியானம் தோன்றியேயுள்ளது. அதிலும் திருப் பல்லாண்டைத் தனிப்பிரபந்தமாகவும் பெரியாழ்வார் திருமொழியைத் தனிப்பிர பந்தமாகவுமே கொண்டமை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. 'திருப்

பல்லாண்டு வியாக்கியானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும், பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும் அவர் இட்டிருக்கிறுர். "விஷ்ணுசித்தம் நத்வா ததீயமம்ருதோபமதிவ்யஸூக்தம் க்ருஷ்ணுவதார விஷயம் விவ்ருணேமி பக்த்யா" என்கிற சுலோகம் ஸ்ரீபரகாலஸ்வாமியின் பெரியாழ்வார் திருமொழிவியாக்கியான ப்ராரம்பத்தில் விளங்கா நின்றது. இதனுல் இது தனிப்பட்ட பிரபந்தமென்பது ஸுஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டது. அடுத்தபடியாக அவதாரிகையிலும் "கீழ் திருப்பல்லாண்டில் மங்களாசாஸனம் செய்து" இத்யாதி வாக்யங்களாலே இது ப்ரத்யேகப்ரபந்தமே யென்பதை நன்கு காட்டியிருக்கிறுர்.

## திவ்யஸூரிசரிதக்ரந்த ப்ரதர்சனம்

பரகாலஸ்வாமி காட்டியிருப்பது நமக்கு விஷயமேயன்று. திருப்பல்லாண்டின் பிரமேயம் வேறு; பெரியாழ்வார் திருமொழியின் பிரமேயம்வேறு. அதற்குமிதற்கும் என்னசேர்த்தி? பூர்வோத்தர மீமாம்ஸைகளுக்கு ஐகசாஸ்த்ர்யம் சொல்லுகிறுமென்பதை நிதர்சநமாக்கி வாதிக்கவெழுந்தால் ஸகல திவ்யப்ரபந்தங்களையுமேகப்ரபந்தமாகவேகொள்ளவேண்டிவரும் எம்பெருமானுருடைய திவ்யாஜ்ஞையால் திருவவதரித்த கருடவாஹந பண்டிதப்ரணீதமான திவ்யஸூரிசரிதத்திலும் ஐந்தாவது ஸர்க்கத்தில் 70, 71, 72 சுலோகங்களில் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் தனித்தனிப் பிரபந்தங்களென்பது நன்கு காட்டப்பட்டுள்ளது. ஆக, "திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் முதற்பதிகம்" என்னும் கூற்று ஸர்வாத்மநா அஸம்ப்ரதாயமென்று முடிந்தது. அத்யந்தம் அஸங்கதமானவிதனை தேசிகனுடைய மதமாகச் சொல்லுவது சிறிதும் தகாது. அஸங்கதார்த்தமென்று மூதலிக்கப்பட்டவிதனைக்கொண்டிருக்கின்ற ப்ரபந்தசாரம் விவேகியானவொரு ஆசாரியருடைய நூலாக இருக்க ப்ரஸக்தியே கிடையாதென்பது திண்ணம்.

## ஸ்ரீஸூக்திரத்னுகரஸ்வாமியைக் கேட்டுத்தெளிக:—

* வண்ணமாடங்கள் பதிகத்தின் (வியா) அவதாரிகையிலும், * நெய்க்குடத்தின் வியாக்கியான இறுதியிலும் திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியிற் சேர்ந்ததென்று காட்டும் ஸ்ரீஸூக்திகளிருப்பதாக இவரெழுதுவது இவர் தாம் படைத்த அக்கிலிபிக்கிலி விருதை சிலா சாஸனமாக்கிவைக்குமத்தனை. 'நம்மாழ்வார் அடியிலே * திருமால் திருப்பேர்வல்லாரடிக்கண்ணி சூடியமாறன் * என்று உபக்ரமித்த பாகவத சேஷத்வத்தை * அந்தமில்பேரின்பத்தடியரோடிருந்தமை* என்று உபஸம்ஹரித்தாராயிற்று" என்கிற ஸ்ரீஸூக்தியைக்கொண்டு திருவிருத்தம் முதலியனவும் திருவாய்மொழியின் உள்ளீடானவையே என்று கூட இவரெழுதிவைக்கலாம். மேலேகாட்டிய ஸ்ரீஸூக்தி எங்குள்ளதென்பதை இவர் ஸ்ரீஸூக்திரத்நாகரஸ்வாமியின் ஸன்னிதியிலேயுணர்ந்து, தமக்குள்ள தெருளையோ மருளையோ அவர் திருவடிவாரத்திலேயே விஜ்ஞாபித்து நிற்க. .... .... *

## திருப்பல்லாண்டைப் பற்றி நிகமனம்

பிரபந்தசாரம் நம் தேசிகனுடைய நூலாக இருக்கத் தகுதியில்லையென்பதை ப்ராமாணிகர்கள் அறுதியிடுவதற்குப் பலஹேதுக்கள் காட்டப்பட்டன. அவற்றுள் இது முதல் ஹேது. திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழியின் முதல் தசகமாக ஒரு பேதையனும் கொள்ள ப்ரஸக்தியில்லை. இவர்களின் ஸம்பிர

தாயத்தில் காலக்ஷேபம் செய்வதற்கென்று திவ்யப்ரபந்தங்களில் சிலவற்றுக்கு வியாக்கியானமிட்டுவைத்த பெரிய பரகால ஸ்வாமி யென்பவர் தமது வியாக்கியானத்தில் இவையிரண்டையும் தனித்தனிப் பிரபந்தங்களாகவே காட்டியுள்ளாரென்றுகாட்டினும் பிரபந்தசாரம் பிறப்பதற்கு முன்னமே அந்த வியாக்கியானம் பிறந்திருந்தும் அது அப்போது பிரசாரத்திலில்லாமையினால் பிரபந்தசாரகாரர் அதைக் கவனிக்கவில்லை யென்பது ஸ்பஷ்டமாகிறது. இப்போது பதில் சொல்ல எழுந்தவர்களில் ஒருவரும் இதைப்பற்றி வாய்திறக்கவுமில்லை. திவ்யஸூரிசரிதத்தில் பெரியாழ்வார் இரண்டு பிரபந்தங்கள் ஸாதித்ததாகச் சொல்லியிருப்பது திருப்பல்லாண்டை யுத்தேசித்து அன்றென்றும் கல்பஸூத்ரவியாக்கியானத்தை யுத்தேசித்தென்றும் ஒருவர் எழுதியிருப்பது அஸங்கதம். இரண்டு ப்ரபந்தங்களென்றதன் விவரணத்தை அவர் தாமே காட்டியிருப்பதாலும் கல்பஸூத்ரவியாக்கியான ப்ரஸ்தாவமே பண்ணியிராமையாலும். அலம் திஷ்டஹதஸ்ய முத்கராபிகாதேந. .... ....

## ஸதைதிஹ்ய ரஸாயனம்-இரண்டாம் பகுதி

**உலகின் பாக்கியம் உகக்கத்தக்கது.**

முற்பகுதியின் தொடக்கத்தில் ''முன்பின் வியாஸங்களிற்போல் (தொடரும்) என்றிடாதது க்ஷேமாய'' என்றெழுதியிருந்தோம். வைகாசியிதழில் தொடர்ந்துவிட்டது. இதுவும் க்ஷேமாய என்றே நினைக்கத் தட்டில்லை. எதையாவது அஸம்பத்தமாக எழுதிவைத்தால்தானே உலகம் எதிர்பார்க்கிற அருமருந்தான விஷயங்கள் வெளிவரும். ஸ்ரீபாஷ்யாதிகளுக்கு முன்னே அஸதர்த்தங்கள் தோன்றியிருக்கவேயன்றோ ஸதர்த்தங்களை நாம் அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. ஒருவருடைய கலக்கத்தினால் உலகுக்கெல்லாம் தெளிவு விளைவதாயிருந்தால் அந்தக் கலக்கம் உபாதேயமேயன்றோ. கீதையில் அர்ஜுநன் *அவரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:, கதமேதத் விஜாநீயாம் த்வமாதௌ ப்ரோக்தவாநிதி* என்னுமலிருந்தால் மேல்வந்த மணித்திரள்கள் உலகுக்குக் கிடைத்திருக்குமா? தொடர்ந்து தொடர்ந்து யாவதாயுஷம் எழுதட்டும்; க்ஷேமாய மஹதே ஸத்யம். இவரோட்டையாரொருவர் சாஸ்த்ரஜ்ஞரென்று இறுமாந்துகொண்டு, அம்மா அக்கா தாத்தா பாட்டீ என்று ஸம்பாஷணைகள் கற்பித்துத் தலைவேதனையாக எழுதிக்கொண்டு போவதுபோலல்லாமல் *வாழாட்பட்டு* ஏழாட்காலும்* கூழாட்பட்டு* என்றெழுதிக்கொண்டு போமிவர்க்கு வாசியுண்டன்றோ.

**ஸம்பந்தமற்ற ஸமாசாரங்கள்**

ஒருவர் ஸ்ரீராமாயணஸாரம் என மகுடமிட்டு ''ராமலக்ஷ்மணாதிகள் அரக்குமாளிகையிலிருந்து தப்பிப்பிழைத்த பின்பு'' என்று தொடங்கி அஜ்ஞாதவாஸாதிகளைப் பரக்கப் பேசிக்கொண்டு போவராம். அதேபோல இவர் ''ஐதிஹ்யரத்நாவளி' என மகுடமிட்டு, மங்களாசாஸனத்தின் மேன்மை—திருப்பல்லாண்டின் ஸாரம்—திருப்பல்லாண்டுக்கு மூலம்—திருப்பல்லாண்டு மூன்றும்பாட்டு .. என்றிங்ஙனே யெழுதிப் போருகிறார். விஷயம் எதுவானாலென்ன? ஸமஞ்ஜஸமாயிருந்தால் உகப்

போம். அது பெரும்பாலும் அஸம்பாவிதமாகையால் அஸாமஞ்ஜஸ்யத்தையே உபபாதிக்க நேர்கின்றதந்தோ!

### மங்களாசாஸன மூலங்களை மூதலித்தல்

மங்களா சாஸனத்திற்கும் ஐதிஹ்யத்திற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை' மங்களா சாஸன ஸ்வரூபம் ச்ருதப்ரகாசிகையில் ஒரு கெட்டத்தில் காட்டப்படுகிறது. அவ்விடத்துப் பங்க்தியைக் கேளீர்; "ஸம்பந்த விசேஷாந்விதேஷு ப்ரீதிः ஸ்நேஹः; யஸ்ய விபாகாः அஸ்தாநபய சங்கித்வம், தோஷாநவபாஸः, தோஷேபி குணத்வபுத்திः—இத்யாதய:" என்பது இந்த வாக்யத்தில் ''அஸ்தாநபயசங்கித்வம்" என்றதுண்டே இதுதான் மங்களா சாஸன மூலம். இந்த ஸ்ரீஸூக்திக்கு மூலம் ஸ்ரீகுணரத்நகோசத்தில் *ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷாவ்யஸநிபிः அபயம் சார்ங்க சக்ராஸிமுக்க்யைः* என்றுள்ள ஸ்ரீஸூக்தி. அதற்கும் மூலமான ஸ்ரீஸூக்தி திருமழிசைப் பிரானுடையவொரு பாசுரம். அதாவது, நான்முகன் திருவந்தாதியில் (10) ''ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவணையான்" என்பதாம. இதன் கருத்தாவது—திருநாட்டிலே நித்யர்களும் முக்தர்களும் பெருமிடறு செய்து ஸாமகானம் பண்ணும்போது பெரியதோர் ஆரவார முண்டாகும்; அதைக்கேட்ட திருவனந்தாழ்வான் இது ஸாம கோஷமென்பதை மறந்து 'அஸுரராக்ஷஸர்கள் தீங்கிழைக்க இவ்விபூதியிலும் வந்து கத்துகிறார்கள் போலும்' என்று ப்ரேமமடியாகக் கலங்கி அவர்கள் எம்பெருமானருகில் அணுக முடியாதபடி விஷாக்நியை உமிழ்ந்துகொண்டே யிருக்கிறானும். இது வாயிற்று *ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு* என்ற பாசுரத்தின் அருமருந்தான கருத்து. நம்மாழ்வார் *சூட்டு நன்மாலைகள் தூயன வேந்தி* என்கிற திருவிருத்தப்பாசுரத்தில் பரமபதவிருத்தாந்த மொன்றை ஸாக்ஷாத்கரித்து அருளிச் செய்தது போலவே இவ்வாழ்வாரும் மேலே விவரித்த திருநாட்டுச் செய்தியை ஸாக்ஷாத்கரித்து அருளிச் செய்தபடி. திருமழிசைப் பிரான், தம்முடைய ஆசாரியரான பேயாழ்வாரால் (தமது திருவந்தாதியில் 51.) *கலங்காப் பெருநகர மென்று பெயரிடப் பெற்ற திருநாட்டிலும் கலக்க முண்டென்கிறார்; கர்ம நிபந்தனமான கலக்கமன்று; ஜ்ஞான விபாக கார்யமான கலக்கமாயிற்றிது.

### ஸ்தோத்ர ரத்னத்தில் ஒரு சுவைப்பொருள்

ஸ்தோத்ரரத்னத்தில் ஆளவந்தார் திருவனந்தாழ்வானுக்கு ''ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி" என்று விசேஷணமிட்டு அவனை ப்ரக்ருஷ்ட விஜ்ஞானநிதியாக ஸாதித்தது திருமழிசைப்பிரான் காட்டிய கலக்கத்திற்கு மூலமான ஜ்ஞானவிபாகத்தைக் கருதியே யென்பது நம்முதலிகள் சேமித்துப் போரும் நிதிகளில் தலையானது.

### கம்பர் செய்யுட்களின் சுவை காட்டுதல்

ஸ்ரீராமாயணத்தில் தொட்ட தொட்ட விடமெல்லாம் மங்களா சாஸனமயமாயிருக்கும். கம்பர்பெருமான் காட்டியுள்ள இரண்டிடங்களை யீண்டெடுத்துக் காட்டுவோம்; பரதாழ்வான் பெருமாளைக் காட்டில் நின்றும் மீட்டுக் கொண்டு போக ஸகலபரிகரங்களோடுங் கூட வருவதைக் கண்ட குஹப் பெருமாள் அஸ்தாநே கலங்கினபடியைக் கூறுகின்ற கம்பர், ''அஞ்சனவண்ணன் என்னுருயிர் நாயகனுளாமே, வஞ்சனையால்அரசெய்திய மைந்தரும் வந்தாரே, செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ, உஞ்சிவர் போய் விடின் நாய்க்குகனென்றெனையோதாரோ?

ஆழநெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ? வேழநெடும் படை கண்டு விலங்கிடும் வில்லாளோ? தோழமையென்றவர் சொல்லிய சொல்லொரு சொல் லன்றோ? ஏழைமை வேடனிறந்திலனென்றெனை யேசாரோ?" என்றுபாடின பல செய்யுள்கள் அற்புதமானவை. மேலே விபீஷணாழ்வான் பெருமாளை அடைக்கலம் புகுமிடத்து ஸுக்ரீவ மஹாராஜாதிகள் தடை செய்ததும் 'இதனால் பெருமாளுக்கு என்ன கெடுதி நேரிடுமோ!" என்று அஸ்தாநே பயசங்கையினால்தான் என்பதைக் கம்பர், பெருமாள்திருவாக்காலே வெளியிடுகிறார் (அடைக்கலப் படலத்தில்—120.) "ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம் ஈதலே கடப்பா டென்பது. இயம்பினீரென்பால் வைத்த காதலான் ....... ....... .. ... ... ..." என்பது கம்பர் செய்யுள். ஸுக்ரீவாதிகள் விபீஷணனை யங்கீகரிப்பதில் ஆக்ஷேபங்கொண் டது அவர்களுக்குத் தன்னிடத்திலுள்ள பேரன்பினால் என்று இராமபிரான் கூறுவது இங்குக் காணத்தக்கது. இதுதான் மங்களாசாஸனமூலமான அஸ்தாநே பயசங்கை

## பெரியவுடையார் திருநாமப் பெருமை

பல்லாண்டு, போற்றி என்பவை மங்களாசாஸந த்யோதகங்களான சப்தங்க ளத்தனை, அதற்கு மூலம் அஸ்தாநேபயசங்கை. அஃது உண்மையில் தோன்றுவது அன்பின் கனத்தினால். இளையபெருமாளுடன் பிராட்டியைத் தேடிக்கொண்டு வாராநின்ற பெருமாளைக்கண்ட ஜடாயுமஹாராஜர்க்கு 'இவர் உயிர்தரித்திருப்பது அரிதுபோலும்!' என்று அதிசங்கையுண்டாகவேதான் அவர்வாக்கில் ஆயுஷ்மந் ! என் கிற மங்களாசாஸன வாசகம் அவதரித்தது. [*யாமோஷதிமிவாயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே *] இலங்கையில் பிராட்டியைக்கண்ட திருவடி *துஷ்கரம் க்ருதவாந் ராமஃ ......தாரயத்யாத்மநோ தேஹம்* என்னும்படியான நிலைமையைப் பெரு மாள் அடைந்திருக்கச்செய்தேயும் தேஹதாரணம் பண்ணியிருந்தது ஜடாயுமஹா ராஜருடைய [ஆயுஷ்மந்! என்கிற] மங்களாசாஸனபலத்தாலத்தனை யென்று நம் முதலிகள் நிர்வஹிப்பது. ஆனதுபற்றியே அவர்க்குப் பெரியவுடையா ரென்று ஸம்ப்ர தாயத்தில் வ்யபதேசமாயிற்று. ஆழ்வார்களில் பட்டர்பிரானுக்குப் பெரியாழ்வா ரென்கிற வ்யபதேசமும் பொங்கும்பரிவாலேயாயிற்று. வேறுகாரணமுரைப்பது ஸம்ப்ரதாயச்சுவடறியாமை. அதுவும் ஒரு காரணமாயிருக்கலா மென்னவும் தகாது.

## ஆழ்வார்களின் பெருமை விளக்கம்

இனி "ஆழ்வார் அவதார ரஹஸ்யம்" என்ற பகுதியை விமர்சிப்போம் ஸ்ரீமதாண்ட வன் அநுக்ரஹம்பெற்றுச் சிலவாண்டுகளாக நடந்துவரும் ஸ்ரீ ரங்கநாத பாதுகா பத்ரிகையில் ப்லவங்கஹு ஆடி மீ ஸஞ்சிகையில் "கலியைக் கடிந்திடும் கவிதார்க்கிக சிங்கம்" என்றொரு வியாஸம் வெளிவந்ததில் அதர்க்கணமாக எழுதியிருந்தவற்றை வேரோடே களைந்து நாமெழுதிய மறுப்புரை "ஆண்டவன் பத்திரிகைக்கு அருமையான விடை யளிப்பு" என்னும் மகுடம் புனைந்தது ஸ்ரீ ராமாநுஜன் 224-ல் வெளிவந்துளது; அதில் (பக்கம் 31ல்) "ஆழ்வார்களின் பெருமையைப் பற்றின உண்மை" என்னுங் கட்டுரையுள்ளது. அதில் நாம் உதாஹரித்த குருபரம்பராஸாராதி வாக்யங்களை ததுபஜ்ஞமாகவே தெரிந்துகொண்ட விவர் தமக்குக் கிடைத்திருக்கும் விருதுக்குத் தக்கபடி யெழுதிப் போருகிறார். *மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்து* என்றருளிச்

செய்த ஆழ்வார் தாமே அந்யாபதேசப் பேச்சில் *அடியார் நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நும் நிலையிடமே* என்றும், *பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்* என்று மருளிச்செய்துள்ளார். ஆசார்ய ஹ்ருதயத்தில் 'அத்ரிஜமதக்நி பங்க்திரத வஸுநந்தஸூநுவானவனுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ! வ்யாஸாதிவத் ஆவேசமோ மூதுவர் கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ! முன்னம் நோற்ற அனந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோ! என்று சங்கிப்பர்கள்'' என்கிற சூர்ணையின் மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் ஸேவித்துத் தெளிவது,

## ஸ்ரீமதாண்டவனுக்களித்த அந்த வியாஸத்தின் அநுவாதம்

ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு குருபரம்பரா ஸாரமென்னும் ரஹஸ்யத்தில் 'பராங்குச பரகாலாதி ரூபத்தாலே அபிநவமாகவொரு தசாவதாரம் பண்ணி'' என்றருளிச் செய்தவுடனே அதே ரஹஸ்யத்தில் நாராயணன் தானே அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே அநேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினன் என்று மருளிச் செய்தவுடனே—''இத்தைக் கணிசித்து *கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:, க்வசித் க்வசிந் மஹாபாகா த்ரமிடேஷு ச பூரிச;, தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ* என்று மஹர்ஷியருளிச்செய்தான்'' என்று தலைக்கட்டியுள்ளார். இந்த மஹர்ஷி வசனம் ஸ்ரீ பாகவதத்தில் ஏகாதசஸ்கந்தத்திலுள்ளது அங்கு உபக்ரமமென்னவென்றால் *க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம்* என்றிருப்பதைக் கட்கூடாகக் காணலாம். இதன் பொருள் தெரியுமோ? க்ருதத்ரேதா த்வாபரயுகங்களில் பிறந்திருந்த மஹான்கள் தேஹாவஸாநத்தில் வைகுண்டலோகம் சென்று சேர்ந்திடாமல் 'நாம் கலியுகத்தில் பிறக்கவேணும்' என்னுமபிஸந்தி கொண்டிருந்து மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்துகொண்டே வந்து அப்படியே தாம்ரபர்ணீ முதலான நதிகளின் தீரத்திலே ஆழ்வார்களாக அவதரித்தார்கள் என்பதாம். இதை முதன் முதலாக ஆசார்ய ஹ்ருதய திவ்யக்ரந்தமே எடுத்துக் காட்டிற்று. அதை ஸேவித்தே நிகமாந்தகுரு பணித்தருளினர். அதில் ''மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற் கடற் சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே'' என்றருளிய சூர்ணிகையைக் கொண்டே மேலே சொன்ன குருபரம்பரா ஸாரத்தில் ''மேகங்கள் ஸமுத்ர ஜலத்தை வாங்கி ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக உமிழுமாபோலே'' என்ற பங்க்தியைப் பணித்தார். மேலும் அதிலேயே ''தமிழ்மா முனிதிக்குசரண்யமென்றவர்களாலே *க்வசித்க்வசித்தென்றிவராவிர்ப்பாவம் கலியுங் கெடும்போலேஸூசிதம்'' என்ற சூர்ணையைக்கொண்டே ''அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே'' இத்யாதி (மேலே காட்டின) பங்க்தியைப்பணித்தார் நிகமாந்த மஹா குரு அதிலேயே ''அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸு நந்தஸூநுவானவனுடைய யுக வர்ணக்ரமாவதாரமோ!'' என்கிற சூர்ணையில் பகவதவதாரமோ என்று உல்லேகித்திருந்தபடியைப் பின்பற்றியே ''அபிநவமாக ஒரு தசாவதாரம் பண்ணி'' என்று மேலே காட்டின குருபரம்பராஸார ஸூக்தி தோன்றியது. பெரியவாச்சான் பிள்ளை பிள்ளைலோகாசாரியர் (அவருடைய திருத்தம்பியாரான) அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் என்னுமிந்த ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளில் ஸுபிக்ஷமாக விளைந்

துள்ள அர்த்தரத்னங்களேயே நிகமாந்தகுரு நிதியாகக்கொண்டு பலவும் பணித்தருளினர். அகாண்டமாத்ஸர்யத்தாலே அந்த ஸ்ரீஸூக்திகளில் கண்செலுத்த மாட்டாதவர்களுக்கு மூலம் தெரியாமையாலே "நம் நிகமாந்தகுரு பணித்தார்; நம் தேசிகன் ஸாதித்தார்" என்று கண்ணீர் பெருக்கவேண்டியதாகிறது. அடியேனுடைய நூல்களைப் பூர்த்தியாக அநுபவிக்குமவர்களுக்கு நிலமல்லாததொன்றுமில்லை.

இவ்விஷயத்தை உபஸம்ஹரிக்கிறேன். "இத்தைக் கணிசித்து மஹர்ஷியருளிச்செய்தான்" என்று குருபரம்பராஸாரத்தில் உதாஹரித்தவதில் *க்ருதாதிஷு நரா ராஜந் கலாவிச்சந்தி ஸம்பவம்* என்பதனுல் ஆழ்வார்கள் முந்தின யுகங்களிலிருந்து மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்துகொண்டே வந்தவர்களென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஆழ்வாரும் இதைக் காட்டினபடியாகவே *மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து* என்று தம் திருவாக்காலருளிச் செய்தார். இதை நைச்யாநுஸந்தான கோடியில் சேர்த்திடாமல் ஸத்கீர்த்தனமாகவேகொண்டு திருக்குருகைப் பிரான் பிள்ளான் வியாக்கியானம் செய்தருளினர்.

### அபசூத்ராதிகரணந்யாய ஸஞ்சார தத்வம்

"நம்பிள்ளைதாமே ஆழ்வார் விஷயத்தில் அபசூத்ராதிகரணந்யாயத்தை ஸஞ்சாரம் செய்தருளுகிருர்" என்றதும் வேதாந்தத்தில் தெளிவில்லாமை. சாரீரகத்தில் 1-3 பாதத்திலுள்ளது அபசூத்ராதிகரணம். அங்கு உபதேசித்தவர் ரைக்வர்; உபதேசம் கேட்டவர் ஜாநச்ருதி. உபதேசித்தவரைப் பற்றி அங்கு விசாரமில்லை. உபதேசங்கேட்ட ஜாநச்ருதி உபதேசத்திற்கு அநர்ஹஜாதீயரென்று தோன்றுவதால் அவர்க்கு உபதேசிக்கலாமா என்று சங்கித்து அவர் க்ஷத்ரியரென்று முடிவு செய்யப்பட்டது. (ஸ்ரீராமாநுஜன் 230ல் விளக்கங் காண்க.) ஆக இவ்வதிகரணம் உபதேச்யரைப்பற்றி யெழுந்ததுபோல நம்பிள்ளை ஸ்ரீஸூக்தியும் உபதேச்ய விஷயகமாகவே அவதரித்துள்ளது. உபதேசம் கேட்பவர்கள் நியமேந வேதாதிகாரிகளல்லரே ...... இதெல்லாம் நாம் பலகாலெழுதித் தெளிவித்த விஷயங்கள்.

இவர் போல்வார்க்கு மௌனமே தஞ்சம்—உத்யானபத்ரிகை 3—9. பக்கம் 155ல் "பக்திஸார:—திருமழிசை யாழ்வார்" என மகுடமிட்டு எழுதிவருகையில் இவ்வாழ்வார் ஸாதித்த பிரபந்தங்களிரண்டில் நான்முகன் திருவந்தாதி (96) பாசுரங்கள் கொண்டதென்றும், திருச்சந்த விருத்தம் (126) பாசுரங்கள் கொண்டதென்றும் [ஷட்விம்சதிசத காதாரூப:] எழுதியுள்ளது. இப்பத்திராதிபரை நேரில் சந்தித்த ஒரு பெரியவர் "திருச்சந்த விருத்தத்தில் 120 பாசுரங்களே உலகமெல்லாம் ஓதிவருகிறது; தேவரீர் அதிகப்படியாக ஆறு பாசுரங்கள் எழுதியிருப்பது எப்படி? என்று கேட்க, அப்பத்ராதிபர் சிறிதும் மயங்காமல் "நான்முகன் திருவந்தாதித் தனியன், ஒரு பாட்டும் திருச்சந்தவிருத்தத் தனியன்கள் இரண்டு பாட்டும் *தையில் மிக மின்று* மன்னு திருமழிசை* என்கிற இரண்டு பாசுரங்களும், இயற்சாத்தில் *மழிசையர் கோனென்றுவரும் *ஊதிதொறு மூழிதொறும்* என்கிற பாட்டுமாக ஆறு சேர்ந்து 126 அல்லவா என்ருராம். இமௌ உபௌ ஜ்யேஷ்டகநிஷ்டௌ.

## "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ."

இந்த சிந்தாமணியில் நாம் முக்கியமாகக் கொண்ட பெரியார் பகுதியில் இப்பக்கமும் அடுத்த பக்கமும் திலகமாக விளங்குமவை யென்று மிகமகிழ்ச்சியுடன் விஜ்ஞாபிக்கிறேன். *தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கந் திருப்பதி* என்று குலாவப்பட்டு, *திருவாளனினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற தலமான திருவரங்கமேயன்றோ ஸகல திவ்ய தேசங்களினுள்ளும் தலை சிறந்து விளங்குமது, இத்தலத்திற்கு, ஆழ்வார்கள் பதின்மரும்பாடிய தென்கிற ஏற்றம்தவிர, ஆசாரியர்களனைவரும் படுகாடுகிடந்த விடமென்பதன்றோ பெரிய ஏற்றமாகப் பொலிகின்றது. இங்கு ஆளவந்தார் தொடங்கின ப்ரவசன கோஷ்டி நம்பிள்ளை காலத்தில் ஓங்கி· மணவாளமாமுனிகள் காலத்தில் மிகவோங்கி வளர்ந்து, வாழையடி வாழையாய் இன்றளவும் தழைத்து வாராநின்றது. இங்கே ஸேவைஸாதிக்கின்ற ஸ்ரீமதுபயவே வித்வான் இளையவில்லி சடகோபாசாரிய ஸ்வாமி, *நல்லார் நவில் குருகூரிலிருந்து *நல்லார்கள் வாழும் நளிரரங்கத்தே வந்து சேர்ந்தது. மணவாளமாமுனிகள் திருக்குருகூரைவிட்டுத் திருவரங்கத்தேற வெழுந்தருளினதை நினைவூட்டாநின்றது.



— ஸ்ரீஸூக்தி ரத்நகரஸ்வாமி. —

பலவாண்டுகட்கு முன்பே ஸ்வாமியின் ப்ரவசனங்களைக் கேட்டவடியேன் ஸ்வாமிக்கு ஸ்ரீஸூக்திரத்நாகரரென்று விருதுசாத்தினேன். அந்த விருது மிகப் பொருத்தமானதென்று உலகமெல்லாம் உணர்ந்து மகிழும்படி ஸ்வாமியின் பிரவசனங்கள் கோயிலிலும் திருச்சியிலும் மற்றும்பல விடங்களிலும் தழைத்தோங்குவதற்கு நித்ய ஸ்ரீர்நித்ய மங்களம்.

# ஸ்ரீவைஷ்ணவ சிந்தாமணி-பெரியார் பகுதி.

ஸ்ரீமதுபயவே. திருநாங்கூர் பிரதிவாதி பயங்கரம், வித்வான் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியும், ஸ்ரீமதுபய்வே. திருமலை அனந்தாண்பிள்ளை. வித்வான் சதாபிஷேக கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியும் இங்கே ஸேவை ஸாதிப்பவர்கள்.



ஞான முத்திரையோடு வீற்றிருப்பவர் திருநாங்கூர் ஸ்வாமி. ஆபத்தபாணியாய் நிற்பவர் சதாபிஷேகம் ஸ்வாமி. இவ்விரு வித்வான்களும் திருவரங்கம் பெரிய கோயிலில் உபய வேதாந்த ப்ரவசனம் செய்து போருமவர்கள். இருவரும் ஸ்ரீ வைஷ்ணவ சிஷ்ய ஸம்பத்து மலிந்தவர்கள். சதாபிஷேகம் ஸ்வாமி பல ஸம்வத்ஸரங்களாகவே கோயிலில் பல விடங்களில் பிரவசனங்கள் செய்து போருமவர். அவருடைய காலக்ஷேப கோஷ்டியும் ஏற்கெனவே ஸ்ரீ ராமாநுஜனில் வெளிவந்துள்ளது. திருநாங்கூர் ஸ்வாமி நியாய வேதாந்தங்களில் பரிபூர்ண ப்ரஜ்ஞராய் நெடுங்காலம் குஜராத் ப்ராந்தத்தில் வடதால் என்னுமிடத்தில் சாஸ்த்ர ப்ரவசனம் செய்து பலரை உத்தீர்ணராக்கி, தற்காலம் ஒரு ஸம்வத்ஸரகாலமாய் கோயிலில் கீர்த்தி மூர்த்தியான சிங்கமையங்கார் ஸ்வாமியின் தென்ஞசார்ய ஸம்பிரதாய பாடசாலையில் ஸ்ரீ பாஷ்யாதி ப்ரவசனம் செய்து போருகின்றார். இவ்விரு வித்வான்களும் பொலிக பொலிக பொலிக. ஸ்ரீரங்கஸ்ரீச்ச வர்த்ததாம் ... *

ஸ்ரீ:

# மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு மஹோத்ஸவ

ஸம்பந்தமான

# வெளியீடுகள்.

நடைபெறுவது ஸெளம்ய வருடம். அடுத்தது ஸாதாரண ஸம்வத்ஸரம். எனினும் அஸாதாரண ஸம்வத்ஸரமே. அதுதன்னில் ஐப்பசித் திருமூல மஹோத்ஸவம் ஸகல திவ்யதேசங்களிலும் விசேஷவைபவம் பொலிய நடைபெறுவது தவிர, க்ரந்தரத்ன ப்ரகாசனங்கள் விசேஷமாக நடைபெறு மென்பதைச் சிலமாதங்கள் முன்னமே [ஸ்ரீராமாநுஜன் 243ல்] வெளியிட்டிருப்பது அன்பர்கட்கு நினைவிருக்கும். இங்கே ஸேவை ஸாதித்தருளும் ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் நியமனத்தை யடியொற்றித் தொடங்கப்பட்ட க்ரந்தரத்னமுத்ரணங்கள் நான்குமாத காலமாக இடையறாமல் விரைவாக நடந்துவருகின்றன. பகவத் ராமாநுஜ க்ரந்தமாலை தேவநாகரலிபியிலும், தெலுங்குலிபியிலும் முத்ரணமாகி வருகிறது. இந்த க்ரந்தமாலை முன்பு ஒரே ஸம்புடமாக வெளியிடப்பட்டது. இப்போது, வேதார்த்த ஸங்க்ரஹம் கீதாபாஷ்யம். கத்யத்ரயம் நித்யம்—இவை ஒரு ஸம்புடமாகவும், ஸ்ரீ பாஷ்ய தீப ஸாரங்கள் மற்றொரு ஸம்புடமாகவும் வெளியிடப்படுகின்றன. எல்லாம் சேர்ந்துஒரேஸம்புடமாகவும் கிடைக்கும். அநேகமாக நிகழும் 1969 முடிவுக்குள்ளாகவே சில ஸம்புடங்கள் வெளிவரும். ... .... .... *



# திருவல்லிக்கேணியில் திருமணச் சிறப்பு.

சென்னையில் வாழும் ஆஸ்திக பாகவதோத்தமர்களில் ஒருவராய், நமது அன்புக்கு இலக்கானவர்களில் தலைவருமான ஸ்ரீமான் பக்தமணி A. V. கன்னைய நாயுடு வென்பவரை ஸ்ரீ வைஷ்ணவவுலகம் நன்கறியும். ஸ்ரீபெரும்பூதூரில் புஷ்பால. கன்னைய நாயுடு அவர்களின் சாரிடிக்குத் தலைவராய் அவ்விடத்தில் மிகச்சிறந்த கைங்கரியங்களைச் செய்து வருபவராய், ஸ்ரீ காஞ்சீபுரியில் ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதியில் நடைபெற்றுவரும் தையில் மகவுத்ஸவத்தைப் பத்தெட்டு வருஷங்களாக வெகுசிறப்பாய் (தமது சொந்த வுபயமாக) நடத்தி வருபவராய், சென்னை ஸத் காலக்ஷேப ஸபையின் ஜாயிண்டு ஸெகிரிடெரியாக விளங்குபவரான இந்த பக்தமணியை



நமது ஸ்ரீ ராமாநுஜன் பலகால் ப்ரஸ்தாவித்திருப்பதை பக்தர்கள் மறந்திரார்கள். இவருடைய செல்வப் புதல்வியான திருவளர்செல்வி வைஜயந்திமாலாவுக்கு நேற்று வைகாசிமீ 9உ (22-5-'69) புஷ்ய நக்ஷத்திரம் வியாழக்கிழமையன்று திருவல்லிக்கேணியில் ஸ்ரீ பார்த்தஸாரதி யெம்பெருமான் திவ்ய விமானச் சாயையில் பக்தபாகவதோத்தமர்களின் மங்கலவாழ்த்துகள்மலிய வாழ்க்கைத் துணைவனோடு திருமணம் வெகுசிறப்பாக நடைபெற்றது.



* நல்லபதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர்மக்களே.*

—

# சென்னையில் சங்கரஷண்மத கான்பரென்ஸ்.

சென்னைமாநகரில் வீனஸ் காலனியென்னும் பகுதியில் 1—6—69 முதலாக 9—6—69 வரையில் நாடோறும் நடைபெற்ற சங்கரஷண்மதஸமாஜத்தைப்பற்றிப் பெரும்பாலும் தினசரி பத்ரிகைகளில் செய்திகள் வெளிவந்திருப்பதால் உலக மெல்லாம் அறிந்திருக்கும். 8—6—69 ஞாயிற்றுக்கிழமை யன்று மாலை 6-மணி முதலாக நடந்த ஸமாஜத்தில் நாம் தலைமை தாங்கும் வகையில் கலந்து கொள்ள நேர்ந்தது. அன்று ஸ்ரீராமர் தினம் என்று பெயரிடப் பெற்றிருந்தது. இராம பிரானுடைய பெருமைகளைப் பற்றிப் பேசவேணுமென்பது குறிக்கோள். ஆயினும் நம்முடைய பேச்சில், ஷண்மதங்களைப் பற்றிப் பாதிபாகமும் இராமபிரானைப் பற்றிப் பாதிபாகமுமாக விளக்கம் தர நேர்ந்தது. இவ்விரண்டு பகுதியிலும் நாம் பேசியதை ஸாரஸம்க்ஷேபமாக இங்கு வெளியிடுகிறோம்.

சங்கர பகவத்பாதர்களின் காலத்திற்கு முன்பும், அவரது ஸமகாலத்திலும் பிற்காலத்திலும் வட மொழியில் ஷண்மத மென்றும், தென் மொழியில் அறுசமய மென்றும் பெரும்பான்மையான வழக்குக்களை நூல்களிற் காண்கிறோம். அந்த ஷண்மதங்கள் எவை யென்பதைப்பற்றி அடுத்தபடியாக விளக்கம் தருவோம்.

மதம் என்பது வடசொல் இதற்கு எண்ணம் என்று பொருள். உலகில் ஒவ்வொருவற்கும் எத்தனையோ எண்ணங்கள் க்ஷணந்தோறும் உண்டாவதுண்டு. ஆனால் அவற்றுக்கெல்லாம் மதமென்று பெயர் கிடையாது. ஒரு பெரிய கூட்டத் தாரால் குலாவப்படும் ஸங்கேதமான கொள்கையே மதமெனப்படும். இந்த மதங் கள் பொதுவாக இருவகைப்படும்—வைதிக மதங்களென்றும் வேதபாஹ்ய மதங்க ளென்றும். வேதத்தைப் பிரமாணமாக வொப்புக்கொண்டு ப்ரவ்ருத்தங்களான மதங்கள் வைதிகமத மெனப்படும். அங்ஙனல்லாதவை பாஹ்யமத மெனப்படும். இங்கு நம்மாழ்வாருடைய ஒரு பாசுரத்தை விவரிக்கக் கேண்மின். அவர் திரு விருத்தமெனும் தமது முதற் பிரபந்தத்தில் (பா. 96).

''வணங்குந்துறைகள் பலபலவாக்கி, மதிவிகற்பால்
பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி, அவையவைதோறு
அணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்
இணங்குநின்னோரையில்லாய் நின்கண்வேட்கையெழுவிப்பனே''.

என்னும் பாசுரத்தை வெகு அற்புதமாக அருளிச்செய்துள்ளார். இப் பாட்டின் ஸாரமான கருத்து யாதெனில்; எம்பெருமானை நோக்கி ஆழ்வார் விண்ணப்பம் செய்கிறார்—ஒப்பற்ற பெருமானே! ஸர்வேச்வரனாகிய நீ ரஜோகுண தமோகுணங் கள் மலிந்த நபர்கள் கருமகதியால் உன்னை வந்தடையாதபடி பலபல தெய்வங் களையும் பலபல மதக்கோட்பாடுகளையும் பலபல உபாசனை வகைகளையும் காட்டிக் கொடுத்துவைத்தாய்; உன்னை நேராக அடைந்து உஜ்ஜீவிப்பதற்கு இடையூறான அந்தந்த வெளிவழிகளிலே யான் இறங்கி விலகிப்போகாதபடி அவற்றிற்கெல்லாம் மூலமான உனது ஸ்வரூபத்தை யறிந்து உன்னிடத்திலே அன்பை மிகுதியாகச் செய்வதோடு பிறரும் உன் பக்கலில் ப்ரவணர்களாம்படி செய்வேன் — என்று.

மூலத்தின் மேலும் விவரிப்போம். [வணங்குந் துறைகள் பலபலவாக்கி] கர்மயோகமென்றும் ஞானயோகமென்றும் பக்தியோகமென்றும் இப்படி பலவகைப்பட்ட உபாயங்களைக் காட்டிவைத்து. [மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி] ஆம் என்றால் அல்ல என்பதும்; அல்ல என்றால் ஆம் என்பதுமான சமயச் சண்டைகள் மதிவிகற்பால் பிணங்குதலாம். திருவள்ளுவமாலையில் (9.) * ஒன்றே பொருளெனின் வேறென்ப, வேறெனின் அன்றென்ப ஆறுசமயத்தார் * என்றது இங்கு நினைக்கத்தக்கது. இப்படி பிணங்குகின்ற மதங்கள் பலவற்றையும் உண்டாக்கி வைத்தவன் எம்பெருமானே யன்றோ ? [அவையவைதோறு அணங்கும் பலபலவாக்கி] ஒவ்வொரு மதத்திலும் அம்மனென்றும் பிடாரியென்றும் சாத்தனென்றும் கூத்தனென்றும் பலவகைப்பட்ட தெய்வங்களை ஆராதனைக்கு உரியனவாக நாட்டி- [நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்] * ஸ ஆத்மா; அங்காநி அந்யா தேவதா: * என்ற தைத்திரீய உபநிஷத்தின்படியே அனைத்துக்கும் எம்பெருமானே அந்தராத்மாவாதலால் அவையெல்லாம் எம்பெருமானுக்கு உறுப்பா யிருப்பனவென்பது காட்டப்பட்டதாயிற்று.

திருவாய்மொழியிலும் (3-1-4) *மாட்டாதேயாகிலுமென்று தொடங்கும் பாசுரத்தில் [நின் திருவுருவம் மனம் வைக்கமாட்டாத பல சமயமதி கொடுத்தாய்] என்கிறார்—உன் திருமேனியிலே யீடுபடுவதற்கு இடையூறாக ஒன்றோடொன்று சேராத பாஹ்ய ஸமய மதிபேதங்களை யுண்டாக்கிவைத்தாய் என்றபடி. மேலே ஐந்தாவது பத்திலும் (2-4) * இடங்கொள் சமயத்தை யெல்லாம் எடுத்துக் களைவனபோலே * என்றதும் குறிக்கொள்ளத்தக்கது.

இத்தகைய மதங்கள் பலபல விருப்பினும் ஆறு என்கிற கணக்கிலடக்கிப் பேசியுள்ளார்கள் மேலையார்கள். * பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளியுரைத்த * என்பது நம்மாழ்வார் திருவாக்கு. * அறுவகைச் சமயமும் அறிவருநிலையினை * (திருவெழுகூற்றிருக்கை) என்பது திருமங்கை யாழ்வார் திருவாக்கு. பிற்பட்ட காலத்தில் (அதாவது ஸ்ரீராமாநுஜருடைய காலத்தில்) ஷண்மதங்களையும் கண்டித்தொழித்தவர் என்பதே ஸ்ரீ ராமாநுஜர்க்கு ஏற்றமாகப் பலவிடங்களிலும் கூறப்பட்டுள்ளது. அவரைப்பற்றின துதி நூலாகிய நூற்றந்தாதியில் * ஆனது செம்மையறநெறி, பொய்ம்மையறுசமயம் போனது பொன்றி இறந்தது வெங்கலி — இராமானுசனித்தலத் துதித்தே * என்றும் * பார்த்தான் அறுசமயங்கள் பதைப்ப.......எம்மிராமாநுசன் செய்யு மற்புதமே * என்றும், * அறுசமயச் செடியைத் தொடரும் மருள்செறிந்தோர் சிதைந்தோட வந்து இப்படியைத் தொடரு மிராமானுசா மிக்க பண்டிதனே * என்றும் உள்ள பாசுரங்கள் முக்கியமாக நோக்கத்தக்கன. * சாறுவாக மதநீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக் கிறிமுறித்திட, மாறு செய்திடு கணுதவாதியர்கள் வாய் தகர்த்து அறமிகுத்து மேல்வந்த பாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த எதிராசனார் * என்றும் * அறுசமயச்செடியதனை யடியறுத்தான் வாழியே * என்றும் திருவாய் மலர்ந்தருளினர் மணவாளமாமுனிகள்.
“[illegible]

[illegible] - [காதா தாதாகதாநாம் கலதி கமநிகா காபிலீ க்வாபி லீநா க்ஷீணா காணாதவாணீ த்ருஹிணஹரகிரஸ் ஸௌரபம் நாரபந்தே]" "[illegible] - [கபர்த்திமதகர்த்தமம் கபிலகல்பநாவாகுராம் துரத்யயமதீத்ய தத் த்ருஹிணதந்த்ரயந்த்ரோதரம்]" இத்யாதிகள் ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு பணித்தவை. இவையெல்லாம் ஒருபுறமிருக்க;

சாரீரகமீமாம்ஸையில் [அதாவது வியாஸருடையதான ப்ரஹ்மஸூத்ரத்தில்] இரண்டாமத்யாயத்தின் தொடக்கமான ஸ்மிருத்யதிகரணத்தில் கபிலமத கண்டனமும், அதற்கடுத்த அதிகரணத்தில் ஹிரண்ய கர்ப்பமதகண்டனமும், மேலே சிஷ்டாபரிக்ரஹாதிகரணத்தில் பாஹ்ய (ஷட்)ஸமயங்களின் கண்டனமும் காட்டப்பட்டிருப்பதைக் காணலாம். இதெல்லாம் சங்கரபகவத் பாதர்களுக்கும் உடன்பாடேயென்னத் தட்டில்லை. *[illegible] – யத் வை கிஞ்ச மநு: அவதத் தத் பேஷஜம்* என்று வேதமும் கொண்டாடின மநு மஹர்ஷியானவர் *[illegible] — யா வேதபாஹ்யாஸ் ஸ்ம்ருதயோ யாச்ச காச்ச குத்ருஷ்டய:, தாஸ் ஸர்வா நிஷ்ப்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டா ஹி தா: ஸ்ம்ருதா:* என்று கல்வெட்டாகக் கூறினது பாஹ்யஷட்ஸமயங்களைப் பற்றியே யென்று முன்னோர்கள் வியாக்கியானித்துள்ளார்கள். அந்த ஆறுஸமயங்களை *சாக்யோலூக்யாக்ஷபாத க்ஷபண கபில பதஞ்ஜலி 'மதங்களென்று பலரும் குறிப்பிட்டுள்ளார்கள். பரமவைதிக ஸார்வ பௌமர்களால் அடியறுக்கப்பட்ட இத்த ஷண்மதங்களை மஹாவைதிகோத்தமரான சங்கரபகவத்பாதர் ஸ்தாபித்ததாகச் சொல்லுவதற்கு ஔசித்யமில்லை. அவர்தாம் ஆதரித்த அத்வைதமதத்திற்குச் சார்பாக வேறு வைதிக ஷண்மதங்கள் அவரால் ஸ்தாபிக்கத்தக்கனவா யிருந்ததாக அற்பமதிகளான நமக்குப் புலப்பட வில்லை.

தேவதா ஸார்வபௌம நிஷ்கர்ஷத்தில் சங்கர பகவத்பாதர்களுக்கு ஈடானவர்கள் எவருமிலர். ப்ரஹ்மஸூத்ர பாஷ்யம், பகவத்கீதா பாஷ்யம், ஸஹஸ்ரநாம பாஷ்யம் — ஆகிய இவற்றில் அப்பேராசிரியர் பரதேவதா நிஷ்கர்ஷம் பண்ணியிருக்கிறபடியை விளக்குவோம் சிறிது.

[அன்று ஸபையில் நுட்பமாகக் காட்டப்பட்டவிது இங்கு விளக்கப்படுகின்றது.]

* பாஞ்சராத்ராகம ப்ராமாண்யாதிகரணத்தில். * உத்பத்த்யஸம்பவாத் * என்கிற ஸூத்ர பாஷ்யத்தில் "தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி பாஞ்சராத்ராகம ப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து, அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி. மூன்றுவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார் பகவத்பாதர். தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை;—(இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்). "தத்ர யத் தாவதுச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி, தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய

பகவதோ நாராயணஸ்ய அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ர மநந்ய சித்த தயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே; ச்ருதிஸ்ம்ருத்யோ ரீச்வரப்ரணி தாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பன அவருடைய பாஷ்ய பங்க்திகள். இவற்ருல், ஸ்ரீமந்நாராயணனுக்கே பாரம்ய ப்ரதிஷ்டாபநத்தில் பகவத்பாதர் ஊக்கமுடையவ ரென்பது தேறிற்றென்னுமிடம் மறக்கத் தக்கதன்று. மறுக்கவும் தக்கதன்று.

ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களுள்ள விடங்களில் வாஸுதேவ நாராயணுதி விசேஷ சப்தங்களையிட்டு வியாக்கியானம் செய்யத் தொடங்கினவரும் ஆதிசங்க ரரேயாவர். மேலே யெடுத்துக் காட்டின *உத்பத்த்யஸம்பவாதிகரண பாஷ்ய பங்க்தியில் "பகவதோ நாராயணஸ்ய அபிகமநாதிலக்ஷண மாராதநமஜஸ்ரம்" என்ற விடத்தில் "(அநந்யசித்ததயா)" என்றெழுதப்பட்டுள்ளது; ருத்ராதிகளான அந்யர்களிடத்திலும் சித்தத்தை வைத்துச் செய்யப்படுகிற ஸ்ரீமந்நாராயணுராதநம் அநந்ய சித்தக்ருதமாக எப்படி யாகுமென்பதை ஆலோசிக்கவேணும். நாராயண னைப் பரிவாரத்தோடுங்கூட ஆராதிப்பதும் சிந்திப்பதும் செய்தால் இது அநந்ய சித்தத்வத்திற்கு விரோதமாகுமோ? என்று சிலர் கேட்கக்கூடும். ருத்ராதிகளிடத் தில் ஸ்ரீமந்நாராயண பரிவாரத்வ ப்ரதிபத்தி குறையற்றதாகில் குசலமேயாகும்.

ஆதிசங்கரர் விஷ்ணு பக்தரா? இதர பக்தரா உபயபக்தரா? என்பதை நிர்ண யிக்கவேண்டுவது அவசியமானது. ச்ருதீதிஹாஸ புராணுதி ஸமஸ்த ப்ரமாண விசேஷங்களுள் பகவத்கீதையே முன்னணியில் நிற்கின்ற தென்பதில் யார்க்கும் விவாத மிராது, எம்பெருமான்தானே சோதிவாய் திறந்து பணித்ததென்னத் தக மிக்க சிறப்பன்றே கீதைக்குள்ளது, அப்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே யென்றும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவே யென்றும் இதில் ஸகல வைதிகர்களும் ஏக கண்டர்களே யாவர். இதில் விப்ரதிபத்தி கொண்ட வைதிகர் ஒருவருமிலர், இத் தகைய நூலில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பரத்வமும் தேவதாந்தரங்களின் அவரத்வ மும் அடிக்கடி விளக்கப்பட்டுள்ளது (10-8) * அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே * என்ற விடத்தில் சங்கர பாஷ்யபங்க்தி இது காணீர்;— "அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்க்யம் ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ :—உத்பத்தி:; மத்த ஏவ ஸ்திதிநாசக்ரியாபலோபபோக லக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே" இத்யாதி. மூலத்தில் நாராயணபதமோ விஷ்ணுபதமோ காணப் படாத விடங்களிலெல்லாம் நியமேந விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களை யிட்டே பாஷ்யமியற்றுகிருர் ஆதிசங்கராசாரியர் என்பது வ்யபிசரியாத விஷயம்.

* அநந்யாச் சிந்தயந்தோ மாம் * (9-22) என்ற விடத்தில் * பரம் தேவம் நாராயணம்...பர்யுபாஸதே—தேஷாம் பரமார்த்த தர்சிநாம் * என்று பாஷ்யமிட் டிருக்கின்ற சங்கராசாரியர் பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்கள் யாவரோ அவர்களே உண்மை யறிவாளிகள் என்று காட்டினுராகிருர். ஸ்ரீ மஹா விஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டு என்கிற வாதத்தை ஸஹிப்பவ ரல்லர் அவர். ஸ்ரீமந்நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை. (7-20) *காமை ஸ்தை ஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா:* என்று தொடங்கிச் சொல்லி வரு கையில் * அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் * என்று தலைக்

கட்டப்பட்டுள்ளது. இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தின் முடிவில் சங்கராசாரியர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்க வைக்கின்றது. அவ்விடத்திலுள்ள வாக்கியமிது காணீர்; *ஏவம் ஸமாநேபி ஆயா மாமேவ ந ப்ரபத்யந்தே அனந்தபலாய; அஹோ கலு கஷ்டதரம் வர்த் இத்யநுக்ரோசம் தர்சயதி பகவான்* என்று. ஸ்ரீமந்நாராயணனை பஜி களுக்கே அநந்தாக்ஷயபலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று அறிந் களுங்கூட க்ஷுத்ர பலன்களை விரும்பி தேவதாந்தரபஜனம் செய்கிறார் என்று பகவான் தானே கண்ணீர் விட்டழுது கதறுவதாக ஸாக்ஷாத்க தாமும் கண்ணீர்விட்டன்றோ சங்கராசாரியர் இதை யெழுதியுள்ளார்.

பகவத் கீதை ஆறுமத்யாயத்தில் முடிவான சுலோகமிது — * யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா, ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:* என்பது. இங்கு சங்கர பாஷ்ய பங்க்தி வருமாறு — *யோகிநாமபி ஸர்வேஷாம் ருத்ராதி த்யானபராணாம். மத்கதேந-மயிவாஸுதேவே ஸமாஹிதேந அந்தராத்மநா-அந்த:கரணேந, ச்ரத்தாவாந்-ச்ரத்ததாநஸ் ஸந், பஜதே-ஸேவதே யோ மாம், ஸ மே-மம யுக்ததம: — அதிசயேந யுக்த: மத: — அபிப்ரேத:* என்று, இதற்கு விவரணம் அநபேக்ஷிதம். பக்ஷபாத மற்றவர்கள் நற்றெளிவுபெறுவர்கள்.

ஆதி சங்கராசார்யர் ஸஹஸ்ர நாம பாஷ்யத்திலும் பலபல இதிஹாஸங்களை யெடுத்துக்காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார். விஷ்ணு தாழ்வையோ,தேவதாந்தரத்தின்உயர்வையோஓரிடத்திலும்அவர்காட்டின கேசவநாம பாஷ்யத்தில் * கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத ஈசோஹம் ஸர்வ நாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந்* என்று சொல்லிக் கொண்டே சிவபெருமான் இந்த கேசவ நாமத்தை ஸமர்ப்பித்ததாக ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை உதாஹரித்துள்ளார் பகவத்பாதர். (அர்க்க:) என்னும் திருநாமத்தின் பாஷ்யத்தில் *ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க:* என்று விவரணம் காட்டினர். இங்கு ஆதி சப்தத்தால் முந்துற முன்னம் க்ரஹிக்கக் கூடியவர் பார்வதீபதியல்லவோ? [அமிதாசந:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் ஸம்ஹாரஸமயே விச்வமச்நாதீதி அமிதாசந:" என்று விவரித்தார் பகவத் பாதர். சிவபெருமான் விச்வ பஹிர்ப்பூதனல்லனே. *நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும்* என்கிற திருவாசிரியப் பாசுரமும் இங்கு நினைக்கத் தக்கது. *அத்தா சராசரக்ரஹணாத்* என்கிற ஸூத்ரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்டவனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்ன ப்ரஸக்தி யில்லையே. உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வனென்பது பகவத்பாத ஸித்தாந்தம். *ஸர்வவாகீச்வரேச்வர:* என்கிற நாம பாஷ்யத்திலும் *ஸர்வேஷாம் வாகீச்வராணாம் ப்ரஹ்மாதீநாமபி ஈச்வர:* என்றார் அவர்தாமே.

சங்கர பகவத்பாதர்களின் பாஷ்யாதி ஸூதாநிதியிலிருந்து எடுத்துக் காட்டக்கூடியவை இன்னும் அபரிமிதங்களாகவுண்டு. இங்குக் காட்டினவளவு

போதுமன்றே ? இப்படி தேவதாஸார்வபௌம நிஷ்கர்ஷத்தை நிகரற்ற வகையில் செய்திருக்கின்ற பகவத்பாதர் இந்த ஸித்தாந்தத்திற்குச் சிறிதும் முரண்படாமல் பெரிதும் இணங்கியுள்ள மதங்களை ஸ்தாபனம் செய்தாரென்றால் அது மிகப் பொருந்தும். அந்த மதங்கள் எவையா யிருக்கக்கூடுமென்று ஆராயவேணும். (*)

## —ஸ்ரீ ராமகுணாநுபவம்—

இனி, ஸ்ரீராமர் தினமாகக் குறிப்பிடப்பட்ட இந்த நன்னாளில் நாம் [illegible]விக்கவேண்டிய ஸ்ரீராம குணங்களைச் சிறிது அநுபவிப்போம். ஸ்ரீ ராமா[illegible]த்தை உலகில் ஸாமான்ய ஜனங்கள் கதையில் ருசிகண்டு ஆதரிக்கக் காண்[illegible]ம். உண்மையில் ராமாயணகதைகள் ருசிமிக்கவையே. ஆனாலும், நம் முன்னோர்கள் கதையை முக்கியமாகக் கொள்ளாமல் குணாநுபவத்திற்கு மிக மிக வாய்த்த நூலாகக் கொண்டார்கள் ஸ்ரீ ராமாயணத்தை. ஸ்ரீ ராமாயணத்தின் அவதாரபக்கியை நோக்கினால் இது தெற்றென விளங்கும். வான்மீகி முனிவர் தமது ஆச்ரமத்தை நோக்கிவந்த நாரதமஹர்ஷியைக் கண்டவுடனே * கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம்?* என்று தொடங்கி குணப்ரச்னம் பண்ணுவதும், அதுகேட்ட நாரதர் *பஹவோ துர்லபாச் சைவ யே த்வயா கீர்த்திதா குணா:* என்று சொல்லி விட்டு *முநே! வக்ஷ்யாமி அஹம் புத்த்வா * என்றார். (புத்த்வா வக்ஷ்யாமி என்பதற்கு 'நான் ஆலோசித்துச் சொல்லக்கடவேன்' என்று சில அரஸிகர்கள்கூறும் [illegible]நள் பொருளன்று. (புத்த்வா) என்பதற்கு 'அறிவுபெற்று' என்று பொருள். [illegible]ரே! நீர் ஸ்ரீராமகுணங்களை நினைவூட்டினீராதலால் * காலாழும் நெஞ்சழி[illegible]ண்சுழலும் * என்னும்படி நெஞ்சழிந்து கிடக்கிறேன்; இப்போது வாய்திறந்தொன்று சொல்லகில்லேன்; சற்றுப்பொறுத்திரும்; அறிவு நடையாடினபின்பு [சைதந்யம் வந்தவாறே] சொல்லுகிறேன் என்றவாறு.

* வல்வினையேனை ஈர்கின்ற குணங்களையுடையாய்!* என்று கதறுகின்ற ஆழ்வார்களும், * கோயம் குண: கதரகோடிகத: கியாந் வா கஸ்ய ஸ்துதே: பதம் அஹோ பத! கஸ்யபூமி.* என்று அலமருகின்ற ஆசாரியர்களும் நிற்க. ப்ராசீன கவிகளில் இருவருடைய வாக்கையெடுத்துக் கூறுகின்றேன் கேண்மின்; அநர்க்க ராகவமென்று அந்வர்த்த நாமம் பெற்ற முராரி நாடகத்தில் *யதி க்ஷுண்ணம் பூர்வைரிதி ஜஹதி ராமஸ்ய சரிதம், குணைரேதாவத்பிர் ஜகதி புநரந்யோ ஜயதி க:?* எனப்பட்டது. இதன் கருத்தாவது, ஸ்ரீராமசரிதத்தைப் பல பல முன்னோர்கள் நிபந்தித்திருப்பதனால் நாம் அதைவிட்டு வேறொரு பகவானுடைய கதையைச் சொல்லுவோமே! என்று நினைக்கலாம்; இராமனைப்போன்ற குணக்கடலான வேறு வ்யக்தியிருந்தால் அது செய்யலாம்; இல்லையே என்கை. இதைவிட மேம்பட்ட ரீதியில் ப்ரஸன்ன ராகவத்தில் சொல்லுவது கேளீர்;

"ஸ்வஸூக்தீநாம் பாத்ரம் ரகுதிலகமேகம் கலயதாம்
கவீநாம் கோ தோஷ:? ஸ து குணகணாநாம் அவகுண:
யதேதைர் நிச்சேஷை அபரகுணலுப்தைரிவ ஜகதி
அஸாவேகச் சக்ரே ஸததஸுகஸம்வாஸவஸதி:."

(கருத்து.) கவிகளெல்லாரும் தம்தம் காவியங்களுக்கு ஸ்ரீ ராமபிரானொருவனையே இலக்காகக் கொள்வது கவிகளின் குற்றமல்ல; இராமன் படைத்த திருக்குண களின் குற்றமேயாகும். உலகில் குணமென்று சொல்லப்படுமவையெ திரண்டு ஒரு ஸபை கூட்டி 'நாம் எந்த வ்யக்தியினிடத்தில் போய்ச் சே நமக்கு நன்மையுண்டாகும்?' என்று ஆலோசித்து 'இராமபிரானிடத்தில் சேர்ந்தால்தான் நமக்கு நன்மையுண்டாகும்' என்றறுதியிட்டு, அப்படி பெருமானிடமே சென்று சேர்ந்து இனிதுவாழ்ந்தன - என்பதாம். * கு ஆகரோ மஹாந் * என்னத்தக்க வ்யக்தி இராமனல்லது வேறில்லையென் ஸர்வஜந ஸம்மதமானது.

திருநாட்டில் விலை செல்லமாட்டாத திருக்குணங்களை விலை பெறுத் கொள்வதற்காகவே விபவாவதாரங்கள் அமைந்தன வென்பது "குணபரீவாஹா த்மநாம் ஜந்மநாம்" என்றருளிச் செய்த ஆசாரியர்களின் திருவுள்ளம். விபவாவ தாரங்களுக்குள் ராமாவதாரம் மிகச் சிறந்ததென்பது நிர்விவாதம். ஸஹஸ்ர நாமாத்யாயத்தில் பார்வதீபரமேச்வரஸம்வாதம் ஜகத்ப்ரஸித்தமானது. 'லகுவான உபாய மொன்றினால் பேராயிரமு மோதினதாக ஆகும்படியான விரகு சொல்லும்' என்று பார்வதி பரமேச்வரனைக் கேட்க; "ஸ்ரீ ராம ராம ராமேதி ரமே ராமே மநோ ரமே. ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே!" என்று விடை வெளிவந் துளது. ஆழ்வார்களில் பலசமயங்களிலும் புகுந்து அரிய பெரிய வரலாறுக பலவுமறிந்து, "யானறிந்தவாறு யாரறிவார்?" என்றுரைத்த திருமழிசைப்பி தமது நான்முகன்திருவந்தாதியில் அற்புதமாக வொரு பாசுர மருளிச்செய்க

"கண்டுவணங்கினார்க்கு என்னாங்கொல்? காமனுடல்
கொண்ட தவத்தாற்கு உமையுணர்த்த—வண்டலம்பும்
தாரலங்கல் நீண்முடியான் தன்பெயரே கேட்டிருந்து, அங்
காரலங்க லானமையாலாய்ந்து." (78)

ஒருநாள் பரமசிவன் கண்ணைமூடிக்கொண்டு தியானிப்பதும், கையைமூடிக்கொண்டு ஜபிப்பதுமாயிருக்கையில் அதுகண்ட உமாதேவியானவள் [*கம் த்வம் அர்ச்சயஸே தேவ! கிம் தைவம் அதிகம் தவ?*] என்று கேட்டாள். நாத! எல்லாரும் உம்மை உபாஸியாநிற்க நீர் யாரை யுபாஸிக்கிறீர்? உந்தமக்கும் மேம்பட்ட தெய்வமாக நீர் கொண்டிருக்கும் தெய்வத்தைத் தெரிவிக்கவேணும் என்றாள். பரமசிவன் அப்போது தாரகமந்திரமான ஸ்ரீ ராமநாமத்தை ஜபித்துக் கொண்டிருந்ததனால் 'ராமன்' என்று வாய்விட்டுச்சொல்ல நினைத்தும் *உள்ளெலாமுருகிக் குரல் தழுத் தொழிந்தேன் உடம்பெலாம் கண்ணநீர்சோர* என்னும்படியான நிலைமையை யடைந்து திக்குமுக்கலாடிக்கிடந்தாராம் பரமசிவர்; பரோக்ஷத்தில் ப்ரச்நப்ரதி வசனஸமயத்திற்படும் பாடு இதுவானால் [கண்டுவணங்கினார்க்கு என்னாங்கொல்!] அவ்விராமபிரானை நேராகக் கண்டவர்கள் என்னபாடுபட்டிருப்பார்களோ! என்கி றார் திருமழிசைப்பிரான். நேரில் கண்டவர்கள் பட்டபாடுதன்னை வான்மீகி முனி வர் கூறியுள்ளாரே; *ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்.

தத்ருசுர் விஸ்மிதாகாரா: ராமஸ்ய வநசாரிண:* என்றும், *தே தம் ஸோமமி வாத்யந்தம் த்ருஷ்ட்வா வை தர்மசாரிண:, மங்கலாநி ப்ரயுஞ்ஜாநா:* என்றும் ரன்றே. ”தோள் கண்டார் தோளே கண்டார்* என்றார் கம்பர்.

ஸர்வேச்வரனை ஸ்ரீமந் நாராயணனே தன்னை ஒரு மனிதனாக நடித்துக் இராமாயணத்தைத் தலைக்கட்டியிருக்கிறானென்பது தெரியவருகின்றது. மஹர்ஷியை வான்மீகிமுனிவர் வினவும்போது *ஜ்ஞாதுமேவம்விதம் நரம்* கிறார். விடைகூறும் நாரதமுனிவரும் *தைர் யுக்த: ச்ரேயதாம் நர:* என்கிறார். ணஸம்ஹாரம் தலைக்கட்டி மகுடாபிஷேகம் நடைபெறும் போதும் *அப்யஷிஞ் நரவ்யாக்ரம்* என்கிறார் முனிவர். இராமனுடைய பரத்துவத்தை வெளியிடுவ கென்றே ஒரு வேள்வியை வியாஜமாகக் கொண்டு ஓடிவந்த விச்வாமித்திர முனிவரும் ராஜஸபையில் * அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் * என்று கோஷித்துவிட்டு, ஏகாந்தத்திலே உறங்கும் பிள்ளையை உணர்த்தும் போது *உத்திஷ்ட நரசார்த்தூல!* என்கிறார். இராமன் திருவாக்கில் *ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்* என்று வெளிவந்தது ரஸவத்தரம். இங்கு (மந்யே) என்றதற்கு எண்ணிக்கொண்டிருக்கிறேனென்று பொருளன்று; [மந்யே—பஹுமந்யே.] நாராயணத்வத்திற்காட்டிலும் தசரதாத்மஜனாயிருக்குந் தன்மையையே பஹுமானிக்கிறேனென்றபடி. ஆனதுபற்றியே நம்பெரியோர்கள் இராமன் ஸ்ரீராமன் என்னாதே சக்ரவர்த்தி திருமகன் என்றேவழங்குவர்.

* ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ ஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* என்று வான்மீகி முனிவர்தாம் வாய்மொழிந்தபடி தேவதைகள் ராவணவதத்தைக் கோரியிருந்தார்களாயினும் பெருமாள் ராவணவதத்தை யுத்தேசித்து அவதரித்தவரல்லர். * விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ் ஸ்வயம்* என்று ராவணனையும் அநுக்ரஹிக்கக் கோலின பெருமாளுக்கு ராவணவதம் உள்ளூர அபிமதமாயிருக்க நியாயமில்லை *பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!* என்று ஸங்கல்பமாத்ரத்தாலே அஸுர ராக்ஷஸப்பூண்டுகளை யெல்லாம் அவலீலையாக ஒழிக்கவல்லேனென்ற பெருமாள் நாட்டில் பிறந்து படாதனபடவேண்டுமோ? அப்ரதிம ஸௌந்தர்யலாவண்ய தயா வாத்ஸல்ய ஸௌசீல்யாதி குணங்களைக் காட்டியருளவே அவதரித்தருளினர்.

கீழே யெடுத்துக்காட்டிய * பிசாசாந் தாநவாநித்யாதி சுலோகத்தில் *அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் பச்ய வாநரபுங்கவ!* என்றே, (பச்யந்து ஹரி யூதபா:) என்றே சொல்லியிருக்கலாம். (இச்சந் ஹரிகணேச்வர!) என்று சொல்லி யிருக்கவேகூடாது. இச்சந் ஹந்யாம் என்றது — இச்சாமாத்ரேண ஹந்யாம், ஸங்கல்பமாத்ரேண ஹந்யாம் — என்றபடி யல்லது வேறன்றே. ஸங்கல்பமாத்ரத் தாலே செய்யக்கூடிய சக்தி ஸர்வேச்வரனுக்கல்லது ஸாமான்ய மனிதர்களுக்கு உண்டோ? ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தத்வாதிகளான தன்னுடைய அஸாதாரண குணங்களை மறைத்துக் கொண்டு அவதரித்தவிடத்தில் இப்படி வெளிக்காட்ட லாகாதன்றே?

